உ

சிவமயம்.

---

தேரைய மகாமுனிவர் மாணாக்கராகிய

## யூகிமாமுனிவர்

திருவாய்மலர்ந்தருளிய

# வைத்தியசிந்தாமணி-அ00.



இஃது

கணிதாதிய சகலசாஸ்திரபண்டிதர்

## பி. மார்க்கலிங்க நாயனாரவர்களால்,

பற்பல ஏட்டுப்பிரதிகளைக்கொண்டு

ஆராய்ச்சிசெய்த பிரதிக்கிணங்க,

சில ஆயுள்வேதபண்டிதர்கள் முன்னிலையில் பழுதறவாராய்ந்து,



சுத்த பதிப்பு.] [விலை ரூபா. 0-12-0.

சென்னை-சூளை:

## தி. இராஜு முதலியார் அவர்களால்

...மது

...அச்சுக்கூடத்திற்

...க்கப்பட்டன.

...913.



---

*Revised Edition.*

Ry T.V. Sachidanandaji Sahib
22.[illegible].2[illegible]

4551.

உ

சிவமயம்.

தேரைய[illegible]முனிவர் மாணாக்கராகிய

# யூகிமாமுனிவர்

திருவாய்மலர்ந்தருளிய

# வைத்திய சிந்தாமணி-௮௱.

காப்பு.

ஆனைமுகன் [illegible]ன்பாத [illegible]முருகன்பாதம்
அத்திபுர [illegible]திடைதரித்த வையர்பாதம்
வானை யுமை[illegible]ள்பாதி மாலின்பாதம்
வயிரவன்[illegible]ன் பாதமஹா லக்ஷுமிபாதம்
கானனை[illegible] [illegible]க்கள் [illegible]பாதம்
[illegible]மலத்தில் [illegible]ற்றிருந்த வாணிபாதம்
கோனனை[illegible] [illegible]முனிதன் பாதம்போற்றிக்
கூறுவே [illegible]ருவே தத்தைத்தானே.

## [illegible]பாவது பாயிரம்.

—(*)—

தானான [illegible]லவே [illegible]த் தொப்பாயநின்ற
தாக்கான [illegible]நுவே [illegible]க்கோடைத்தாம்
தேனான சிரு[illegible] [illegible]தலத் [illegible]ம்பவிக்க
தேவனுந் [illegible] வந்திரி சொன்னநீதி
வானான வாகட[illegible] [illegible]தை மேதினிக்குள்
[illegible]நுவியே யுரைத்திடவே வண்மையாக
வேனான வயித்தியசிந்தா மணியிலுள்ள
விவரமெல்லாம் வெளியாகச் சொல்லுவேனே. (க)

சொல்லிடவே தேவிக்குச் சதாசிவன்றான்
சொல்லவே தேவியுநந் திக்குச்சொல்ல
நல்லிடவே [illegible]நன்வந் திரிக்குச் சொல்ல
நயமுடன்[illegible] வந்திரியசு வினிக்குச் சொல்ல
அல்லிடவே யசுவநியாந் தேவர்தாமும்
அகஸ்தியருக் குரைத்திடவே யம்முனீந்திரன்
புல்லிடவே புலஸ்தியருக் குபதேசிக்கப்
புலஸ்தியருந் தேரையற்குப் புகன்றிட்டாரே. (உ)

புகன்றிட்டார் தேரையனு முநிவன்றானும் பூதலத்தில் யூகியா மெனக்குச்சொல்ல, உகன்றிட்ட யூகியென்ற முநியாம் யானே உலகத் தோர் பிழைத்திடவென் றுரைக்கலானேன், வகன்றிட்ட வடமொழி யைப் பிரித்துப்பார்த்து மகத்தான பெரியோரை வணங்கிக்கேட்டுத், துகன்றிட்ட சூத்திரத்தின் சூக்ஷம்பார்த்துத் துறையெல்லாஞ் சோதித் துச் சொல்லுவேனே. (௩)

பாயிரம்முற்றிற்று. ஆக விருத்தம்-௩.

—(*)—

இ ர ண் டா வ து

# த த் து வ வி தி.

சொல்லியதோர் விவரமெல்லாந் தூய்மைகேளாய் சூக்ஷமதாம் பஞ்சபூ தத்தின்கூறும், தெல்லியதோர் தசநாடி சத்ததாது திரிநாடித் தசவாயு சுரபேதங்கள், தல்லியதோர் சன்னியொடு குன்மஞ்சூலை தாக்கான வாதமொடு பித்தஞ்சிலேஷ்மம், மெல்லியதோர் மேகநீ ரிழிவகுஷ்டம் மிக்கான பாண்டொடுகா மாலைகேளே. (க)

கேளுமகோ தரங்கிராணி பவுத்ரமூலம் செடியான வஜீரணங்கள் விஷமுசிவிக்கல், வேளுமே பலபலவி யாதிநாமம் விளங்குகின்ற சாத் தியமு மசாத்தியந்தான், பாளுமே பண்டிதரின் குணமும் ரோகி பக் குவமும் ரசவர்க்க மூலிவர்க்கம், காளுமே கடைச்சரக்கின் குணமுந் தானும் கஷாயமொடு சூரணங்கள் கர்க்கந்தானே. (உ)

கர்க்கமொடு வடகங்கள் ரசாயனங்கள் சடினமாம் லேகியங்கள் கிருதந்தானும், வர்க்கமொடு தைலங்க ளெண்ணெய் நெய்தான் மாத்திரையும் பற்பங்கள் செந்தூரந்தான், பற்பமாம் புடத்தைலந் திராவகங்கள் புகையோடு பொட்டணமும் பூச்சுநஸ்யம், அற்பமா மஞ் சனங்கள் கண்டுஷங்கள் ஆகமாம் விரேசனத்தி னடவுமாமே. (௩)

அடவான வாயுருவே தந்தன்னைத்தான் ஐயருமே யம்மைதனக் கருளிச்செய்ய, நடவான வம்மையுநந் திக்குச்சொல்ல நந்தியுமே சித்தர் களுக் கருளிச்செய்யத், தடவான தன்வந்திரியசு வினியாந்தனக்கு சமரசமா மகத்பமுநி தேரையற்குச்சொல்ல, நிடவான ரிஷிதேவர் சொன்னநூலின் நேர்பெல்லாம் விவரமதாய் நிகழ்த்தினேனே. (ச)

பஞ்சபூதம்.

நிகழ்ந்தசீர்ப் பிரிதிவு மப்புதானும் நேரான தேயுவொடு வாயு மாகும், அசழ்ந்தவா காயத்தோ டைந்துபூதம் அரிதான பிரிதிவு மண்ணுமாகும், தகழ்ந்தவப்பு சலமாகும் நெருப்பாந்தேயு தாக்கான வாயுவது காற்றுமாகும், இசழ்ந்த வாகாயமது சத்தமாகும் எற்றபிரிதிவு பொன் னிறமதாமே. (ரு)

### பஞ்சபூதத்தின் வன்னம்.

ஆமேதா னப்புநிறம் படிகமாகும் அக்கினியி னிறந்தானே சிவப்பதாகும், காமேதான் வாயுநிறங் கறுப்பதாகும் கார்மேகப் புகை நிறமா மாகாயந்தான், தேமேதான் வன்னமுமிப் படியேயாகும் சேர்ந்துநின்ற தெய்வத்தின் றலமே கேளாய், போமேதான் பிரிதிவுக்குத் தேவன்பிரம்மா பெரிய சுவாதிட்டான மிருப்பதாமே. (௬)

### பஞ்சபூதத்திற்குத் தெய்வம்தலம்.

இருப்பானவீ டதுமூலா தாரமாகும் இதழாறு பிரிதிவின் பீஜம் நவ்வாம், மருப்பான மயிர்நரம்பு தசைதோ லென்பு மாசற்ற வப்புவிற்கு விஷ்ணுதெய்வம், செருப்பான மணிபூரம் வீடுமாகும் சிறுபிறை ரூபம்போறப் பத் திதழ்தான்சுற்றி, அருப்பான வப்பினுக்குப் பீசமவ்வாம் அதின்கூறைத் தான்கேளு முதிரஞ்சியே. (௭)

சீயான நீரோடு மூளைமச்சைத் தேயுக்கு ருத்திரன்றன் றெய்வமாகும், மூபான முக்கோண மகத்தாம்வீடு முயற்சியா யீராறு மிதழ் தான்சுற்றில், தேயான சிவ்வதுவுந் தேயுபீசம் சிதையாம விதழுக்குட் சேர்ந்துநிற்கும், ஆயான வாகாசந் துஞ்சல்போகம் அதினுடைய கூறதுதான் பயமுஞ்சோம்பே. (௮)

சோம்பான வாயுவுக்கு மஹேசன்றெய்வம் சோடசமா மிதழோடே விசுத்திவீடு, ஆம்பான வாயுவுக்கு வவ்வுபீசம் அதினுடைய தன்கூறு நடத்தனிற்றல், வாம்பான வாடலோ டிருத்தலோடல் வகையான வறுகோணங் குடியிருப்புத், தேப்பான வாகாய மாக்கினைக்குள்ளே சிதையாம விரண்டிதழோ டிருக்கும்பாரே. (௯)

இருக்கின்ற வாக்கினையின் கூறுகேளாய் ஏற்றகா மக்குரோத லோபமோகம், மருக்கின்ற மதமுமாற் சரியத்தோடு வானுக்குச் சதாசிவமே தெய்வமாகும், பிருக்கின்ற வாகாக பீசம்யவ்வாம் போரானவைம்பூதப் பிரிவுமாகும், தெருக்கின்ற தசநாடிச் செயலையெல்லாம் செப்புகிறேன் றெளிவாகச் சிறந்துகேளே. (௰)

### தசநாடிகளின் குணம்.

சிறந்தஇடை பிங்கலையுஞ் சுழிமுனையினோடு சிறப்பான காந்தாரியத்திச் சிங்குவையாம், பிறந்தஅலம் புருடனொடு குகுதன்றனும் பேரான சங்கினியும் வயிரவன்றன், திறந்தவிவை பத்துந்தான் றசநாடியாகும் திரிமூன்று நாடியினி லொடுங்கும்பாரு, மறந்தஇடை பிங்கலையுஞ் சுழிமுனை யோடுமூன்றும் வாதத்தி லொடுக்கமென வகுக்கலாமே. (௧௧)

வருக்கவிதின் குணங்கண்மந்த மொடுகுளுத்தி மலக்கட்டு வாதத்தின் கூறுமாகும், அருக்கவே காந்தாரி யத்திச்சிங்குவையாம் அலம் புருட னிதுநாலும் பித்தத்திலடங்கு, மிருக்கவே யிதின்குணங்களுஷ்ணந்தாகம் உயர்மோக முழலைவாய் வும்மேனோக்கும், நருக்கவே நாடி பட படத்துடிக்கும் நாசமாம் பயமோடு கோபமாமே. (௧௨)

ஆமேதான் குருதன்சங் கிநியும்வயிரவனும் அரிதான சிலேட்டு மத்தி லடங்கும்பாரு, மாமேதா னிதின்கூறு வாயழற்றான் புரியும் மலர்விழியுங் குழிந்திருக்கு முகமும்வேர்க்கும், தேமேனெஞ்சடைக்குந் திசைகலங்கி யிருக்கும் சிறுகாலுந் தண்ணீர்தா னுழற்றுவிக்கும், பாமேதான் பத்தினிடப் பண்புமாகும் பரிகாரஞ் செயுமவர்க்குப் பரிசிதாமே. (௧௩)

பரிசான விடையினொடு பிங்கலையு பொக்கப் பயின்றதோர் குதத்தினடி மூலம்பற்றிச், சுரிசான பாகங்கண் மாறிமாறிச் சுழிமுனையின் றன்னோடு நெட்டிட்டேறும், திரிசான திருவணைக்கால் போலே மாறிச் சிரசளவு தான்முட்டித் திரும்பமீண்டு, விரிசான மூக்குநடுப் புருவநெற்றி மீண்டுமே திரும்பியந்த மூலம்புக்கும். (௧௪)

புக்குகின்ற காந்தாரி நாபிபற்றிப் பொருநாம்பே ரேழினுக்கும் ரூபமாகிச், சிக்குகின்ற தெசதாய மேலேயோடிச் சிரசளவு நீங்கியே கண்டம்புக்கி, நக்குகின்ற நாவடியிற் சிறந்திருக்கும் நலமான வத்திசிங் குவையிரண்டும், விக்குகின்ற மூலத்தின் மேலேபற்றி மேலேறி யிரண்டுசெவி தன்னைத்தொட்டாமே. (௧௫)

தொட்டேறி நரம்பெல்லாங் கதந்துவீசித் துறையான நயன மிரண்டினிலேநிற்கும், மட்டேறியலம்புருடன் வயிரவன்றான் மாசற்ற வடிமூலந் தன்னைப்பற்றிக், கட்டேறி யிரண்டுகன்னந் தனிலேநிற்கும் கனிவான சங்கிநியுங் குருதன்றானும், நட்டேறி நாபித்தானத்திற்றோன்றி நலமான குதமளவு நடிப்பர்பாரே. (௧௬)

பார்க்கவே சடந்தான்சென் மிக்குமாறு பகர்சுக்ல சுரோணிதத்தி னோடேகூடி, மூர்க்கபவளப்பையின்முத் துதிர்ந்தாற்போல முனையபுக நனிபனிப்போற் சுரோணிதத்திற்சேர்ந்து, தார்க்கச்சுரோணிதந்திரண்டு தன்ரூபமாகித் தமர்வாசற் றனைமூடும் வாயுதானும், வேர்க்கவே வேலியைப்போல் வளைந்துகாக்கும் விந்துவுடன் பிராண வாயு விளக்குமாமே. (௧௭)

விளக்குகின்ற வபானவாயு வெளியினிற்கும் விந்துவுடன் பிராணவாயு வுடல்கலக்கும், களக்குகின்ற வுதானனது கருவளர்க்கும் கருவுக்குள் வியாதியுமூன் றுங்கலக்கும், இளக்குகின்ற வைந்தாநாள் கருப்போலாகும் ஈரைந்தா நாள்தனிலே திரளும்பாரு, முளக்குமூவைந்தாநாள் முட்டைபோலாம் முதற்றிங்கள் கம்பமாய் முனைபோலாமே.()

ஆமேரண் டாந்திங்க டலைமுதுகுதோன்றும் அடுத்தமூன்றுந் திங்க ளரைவிரல்கை காலாம், நாமேநா லாந்திங்கள் பதமூக்குண்டாம் நலத்தவைந் தாந்திங்கள் செவிநாவுகண்ணும், வாமேயா றுந்திங்க ணகங்களாகும் மருவியவே ழாந்திங்கண் மயிரெலும்புநரம்பாம், தாமே தான் சடமோடு சலமலங்கள் தயங்கியவோர் தாதுவொடு மூச்சுண் டாமே. (௧௯)

மூச்சுண்டா மெட்டினிற்று யுண்டசார முனையான கதிர்போல வருவிபாய்ந்து, தோச்சுண்ட கபாலத்தின் வழியேசென்று சுத்தசலம் பிள்ளைக்குத் தொடர்ச்சியாகும், பேச்சுண்டா மொன்பதிலே யறிவு தோன்றிப் பிறப்பித்தோன் றனைநினைந்து தவமேசெய்து, கூச்சுண் டாங் கும்பிட்டே யருள்வாயென்றுங் கொடியபத்தாந் திங்கட்குப் பார்வையாமே. (௨௦)

பார்வையா மபானன்கீழ் நோக்கிவைக்கும் பாலகனும் பார்தனிலே பயின்றபின்பு, ஆர்வையாய் முன்னறிவு மசதியாகி அழுதுகொண்டு வாத்மத்திற் கருவிபாசம், மார்வையா மாயாசத்தி கிரியாசத்தி மயக் கத்தி லறிவழிந்து நல்வினைதீவினையாம், கோர்வையாய் விதியும்வந் துற்பவித்துக் கொடிபடர்ந்த சுனைபோலச் சென்மமாச்சே. (௨௧)

சென்மமாஞ் சரீரந்தொண் ணூற்றாறங்குலமாம் செய்கின்ற வவரவர்கள் கையாலேதான், தன்னமாம் ரசமிரத்த மாங்கிசமுமேதை தசைமச்சை யோடுசுக்லந் தாதேழாகி, உன்னமா முருவென்னுஞ் சரீரமாகி உயர்சட்டை ரசஞ்சேர்ந்து ரோகமாகி, வன்னமாம் வாதபித்த சேட்பமாகி வருகின்ற சடத்தினிட வண்மைகேளே. (௨௨)

வண்மையாம் வாதமது முப்பதாண்டு மட்டுமே வளருகின்ற காலமாகும், பெண்மையாம் பித்தமது முப்பத்துமூன்று பேணியே வளருகின்ற காலமாகும், திண்மையாஞ் சேட்பமது முப்பத்தேழு செயலோடு வளருகின்ற காலமாகும், உண்மையாய்ச் சடமதனுக் கொருநூறாண்டு உகாந்தமாங் கருவிகளி னுறுதிகேளே. (௨௩)

உறுதியாம் பூதாதி யோரைந்தாகும் உயர்கின்ற பொறியைந்து புலனைந்தாகும், கறுதியாங் கன்மவிந் திரியமைந்தும் கடிதான ஞான விந் திரியமைந்தும், திறுதியாந் தீதாய கரணம்நான்கும் திறமான வறிவொன்று தசநாடிபத்தும், மறுதியாம் வாயுவது பத்துமாகும் மகத் தான விஷயமஞ்சு கோசமஞ்சே. (௨௪)

அஞ்சவே யாதார மாறுமாகும் அரியமண் டலமூன்று மலமூன் றாகும், தொஞ்சவே தோஷமூன் றீஷணைதான்மூன்று தோதகமாங் குணமூன்று வினையிரண்டாம், தஞ்சவே ராகமெட் டவத்தையைந்து தயங்கியதோர் கருவிகடான் றொண்ணூற்றாறு, ஒஞ்சவே யொவ் வொன்றாய் விரித்துச்சொல்வேன் உறுதியாம் பூதாதி யுரைக்கக் கேளே. (௨௫)

உரைக்கவே பிரிதிவு மப்புதேயும் உரிமையாம் வாய்வோ டாகாச மாகும், புரைக்கவே பூதந்தா னஞ்சதாச்சு பொறியைந்தின் விவரம தைப்புகலக்கேளாய், திரைக்கவே சுரோத்திரமுந் தொக்குசட்சு சிங்கு வையாக் ராணமிவையாகவைந்தும், துரைக்கவே சுரோத்திரந்தான் செவியுமாகும் தொக்காவ துடம்பென்றே சொல்லலாமே. (உசு)

சொல்லவே சட்சதுதான் கண்ணுமாகும் தூய்தான சிங்குவைநா வாக்ராண மூக்காம், புல்லவே புலனைந்தும் புகலக்கேளு புகழான சத் தமொடு பரிசம்ரூபம், நல்லவே ரசகெந்த மாகவைந்தாம் நலமான சத்த மது கேள்வியாகும், செல்லவே செவியினிடக் கூறதாகும் செய்பரிசஞ் சுகதுக்க மறிதல்காணே. (உஎ)

காணவே தேகத்தின் கூறதாகும் கண்ரூப மாவதுதான் காண்ப தாகும், நாணவே கண்ணினிடக் கூறதாகும் ரசமாவ தறுசுவையை யறி தலாகும், பூணவே நாக்கினிடக் கூறதாகும் புகல்கந்தந் தூர்க்கந்தநற் கந்தமறிதல், தோணவே மூக்கினிடக் கூறதாகும் சுகமான பொறியைந் தின் சூக்ஷந்தானே. (உஅ)

தானான கன்மவிந் திரியமைந்தின் சார்பதனைச் சாற்றிடவே வாக் குபாதம், பானான பாணிபா யுருமுபஸ்தம் பகரைந்தின் பிரிவது தான் வாக்குவாயாம், கானான பாதமது காலேயாகும் கனமான பாணி யது கையுமாகும், ஊனான பாயுருதா னபானமாகும் உபஸ்தமது லிங்க மென வுரைக்கலாமே. (உகூ)

ஆமென்ற கன்மவிந் திரியமைந்தின் அடைவெல்லாஞ் சொன்ன தன்பினப்பாற்கேளாய்,நாமென்ற கன்மேந்திரிய விஷயமைந்தை நவின் றிடவே வசனமொடு கமனமாகுந், தாமென்ற தானமொடு விசர்க்கமா னந்தம் தாக்காக விரைந்து சாற்றினேனுன், பாமென்ற விதனுடைய விவரமெல்லாம் பரிவாக வொவ்வொன்று யுரைக்கின்றேனே. (௩௰)

உரைக்கதுவே வாக்கதுதான் வசனிப்பாகும் உறுதியாம் பாதமது நடத்திவைக்கும், பரைக்கவே பாணிகையால் வழங்குவிக்கும் பாயு ருதான் மலந்தனையே பிரித்துவைக்கும், துரைக்கவே யுபஸ்தமது சுக்ல மூத்திரம் துரிசாக விடுவிக்குஞ் சுப்ரமாகும், நரைக்கவே கன்மேந் திரிய விஷயமைந்தின் நலமதனை நவின்றிடவே நண்பாமென்னே. ()

என்னவே காணமது நாலதாகும் எற்றமனம் புத்தியாங் காரஞ் சித்தம், நன்னவே நாலினிட விரிவைக்கேளாய் நலத்தமன மாவதொ ன்றைத் தானினைக்கும், பொன்னவே புத்திதா னதனைவிசாரிக்கும் போரான வாங்காரங்கொண் டெழுப்பிவைக்கும், தென்னவே சித்த மதைச் செய்துமுடிப்பிக்கும் சிறந்தவந்தக் காணந்தா னுன்குமாச்சே.()

ஆச்சுதறி வொன்றின்விசார ணையைக்கேளா யனைத்தையுமே பார்த்திருந்தங் கஜண்டந்தாணுய்க், கோச்சுதே குருவாய்த்தத் துவங்க ளாகிக்கொடியதீவினையாய் நல்வினையுமாகிப், போச்சுதே பெண்ணுய்ப் பிரபஞ்சமாகிப் புகலரிய நிர்க்குணநின் மலமுமாகித், தீச்சுதே சிவமா கிச் சீவமாகிச் செழுஞ்சுடரின் கதிரொளியாய்ச் சிறந்தவாறே. (௩௩)

வாறுன தத்துவமோர் முப்பதுந்தான் மன்னியதோ ராத்மதத் துவமேயாகும், நாறுன நாடிபத்தின் விவரங்கேளாய் நயந்தவிடை பிங் கலையுஞ் சுழிமுனைகாந்தாரி, ஆறுனவத்திசிங் குவையுமலம்புருட னருங்குகுதன் சங்கினியும் வைரவனீரைந்து, மூறுன விதன்பிரிவை முன்னேசொன்னேன் மூர்க்கமாம் வாயுபத்தின் முறைமைப்பாரே. ()

முறைமையாம்பிராணனோ டபானன் வியானன் மூர்க்கமா முதான னொடு சமானனுகன், திறமையாங் கூர்மனொடு கிருதரன்றன் தேவதத்த னொடுதனஞ் சயனுமாகும், பிறமையா மிதின்பிரிவு பிராணவாயு பெருமூலாதாரத்தின் கட்டோன்றித்தான், உறமையா மசவையெனு மந்திரத்தாலோங்கார முதலெழுத்தை யுன்னித்தானே. (௩௫)

உன்னியே மேலெழுந்துபனி ரண்டங்குலந்தா னுயர்ந்தவெட் டங்குலந்தான் மீளவாங்கி, நன்னிநா லங்குலந்தான் பாழிற்பாயு நல மான குணமெல்லாம் பிராணவாயு, பன்னவே நீலவன்னந் தேவதை தான்சந்திரன் பலபலவாம் பொசிப்பெல்லாஞ் சீரணமதாக்கும், முன் னநா ழிகைக்குமுந்நூற் றறுபதுசுவாச முயர்ந்தநா ளொன்றுக்கு மூச்சைக்கேளே. (௩௬)

நாளொன்றுக் கிருபத்தோ ராயிரத்தறுநூறு நலமான சுவாசந்தா னெழுந்திருக்கும், கோளொன்றிப் பதினுலா யிரத்துநானூறு குவித்த மூலாதாரத் துள்ளொடுங்கும், பாளொன்றி யேழாயிரத் திருநூறுசுவா சம் பாழியினிற் பாய்ந்திடுமென் றறிகப்பின்னை, ஏளொன்றி யிதனையே யுட்சாதித்தா லெப்போதும் பாலராயிருக்கலாமே. (௩௭)

இருக்கவே அபானத்தி னியக்கங்கேளாய் எற்றசுவா திஷ்டானத் துற்பத்தியாகும், மருக்கவே கீழ்நோக்கிமலசலத்தைத்தள்ளும் வாகாக நிறந்தானும் பச்சையாகும், அருக்கவே யாசனத்தைச் சுருக்கிவைக் கும் அன்னசாரத்தை யெல்லாஞ் சேரவைக்கும், திருக்கவே தேவதை யும் வரதராஜன் திறமான வியானனிடச் சிறப்பைக்கேளே. (௩௮)

சிறப்பான வியானனது தோளினின்று திகழெழுபத் திராயிரநா டியிலுஞ்சென்று, தறுப்பான சரவசரந் தனிலேநின்று தானீட்டல் முடக்கல்பண்ணிப் பரிசங்களறியும், அறப்பான வன்ன சாரந்தன்னைத் தான் அங்கங்கே நிறைப்பித்தாக் கையைரக்ஷிக்கும், பறப்பான தது பால வன்னமாகும் பாரதனிற்றெய்வந்தா னேமனுமே. (௩௯)

ஏமனு முதானனிட வேற்றங்கேளாய் எழிலான வுதரவக் கினி யெழும்பிப், பூமனு மன்னசா ரந்தனைத்தான் பொருந்தவே சமீபித்து நிறுத்திவைக்கும், காமனு யெடுப்பித்துங் கலக்கிவைத்தும் கலக்கியே வருந்திவைக்கும் வளப்பமாகும், வீமனு மின்னினிட வன்னமாகும் விளங்கியதோ ரக்கினிதான் றெய்வமாமே. (சய)

ஆமென்ற சமானனிட வாண்மைகேளாய் அடிநாபி பாதாங்கஞ் சமன்கொண்டேகி, வாமென்ற வாயுகளை மிஞ்சொட்டாமல் மடக்கி யே சமன்செய்து மருவப்பண்ணும், தாமென்ற வறுசுவையைத் தண் ணீரன்னம் சமன்செய்து சரீரமெல்லாஞ் சாரப்பண்ணும், வாமென்ற வன்னமது புட்பராகம் மகத்தான தெய்வ மாதித்தனுமே. (சக)

தெய்வமா நாகனிட சிறப்பைக் கேளாய் செயலான சகலகலை யாக் கிவைத்து, பைவமாய்ப் பாடிவைக்கும் கண்ணைவிழிப்பிக்கும் பாங்கா கச்சிமிழிக்கும் ரோமமசைவிக்கும், பெய்வமாம் பொன்னினிட வன்ன மாரும் பெரிதான தெய்வந்தா னனந்தனுமும், கொய்வமாங் கூர்மனிடக் குணத்தைக்கேளாய் கொடியமனந் தனினின்று நிமைக்கொட்டும்மே.()

நிமைக்கொட்டுங் கொட்டாவி தானுங்கொள்ளும் நேராக வாய் மூடும் பெனுண்டாக்கும், சுமைக்கொட்டுங் கண்விழிக்கு மூடப்பண் ணும் காஷியெல்லாங் காண்பிக்கும் விழிநீரோடும், இமைக்கொட்டும் வன்னமது வெளுப்பதாகும் மேலான தெய்வந்தான் விஷ்ணுவாகும், கமைக்கொட்டுங் கிருதரா தியின்குணந்தான் கசிநாவு நாசிதனிற் கசிவுண்டாமே. (சந)

கசிவுண்டாங் கடும்பசியின் கன்மஞ்செல்லும் கண்ணியே யிருத்த லொடு போதலாகும், துசிவுண்டாய் தும்மலோ டிருமலுண்டாம் சுயமான வன்னமது கறுப்பதாகும், தெசிவுண்டாந் தெய்வமது சிவன்றனுகும் திரோதயையிற் கூறுனதிறமுமாகும், குசிவுண்டாந் தேவதத்தன் குணத்தைக் கேளாய் குடிலமாய்ச் சோம்பிமுறித்திடுத லாமே. (சச)

முறித்திடுதன் முழிக்கும்போ துயற்சியாகி முகுளிதமாய்க் கண்ணிணையே யோடியுலாவிவைத்துத், தரித்திடுதல் சண்டைகொளற் றுக்கல்பேசல் சண்டாளக் கோபத்தை யுண்டுபண்ணல், குறித்திடுதல் குதங்குய்யத் தானத்தன்றிக் கூர்ந்ததெய்வந் தேவேந்திரன் படிக வன்னம், தறித்திடுதற் றனஞ்சயனைச் சாற்றக்கேளாய் சாங்கமாய் மூக்கினின்றுந் தடிக்குந்தானே. (சரு)

தடித்துமே உடம்பெல்லாம் வீங்கப்பண்ணும் தந்திரமாய்க் கன் னத்திற் சமுத்திரம்போற், றிடித்துமே சுந்தரமாய்க் கோஷமாகித் திரண்டுமே துஞ்சியகா லந்தனிற்றுன், வடித்துமே வாயுவெல்லாம் போனபின்பு வளமான தலைவெடிக்கு மூன்றுநாளில், அடித்துமே தலைவெடித்தா லப்பாற்போகும் அதின்வன்ன நீலவன்ன மறிந்து கொள்ளே. (சசு)

அறிந்ததோர் தெய்வமது தன்வந்திரியாகும் ஆகவிந்த வீரைந்து மாதியாம்வாயு, வெறிந்ததோர் விஷயமைந்தின் விவரங்கேளாய் மீறியதோ ரமாவசையம் பருவசையமாகும், தறிந்ததோர் சலவசைய மலவசையத்தோடுதாக்கான சுக்கிலமாம் வசையாமைந்தும், எறிந்ததோ ரமாவசைய மன்னத்தண்ணீர் இருக்குமிட மென்றுதா னியம்பிடீரே. (சஎ)

இயம்பிடவே பருவசைய மாவதுதான்விளம்பில் இயன்றவன்னந் தண்ணீர்தா னேகமாராய்ந்து, புயம்பிடவே பிரியுமிட மமாவசையம்புகலில் புசித்ததெல்லாமலமாகிப் போக்கிவைக்குமிடமாம், தயம்பிடவே சலவசையஞ் சாப்பிட்டநீர்தான் தாங்கியே யிருக்குமிடஞ் சலப்பையாகும், சுயம்பிடவே சுக்கிலமா மசையஞ்சொல்லில் சுகமான சுக்கிலப்பை யென்றுசொல்லே. (சஅ)

சொல்லான விஷயமைந்தின் றெருகுப்புச் சொன்னேன் சூட்சமாங் கோசமைந்தின் சுளுக்குகேளாய், அல்லான வன்னமய கோசத்தோடும் அரிதான பிராணமய கோசமாகும், மல்லான மனோமயமாம் விஞ்ஞானமயமாம் மகத்தான வானந்த மயமுமைந்து, மெல்லான விதின் விரிவு விளம்பக்கேளாய் மெய்வாய்கண் மூக்கோடு செவியுமாமே. ()

ஆமென்ற வைம்பொறியின் பிருதிவியின்கூறுல் அன்னமய கோசத்தி லப்புவந்தணைந்தால், ஊமென்ற வூனுண்டாம் பிராணமயகோசம் உத்தியிதிற் றேயுவந்தால் புத்தியுண்டாம், மாமென்ற மனோமயமாங் கோசமாகும் வாயுவிதில் வந்தடைந்தால் விகாரமுண்டாம், நாமென்றவிஞ்ஞானமய கோசமெனப்போம் நலத்தவாதம் வந்தால் சுகமுண்டாமே. (ருo)

வந்தா லானந்தமய கோசமெனப் பேராம் மகததான கோசமைந்தி லெடுத்தவுடலதுதான், குந்தான கோசமைந்தின் குணத்தைச் சொன்னேன் குறிப்பான வாதார மாறுங்கேளாய், முந்தானமூ லாதாரஞ் சுவாதிஷ்டானம் முதிர்ந்தமணி பூரகமுமநாகதமும் விசுத்தி, அந்தானவாக்கினேயு மாதாரமாகும் அடுக்கான வாதாரத் துண்மை கேளே. (ருக)

கேளேமூ லாதாரங் குதங்குய்யத்துக்கும் கெடியாக நடுவிருக்குமபானத்தின்மேல், வேளேவீ ணதண்டின் கீழிருக்கும் மிக்கநடுவேயோரங் குலப்பிரமாணம், மூளேமுக் கோணநா லிதழ்க்கமலமாகி முனிந்தநா லிதழ்தனிற் க்ஷாத்தை யுடைத்தாய், வாளேமுக்கோணநடுமந்திரம் ரீங்காரம் வல்லபையாஞ் சத்திவலப் பக்கமாமே. (ருஉ)

பக்கமா மந்திரமும் ரீங்காரமாகும் பகரான தெய்வம்விக்கினேசுரன்றுன், வக்கமாமூலத்தில் வங்கென்றுநிறுத்தி வாசியைநீ மறவாமன் மாட்டியூதி, ஒக்கமா மூலத்திங்கி ழுடியிற்றுனும் ஓங்காரக் கமலமதி லடியிற்கட்டி, இக்கமா மிருவரையுந் தெரிசித்தக்கால் இகபரமும் வெளியாகி யேறலாமே. (ருங)

ஏறவே பளிச்சென்று மூலத்திதான் இதற்குமே லிரண்டாமங் குலத்தின்மேலே, கூறவே நால்வட்ட மாறிதழ்த்தான் குறித்தசுவா திஷ்டான மின்னொளித்தான், ஆறவேயாறுபட்சர முடைத்தாய் அதற்குள்ளே பிருதுவிதான் குடியிருப்பாம், வேறவே வேதந்தா னிருக்கோடெல்லாம் விளங்கியதோ ரக்ஷாமு நகாரமாமே. (ருச)

நகாரமா மெழுத்ததுவும் பிரமனுகும் நவ்வான பீசமது பிரு துவிக்காகும், உகாரமா மந்திரத்தை யுன்னிக்கொண்டு உயர்வாய்வைக் கும்பிக்கி லறிவுதோன்றும், சிகாரமா முப்புரிநூற் சிரசுநாலு சிறந்த சரஸ்வதியு மங்கே தெளிவாய்க் காணும், பகாரமாய்த் தெரிசித்துப் பழக்கம்பண்ணப் பாருலக மயக்கமெல்லாம் பண்பதாமே. (ருரு)

பன்மையா மாறுமங் குலத்தின்மேலே பதிந்தபிறை போலமணி பூரகந்தான், தொன்மையாஞ் சுற்றிலும்பத் திதழதாகிச் சுயம்பான வக்ஷரமும் பத்துந்தானுய், அன்மையா மப்புவினுக்கிடமதாகி அதற் குள்ளே தெய்வந்தான் விஷ்ணுவாகித், தன்மையாம் பக்கத்திற் சத்தி லட்சுமியாம் தயங்காத வக்ஷரந்தான் மகாரமாமே. (ருசு)

மகாரமா மக்ஷரந்தான் விஷ்ணுவாகும் மகத்தான மவ்வதுவும் பீசமாகும், விகாரமாம் வேதமது யசுருவாகும் மெய்ந்நிறைந்த கௌத் துவமாபரணமாகும், நிகாரமாம் லட்சுமிதான் பாகமாகி நேர்மையாய் வாசிலயத்தான் மங்கென்னநிறுத்தி, உகாரமா யூதினு லுலகவாழ்க்கை ஒருநொடியில் வெளியாகு மூணிப்பாரே. (ருஎ)

ஊணியிதன் மேலிருநா லங்குலந்தான் உத்தமமா மநாகதத் தின் வீடுமாகும், தோணியே திரிகோணம் பன்னிரண்டிதழ்த்தான் சுற்றிலுமேபன்னிரண் டக்ஷரமுடைத்தாய், சேணியே தேயுவுக்கங் கிருப்புமாகிச் சிகாரமா மெழுத்தாகிச் சிறப்புமாகிப், பூணியே பூதபீசம் ரவ்வுமாகிப் புகழான ருத்திரனும் புரிந்தார்பாரே. (ருஅ)

புரிந்திருந்தார் சிகாரத்தில் ருத்ரன்ருத்திரியும் புகழாக வாசிவைத் துச் சிங்கென்றாது, கரிந்திருந்த காயமுமோ வாலையாகும் சுனிசாம வேதத்தின் கருத்துந்தோன்றும், பரிந்திருந்த விதற்குமேற் பனி ரண்டங்குலந்தான் பார்வையாய் மேலேறி விசுத்திவீடு, அரிந்தி ருந்த வறுகோண சோடசமா மிதழ்தான் அதிலேதா னீரெட் டக்ஷரமுமாமே. (ருகூ)

ஆமெனவே வகாரந்தா னறுகோணநடுவே அமர்ந்திருந்தார் மஹே சுரன் மஹேஸ்வரியுமாக, வேமெனவே யதர்வண வேதத்தோடொக்க மிக்கான வாயுவது மிதழுக்குள்ளே, போமெனவே பீசந்தான் யவ்வு மாகும் புகழாகக் கும்பகஞ்செய் தூதியூதி, வாமெனவே வங்கெனவு மிறுத்திப்பார்க்க வயதெல்லா மொருநாளாய் யனதிற்காணே. (சூo)

காணவிதன் மேலீரெட் டங்குலந்தான் சண்டமாருதம்புருவ மளவாயாகி, ஊணவே யிரண்டிதழா யோங்கிநிற்கும் உற்றுநின்ற வட்சரமு மிரண்டுமாகும், ஆணவே நடுவுக்குள் யகாரநிற்கும் ஆக்கி னையின் வீடாகு மாகாசமப்பும், பூணவே பூதபீசம் யவ்வுமாகும் புக ழான மாணிக்கப் பிரபையவ்வே. (சுக)

யவ்வுக்குட் சதாசிவமுஞ் சத்திநிற்கும் யங்கென்று குப்பித்தா லநேகசித்தி, மவ்வுபரமானந்த மருவிநின்று மகிழ்ச்சியாங் கருவி களி னிடமதாகி, அவ்வுட லேம்புலன்றனையு மறியப்பண்ணி அறி வோடு நினைவுதனின் மயக்கத்தாட்டி, உவ்வுமுள்ள படிநடத்திக் காண் பன கேட்பனவாயுகந்து குருவெழுந்தருளி வியார்த்திப்பாரே. (சுஉ)

பார்க்கவே யாதார மாறுமாச்சு பரிந்திட்ட தத்துவங்சண் முப் பத்தாறும், சேர்க்கவே சிவதத்வ மாகுங்கண்டீர் சிறந்திருந்த மண் டலங்கண் மூன்றுங்கேளாய், ஆர்க்கவே யக்கினிமண் டலத்திேனாடு ஆதித்த மண்டலமுஞ் சந்திர மண்டலமும், தோர்க்கவே யிதன்சூக்ஷி சொல்லக்கேளாய் சுருதியா மூலமென்ற தொடர்ச்சிதானே. (சுங)

தொடர்ச்சியாஞ் சுவாதிஷ்டா னத்தின்கீழே சுகமாக நடுமைய மணி மண்டலந்தான், முடர்ச்சியாம் முச்சுடராய் மூலமட்டும்பாவி முனைந்தசுவா திஷ்டான மட்டுநிற்கும், மடர்ச்சியா மணிபூர மநா கதத்தினடுவே வளையம்போற் சூரியமண் டலந்தானிற்கும், படர்ச் சியா மணிபூர மனாகதத்திற் படர்ந்தேறுஞ் சூரியமண் டலந்தான் பாரே. (சுச)

பாரென்றாற் சும்மாதான் பார்க்கப்போமோ பரந்தோடும் வாசி யைநீ மாட்டிப்பாரு, வேரென்றால் விசுத்திமே லாக்கினையின் கீழே விளங்கியெழுஞ் சந்திரமண் டலந்தான்பாரு, தூரென்றாற் றுவாதசாந் தத்தின்மட்டும் சுடரொளியாய்ப் பிரகாசமாகிநிற்கும், மூரென்றான் மண்டலங்கண் மூன்றுமாச்சு மூர்க்கமா மலமூன்றின் முடிவுகேளே. ()

முடிவான வாணவமு மாயைகாமியம் முயற்சியா யிதின்பிரிவான் முடியுமாறு, திடியான செய்பினிறரூன் களிம்புபோலும் சிறுநெல்வி னுமிபோலு மாத்துமாவை, முடிவான மேலெழவொட் டாமற்காத்து முடிவித்துத் தன்னதென்றே காத்திருக்கும், மடிவான மாய்கையதா மாணவத்தைக்கொண்டே வருகிறது தெரியாமன் மடிக்குந்தானே.()

மடிக்கின்ற காமியங்கண் டத்துக்கெல்லாம் மகிழ்ந்திடுதன் மா யைமுற்று வந்துநிற்றல், துடிக்கின்ற மலமூன்றின் செயலுமாச்சு தோஷமூன்றுவனவாஞ் சுளுவுகேளாய், நடிக்கின்ற வாதபித்த சேட்ப மூன்று நலமான விதின்பிரிவு நாட்டக்கேளாய், வடிக்கின்ற வாதமது நிலைகலங்கி மத்தியமா மக்கினியு மார்க்கமாமே. (சுஎ)

மார்க்கமாம் பித்தந்தா னக்கினியினிலையை மசக்கிவைத்து மாய் கையுடன் வருத்திவைக்கும், தூர்க்கந்தா ன் சேட்பமது சலமிகுதியாக் கித் துவாரங்கடோறு மிடைவிடாம னிற்கும், மூர்க்கந்தான் ரோஷ மிது மூன்றுமாச்சு மூண்டதோ ரீஷணைகள் மூன்றைக்கேளு, நோர்க் கந்தா னர்த்தவிஷணையினோடு லோகவிஷணகாம விஷணைமூன் றுச்சே. (சூஅ)

ஆச்சென்ற மூன்றையுந்தா னறியக்கேளாய் அதிகமா மர்த்த விஷணை குணந்தான், வேச்சென்ற வர்த்தமதின் மேலாசைப்படுதல் விளங்கியதோர் லோகவிஷணை யதனைக்கேளாய், காச்சென்ற காணி யுட னுறவுந்தேடிக் காரியங்க ளதின்மேலே யாசையாகும், ஆச்சென்ற காமவிஷணைகாமியத்தைத்தேடி யாசையதுபடுத லிஷணைமூன்றுமே.()

மூன்றான பின்புதான் குணந்தான்மூன்று மொழியவே ராசததா மததசாத்விகம், வேன்றான விதின்பிரிவு விளம்பக்கேளாய் வெகுளிபல பேசாதிருத்தல் வேண்டுவது கொடுத்தல், தான்றான தன்னைச்சார்ந் தாரைக்காத்தல் தகமையுட னுயிர்களைத்தம் முயிர்போலெண்ணல், பான்றான பகைவரைவென் றிடுதனீங்கல் பலகலைக ளறிதல்பயில் பண்புண்டாமே. (எய)

உண்டுலகினுக் கங்கோருறுதி யெனவாழ்தல் உண்மையாய் நலந்தெரிதல்புகழ்பூண்டல், தண்டுதா ளாண்மையொடுமேன்பாடான சாற்றியதோர் குணமெல்லாம் ராசதத்துக்காகும், மிண்டுதா மத குணமு மேதோவென்னில் மிகுதியாய் வஞ்சனையே செய்தலாகும், வண்டுவழிபாடொழிதல் வாதுபோராடல் வணக்கமில்லா வெகுளியே விளம்பலாமே. (எக)

விளம்பவே செய்ந்நன்றிமறுத்தல்விந்தை மிகப்பேசல் விரைந்து முரை மிடுக்குப்பேசல், முளம்பலே முன்னுரைத்தல் பழியைக் கூறல் முகத்துடனே பேசல்பகை யுடனேவாழ்தல், புளம்பலேபொய் கொலைகள் களவுகாமம் பொல்லாங்கு யாவையுமே புகன்றுபேசல், களம்பலே காமத்தின் குரோதமிக்கக் கடிந்ததா மதகுணத்தின் காட்சியாமே. (எஉ)

காட்சியாஞ் சாத்துவிகந்தா னேதோவென்னில் கமழ்கடிவு சாந்த கமும்வாய்மைதயையொடுக்கம், தாட்சியாந் தண்ணளிவுக் குகந்திடுநற் சீலந் தயவானகுணமன்பு பெருமைபுகழ்பூண்டல், மாட்சியா மறையி னிறை மண்மயக்கல் பூண்டல் வறிஞோரை வாழ்வித்த னல்லோர்க் கீதல், நாட்சியா யிறைவனடிப்பணிதலோடு நல்லோர்க்குப் பொரு ளீதலறந் தேடல்தானே. (எங)

அறந்தேடல் உறவின்முறை சுற்றத்தாரை அகதி பரதேசியருக் கன்னமீதல், திறந்தேடல் தெய்வமறை யோரைக்காணல் தேவதை கட் குபசாரச் சிந்தைசெய்தல், புறந்தேடல் புண்ணியங்கள் தேட லின்பப் பூசுராக்காகுதிகள் பலிகொடுத்தல், தறந்தேடல் சாத்துவி கத்தின் குணமீதென்று சாற்றினேங் குணமூன்றின்றன்மைதானே. ()

தன்மையாய் வினையதனைச் சாற்றக்கேளாய் சார்ந்ததோர் நல்வினை தீவினையிரண்டாம், பன்மையாம் வினையிரண்டின் பயனேதென்னில் பரவியநல் வினையதுதான் புண்யமாகும், திண்மையாந் தீவினைதான் பாவமாகும் சேர்ந்தவினை யிரண்டாலே நரகசுவர்க்கம், புண்ணியஞ் செய் தவர்க்குநல்ல சுவர்க்கமாகும் பொல்லாத பாவிகட்கு நரக மாமே. (எரு)

ஆமேதா னிராகமெட்டை யறையக்கேளாய் அதிகமாக் குரோ தமொடு லோபமோகம், வாமேதான் மதமாற்சரிய மிடும்பைவேகம் வகையாக விதன்குணத்தை வழுத்தக்கேளாய், காமேதான்காமமென லாசையாகும் கடிதான குரோதமெனல் பிணக்கதாகும், போமே தான் லோபமெனல் பிடிப்பாடாகும் பேர்பெரிய மோகமெனல் பிரிய மாமே. (எசு)

பிரியமா மதமதுதான் கெருவமாகும் பெரிதான மாற்சரிய மிடும் பாங்காரம், உரியமாமிடும்பை யுதாசனைசளாகும் உறவேகமாவதுதான் கடூரமாகும், நரியமாமிராகத்தின்தன்மைசொன்னேன் நாசமா மவத்தை யைந்தி னுட்டங்கேளாய், அரியமாஞ்சிற்றவத்தை யிதனின்போக்கு ஆக்கிரசாக் கிரமுஞ்சொற் பனமுமாமே. (எஎ)

சொற்பனஞ் சுழுத்திதுரி யந்துரியாதீதம் சொல்லுமிவை தா னவத்தை யைந்தாகச் சொல்வர், நிற்பனமாஞ் சாக்கிரந்தா னெற்றி நேரே நிறைந்திருக்குங் கருவியிட நியமமாகச், கற்பனமாஞ் சொற்ப னமுங் கண்டத்தானங் கடந்திருக்குங் கருவியுடன் காயத்தோடே, இற்பனமாஞ் சுழுத்திதா னிதயத்துள்ளே இயங்கிநிற்குங் கருவியுட் னியம்பிடாயே. (எஅ)

இயம்பிடவே துரியநா பிக்கமலந்தன்னில் ஏற்றமாங் கருவியுட னிணங்கிநிற்கும், முயங்குதுரி யாதீத மூலாதார மூர்க்கமாங் கருவியுட னமர்ந்திருக்குங், கயம்பிடவே கருவிகடான் ரெண்ணூற்ருறும் காரியமாய் தேகத்தைக் காத்துநிற்கும், வியங்கியிந்த முப்பதுதத் துவ முந்தானே வேதமாம் வித்தியாதத் துவமாமென்னே (எகூ)

தத்துவமாங் கருவிகடான் ரெண்ணூற்ருறும் சடத்திலெங்கு மூடாடித் தகமையாகும், உத்துவமா யுடலதனி னுண்மைகேளாய் உதிரவங்கமென்னும்புவியி னுற்பவித்து, அத்துவமா மப்போதுள் ளித ழாய்மலர்ந்து அத்திமுகத் துக்கருவிட் டாகவுருத்தரித்து, சத்துவ மா மவ்வுருவா யவ்வமயத்தின்கண் தாக்கான அவ்வென்னு மட் சாந்தானுமே. (அ0)

அவ்வென்னு மட்சரத்தி னடிதோன்றும் அந்நாடி தனினின்று தத்வந்தான் தோன்றும், எவ்வென்னு மெலும்புதசை யின்புடைய நரம்பும் ஈரெட்டுபழுவோ டிரண்டு கொங்கையுமா, முவ்வென்னு முட் டுக்கா லெட்டெட்டு வளையா மூட்டியமைத் தங்ஙனே யோருருவமாக்கி, சுவ்வென்னுமிடையோடு பிங்கலையுஞ்சேர்த்துச் சுழிமுனையென் ரெரு துளையும் வழியதாமே. (அக)

வழியதுவாய் வாசல்வள மெனக்கொண்டங்கே வளமாக வுடனுண்ட வன்மையெல்லாம், கழியதுவாய்க் காளவாய்க் கிடுகாந்தலாகிக் ககனம்போ லெரிந்துமே மடியப்பாய்ந்து, சுழியதுவாய்த் தூராத குழிபதாகத் துற்பாவை நிணமுமாய்ப் பற்றியயீரலுமாய்ப், பொழியதுவாய்க் காளிதமாய்ப் பித்துமாகிப் பொருமலுமாய்ச் செறுமலுமாய்க் கிருமியாமே. (அ௨)

கிருமியாய் வகைதோறும் வாயுவைத்தா னிறுத்திக் கிரணமுந்நூற் றறுபதுமோங் குடனிரங்களாகி, அருமியாய் விருத்தியமர்ந்த குடலதுதான் அமர்ந்தமுப்பத் திரண்டுமுழங் குடலுமாகும், ஒருமியாயொப்பமுட ஞென்பதுவாய் மடித்து உற்றசுக்லமல சலந்தான்மூன்றுமாகி, வறுமியாய் வச்சிரத்தோல் மேலேபோர்த்து வழிபலவாய் மொழிமொழியாய் சந்துமாச்சே. (அ௩)

சந்துமூன் றரைகோடி யுரோமத்துவாரம் தாக்கான நாலெட்டுவுறுப்புமாகி, இந்துவி நவதுவிரலு மைநான்குமுகிரு எட்டுச்சாணீளமுமா யேகமாகி, நந்துநாற் சாண்பெருமை மெய்வாய்கண்மூக்கு நலத்தசெவி யுடல்பிருது வியின்கூறுகிப், பந்துரெண்டு காலுமா யிரண்டு கையாய்ப் பதினாறு கவறுடைய வீணைதண்டே. (அச)

தண்டோடே யாறுதெரு வேழுகடலாகும் தாக்கான வெட்டுத்தூண் முப்பதுவாஞ்சந்து, எண்டோடே யெழுபதுபே ரெலும்புதானும் எற்றமர மொழிமுச்சா ணெலும்புமாகும், முண்டோடே யெலும்பு மூச்சாண் சதையுமாகும் முக்கியமா மெண்பலமீ ரலுமாமென்ப, நண்டோடே நாஞழி யுதிரமாகும் நற்பத்து வாசலையு முடைத்ததாமே.()

உடைத்திரட்சி யுதிரமாங் கிசமேதையத்தி உயர்ந்தசுக் கிலமச்சைச் சத்ததாது, படைத்தபல முப்பத்திரண்டுமாகும் பண்பான பழுவெலும்பு பதினறென்க, முடைத்தமுது குத்தண்டு பன்னிரண்டு கோர்வை முதற்சூழ்ந்த தாளசைவ தைந்துமாகும், நடைத்தநாம்பெலும்பொன்றி யேழரையுங்கூட்டி நலம்படவே சதைமேவி நாடிற்றன்றே. (அரு)

நாட்டியே பிடரியினிற் கோத்தநாடி நரம்புபின்ன லோரேழாயிரமாமென்க, ஆட்டியே யசைவுடலங் தான்றுவக்கில் ஆருயிர்தா னூற்பத்தாறதாகும், தூட்டியேதொழுத்தையிரண் டாயிரத்துத் தொடர்ந்து விண் வளருமெய்யா யிரமாமென்க, பாட்டியே கோணங்கள் பதினூருகும் பகர்சேட்டு மத்தின்னக் குண்டலத்தினனலே. (அஎ)

அனலெழும்பி வாயுபத்து நாபியினிற்சுருக்கி அல்லலுஃறும் வாசலொன்ப திற்கதவொன் றிட்டு, இனலெழும்பி யீசர்வா சலைத்திறந்து இடையிஞெடு பிங்கலைநா தனையேநோக்கி, நினலெழுப்பி யன்பனெனு நெய்சொரிந்து நேராக வமிர்தமெனுந் திரியையிட்டு, வனலெழுப்பி மணிவிளக்கை நிறையவேற்றி வாசியைநீ வரவழைத்து வைத்துக்கொள்ளே. (அஅ)

கொள்ளவே யைம்புலனை நாசமாக்கிக் கோசமா மட்சரத்தை யள வறிந்து, அள்ளவே ஐம்பத்தோ ரட்சரத்தின் ஆதார நிராதாரஞ் சோ தித்தேறி, உள்ளவே மண்டலத்தின் வலமாய்வந்து உதிரமண் டல மொக்கப் பால்சொரிந்து, கள்ளவேகா மம்வெகுளி மயக்கறுத்துக் கடும் புரவி குசைதாங்கிக் கருதிப்பாரே. (அகூ)

தாங்கியே யிருமூன்று தெருவுஞ்சுற்றித் தயங்காத வசுவங்க டெருவும்ரெண்டு, ஏங்கியே யேழாயிரத் திருநூறுவாயு இரவுபக லளவாக விசுபமில்லாமல், ஓங்கியோங்காரமென மூலநாடி உறுதி கொண் டெழுபத்தீ ராயிரமானடி, நாங்கியே நரம்போடு நாடியிவைக் கெல்லா நலத்தவுரப்படுநாடி யொன்றுண்டா கும்மே. (கூ0)

ஒன்றென்னு மிதிலாதித் தன்போனடி ஒருபத்தும் பரித்துத் தான் பறந்தவாறும், நன்றென்னுங் காலொடுகை நடுத்தாமரையில் நாடிநுழைந் துயிராகி மெய்யிலோடிப், பிண்டுநரம் பாலெலும்பைப் பிணைப்பிசையவைத்துப் பெருநாடி புருமத்தை யறிந்தடங்கிநிற்கும், அண்டெனவேநாடிபத்துஞ் செறிந்தடங்கிநிற்கும் அதிமூலமுந்திமுத லாகியுறுமாமே. (கூக)

உறுமுடிக்குக் கீழ்மேலும் பதிந்துநிற்கும் உகவையாந் தலைத னிலே யீசுரன்றான், செறிவினைசெய் வினைப்பயன்முன் னும்மறிந்து திகழிந்திர மான்றலைபோ லிமைப்பானுள்ளே, தறுவினைசத் தப்பரிச ரூபரசகந்தம் தானம்வகை தொறுமுத்தி கொடுத்துநல்கி, துறுவினை செய் தகைமையறுத் துள்ளேநோக்கித் தொண்ணூற் றுருங்கருவி தத் துவமாமே. (கூஉ)

ஆமெனுநாடிநரம்பெழுபத் தீராயிரமாம் அதிலூறும் நாடிவிஷ்ணு நாடியாகும், ஏமருத்ரானடியிடை யோடுபிங்கலையும் எழினு முதுகெ லும்பு பதினறு பழுவுமாகும், மூமெனுமுப் பத்தொருவர்க் குழி யுமாகி முதிர்ந்துநின் றவையுழக்கா முதிரமாகும், நாமெனுநாழி வாத முந்நாழி பித்தம்நானழி சேட்டுமமு நலத்ததாமே. (கூங)

நலத்தமூன் றரைகோடி யுரோமத்துவாரம் நல்லிருபத் தெண் கோடிமலத்துவாரம், முலத்தமுப்பத் தெண்கோடி சலத்துவார முயன் றிரத்தமைம்பலமாங்கிசநூறுபலமாம், கொலத்தகெந்த மெண்பலமாம் ரோமநூற்றெட்டு கோடியாம் மேதையிரு நூறுபலமாகும், பெலத்த தோல் துந்நூறு பலமாகும் போானநிணந் தானுமாமே. (கூச)

ஆமென்ற குடன்முந்நூற் றேழுபலமாகும் அதிகமாம் வழுக் கையது காற்பலமதாகும், தேமென்ற சியுரித்தான் கண்கள்ரெண்டும் சிறக்கவே நாலுகழஞ் சாகுங்கண்டாய், நாமென்ற நாக்குநாற் கழஞ் சதாகும் நற்கந்தமூக்குத்தா னதுமுக்கழஞ்சு, காமென்ற கன்னஞ் சேர் நாற்கழஞ்சதாகும் கடிந்தெலும்பெலாநூற்றோர்பத் தெண்பலமா மென்னே. (கூரு)

என்னவே யிறைச்சிபல நூற்றறுபத் தைந்தாம் ஏற்றமுப் பல ந்தானு மூளையாகும், பன்னுதாமரைமொட்டு ஐங்கழஞ்சதாகும் பார்க் கவே சலப்பையுமோர் முழந்தாணீளம், கன்னவேகருவிகடா னது தொண்ணூற்ருறும் கணக்காக வுடற்குறிப்பு காயாந்தானுகும், தன் னவே தத்துவங்கடா னெல்லாஞ் சொன்னேன் சார்ந்தநாடியின்றன்மை சாற்றுவேனே. (கூசு)

இரண்டாவது தத்துவவிதிமுற்றிற்று. ஆகவிருத்தம்-கூகூ.

—(*)—

மூன்ருவது,

# நா டி நி தா ன ம்.

சாற்றுகிறே ஞடியிடப் பூர்வமெல்லாம் தாக்கான நாக்குமல மூத்திரமாகும், காற்றுகிறேன் கண்ணேடு பேச்சுதானும் காரியமா யெட்டுவகைப் பரிட்சைதன்னில், ஆற்றுகிறே னவற்றிலுள்ள குணங் களெல்லா மசாத்திய சாத்தியமறிந் தவையும்பார்த்து, நாற்றுகிறே ஞடியிடநண்பையெல்லாம் நற்குணமுந் துர்க்குணமு நயந்துபாரே. (க)

நயந்துநீ நாடிதான் பார்க்குமாறு நலமான புருவமுச்சி கண்ட நெஞ்சு, கயந்துகையிற் காலடியின் முழங்கைதன்னிற் கணுக்காலின் முழங்கால்கைக் குழியிலாகும், தயந்துதா னங்கடா பரிக்குநாடி சகல நரம் பெழுபத்திரா யிரமுஞ்சார்ந்து, தியந்துநிற்கு மிவ்விடங்க ஞடி பார்க்கில் தேகத்தின் பரிட்சையெல்லா மியம்பிடாயே. (உ)

நாடிபார்க்கும் விதம்.

இயங்கிடவே அங்குஷ்ட விரலுக்கப்பால் ஏற்றமாய் நெற்கிம் பிடைவிட் டிப்பால்பார்க்கில், முயம்பிடவே மூவிரலா ஞடிதொட்டு மும்மூர்த்தி நாடியினின் முழக்கம்பாரு, பியம்பிடவே பிரமமது வாத நாடி பேரான பித்தந்தான் விஷ்ணுநாடி, தியம்பிடவே சிலேட்டுமமது ருத்ரநாடி செயலெல்லாஞ் செப்பிநீ தெளிந்திடாயே. (ந)

நாடிபார்க்குங் காலம்.

தெளிந்திட்ட காலைநாழிகை தான்பத்தும் திறமையாய் வாதத் தின் சுரப்பதாகும், பிழிந்திட்ட வுருமத்திற் பத்துநாழி பித்தத்தி ஞ டியின்பிர தாபந்தாணும், தெளிந்திட்ட வந்திதனிற் பத்துநாழி சிலேட் டுமத்தின் செயலாகுங் கங்குற்போது, வழுந்திட்ட வாதத்தி ஞடியா கும் வலிந்தநிசி பத்தின்மேற் பித்தமாமே. (ச)

ஆமென்ற வைகறையிற் சிலேட்டுமமாகு மம்மூன்று நாடிகளு மடங்கியெழுங்காலம், நாமென்ற வாதத்துக் கிருப்பிடமே கேளாய் நாபிக்குக் கீழென்று நவிலலாகும், பேமென்ற பித்தத்துக் கிருப்பிட மே கேளாய் பேரான கண்டத்தின் கிழதாகும், தேமென்ற சிலேட்டும மது சிறந்திருக்குந்தானம் செயலான வுச்சிக்குக் கீழதாமே. (ரு)

கீழான பெருவிரற்கீழ் தர்ச்சனியாம் விரலிற் கிளர்ந்தெழும்பும் வாதத்தி னடிதானும், மாழான மத்தியமத்தின் விரல்தான்பித்தம் மகத் தான வணுமிவிரல் சிலேட்டுமமாகும், வாழான மன்னனுக்கு வலதுகை யினடி மங்கையருக் கிடதுபக்கம் வகுக்கலாகும், காழான கைக்காலி னடிபார்க்கக் கருவிகடான் கணக்கறிந்து கருதிப்பாரே. (சு)

கருதியே நாடிகடான் காணுநேரம் கதிருதயஞ் சித்திரைவை காசிக்குத்தான், அருதியே யானியோ டாடியைப்பசியும் அமிர்தமாங் கார்த்திகைக்கு மத்தியானம், மருதியே மார்கழியுந் தையுமாசி மாலைநே ரந்தனிலே பார்க்கலாகும், இருதியே புரட்டாசி யாவணிபங்குனியும் போரான கங்குலர்த்த ராத்திரிதானுமே. (எ)

நாடி தோன்றாத காலம்.

அத்தமாநாடி தெரிபாத பேர்கள் அப்பியங்கனஞ்செய்தோர் களன் னந்தண்ணீர், குற்றமா மிகுதியுமே யுண்டபேர்கள் குதிரைகரி வெய் யில்விடாய் சிற்றின்பத்தோர், மத்திபமா மதுகஞ்சா வபினிமாம்சம் மச்சங்கண் மிகவுண்டோர் வாயுகும்பித், தித்தமாய் நிறுத்தினோ ரிவர்கட்கெல்லாந் திசைகலங்கி நாடியது தெளிந்திடாதே. (அ)

வாத நாடி.

தெளிந்திட்ட வாதநாடிக் குணந்தான் சிறுபிள்ளை தூங்குதொட்டி லாட்டம்போலும்,வளிந்திட்ட வளைந்துவளைந் தேநடக்கும் மண்டுகந்தத் துதல்போலு மோணன்போலும், தளிந்திட்ட சர்ப்பம்போ லட்டை போலுந் தவழ்ந்துமே வலியனற் குருவிபோலும், அளிந்திட்ட வாமை யின்ற னடையைப்போலு மாதியாம் வாதமது நடக்குந்தானே. (கூ)

பித்த நாடி.

நடக்கின்ற பித்தத்தி னடிகேட்கின் நாகரிக மாகுமன்ன நடை யைப்போலும், மடக்கின்ற மயில்போலுந் தாராபோலும் மாடப்பு றாவுமூர்க் குருவிபோலும், விடக்கின்ற மெத்தெனவாம் மீண்டு மீண்டு மேன் மையாய் முடுச்சாக விளக்கமாகிக், கிடக்கின்ற கெருடன்போற் பெலத்தேயோங்கிக் கேசரம்போயசையுமது பித்தந்தானே. (ய)

சிலேட்டும நாடி.

தானென்ற சிலேட்டுமத்தின் றூதுகேளாய் தயங்கியே தோற்று மது தோற்றூதாகிக், கோனென்ற கோழியின்ற னடையேபோலும் கொக்கினுறக் கம்போலூர்க் குருவிபோலும், மானென்ற மங்கைநல் லார் மயக்கிற்சிக்கி மருவினவன் றூதுபோன் மசகமாகித், தேனென்ற சிலந்தியின்றன் பூச்சிப்போலும் சிலேட்டுமமா னடியது தெளிவாய்ப்பாரே.()

வாதபித்த நாடி.

தெளிவான வாதபித்த நாடிசெய்தி செப்பவே சிறுகுருவி போனடந்து, வளிவான மயில்போல நடப்புங்காணு மருவியபின் ஒந்தியின்றன் மார்க்கமாகும், களிவான வாதசிலேட்டுமத்தினடி கான கத்தின் கோழியது போனடந்து, அளிவான அட்டை யின்றன் மார்க்கங்கண்டால் அதிகமாய் முன்சொன்ன நாடியாமே. (கஉ)

பித்தசிலேட்டும நாடி.

நாடியே பித்தசிலேட் டுமத்தின்றது நண்ணியே நடக்கும்வகை நட்பைக்கேளீர், பாடியே பாம்புபோ லசைந்துபின்னை பதிந்த தவ ளைக்குதித்தல் பதரும்போலாம், ஆடியே சீரணமா நாடிதானே அசைந்து மதயானைபோ னடைநடக்கும், தேடியே தீபனத்தி னாடி தானே சிறுகாக்கை தூங்குதல்போற் றுடிக்குமன்றே. (கங)

சன்னி நாடி.

துடித்திட்டங்கசைந்துமேநாடி நின்று சொல்லும்விற குத்தலையோ னடையேயானல், செடித்திட்டுக் கிறுகிறென்றே சுற்றிநாடிக் கிழோ டி வளைந்துமேபதறிச்சுற்றி, அடித்திட்டு அன்னம்போ லட்டைபோல அசமந்தமாகவே மெலிந்ததானல், தடித்திட்டுக் குடிலமாய்ச் சிக்கென் றானல் சன்னியென்ற நாடியென்றே சாற்றலாமே. (கச)

சுகசன்னி.

சாற்றியே மந்தமாய் நாடிதானும் தனித்ததொரு குக்குடம்போற் பாம்புபோலு, மோற்றியே மூஞ்சூறு போலவாகி முனையாகிச் சுட ராகிக் கொழுந்தேயோடி, ஆற்றியே யடங்கிநின்றங் கெழும்பிற்றா னல் அப்பியங்கனஞ் செய்தரிவை யணுகினோர்க்கும், தோற்றியே சுக சன்னி யென்னு னாடி சூட்சாதி சூட்சமாய்த் துஞ்சும்பாரே. (கரு)

வாதசுரம்.

துஞ்சியே வாளைமீன் போலப்பாய்ந்து துடித்துமே தடித்துத் தான் சிக்கலாகி, அஞ்சியே சர்ப்பம்போ லடங்கிநின்று ஆனைமும் ம்தம்போல வார்ப்பரித்து, நெஞ்சியே நெறுநெறென்று நிமிஷந்தானும் நிலைவிட்டு நீங்கியே மீண்டும்புக்கில், வஞ்சியர்மேல் விகாரமாய் மன தைப்பூண்டு வாதசுர நாடியென்றே வகுக்கலாமே. (கசு)

மரணநாடி.

வகுக்கவே வாதத்தி னாடிதானும் வளைந்துமே முன்னோடிப் புரண்டதாகில், வகுக்கவே மந்தமது மெத்தவாகில் மயிற்றாரா வன்ன நடை போன்றுநின்றால், நிருக்கவே நின்றுநின்று நேரோடாமல் நிலை தப்பி முன்பாய்ச்சல் பின்பாய்ச்சலாகிச், செருக்கவே சடந்தானு மெட்டுநாளிற் சிவபுரத்துக் செய்திவிடுந் திண்ணந்தானே. (கஎ)

திண்ணமாய்ப் பித்தத்தி னாடிதானும் தேள்கொடுக்குத் தெறிப் பதுபோற் றெறிக்குமாகில், வண்ணமா மாதத்தின் மரணமென்க வல் லூறு சர்ப்பம்போல் வளைந்துகாண்கில், பன்னியே பட்சத்தின் மரண மென்க பருவாணைத் துடிசெய்யி லெட்டுநாளாம், மின்னியே பித்தமது மீண்டுமீண்டு மிரட்டியே மீண்டுவந்தால் மீளாதாமே. (கஅ)

மீளவே உந்தியினிற் சுழியைப்பற்றி விளங்கியதோர் வாதபித்த சிலேட்டுமந்தான், ஆளவே யையமென்ற நாடிதன்னில் ஆதித்தன் சுட ரொளிபோற் றோன்றுமாகில், காளவே காந்தத்தின் கனலாய்க்காணில் கலங்கியே தானம்விட்டுக் கடைசியாகில், பாளவே பப்பரம்போற் சுழ லுமாகில் பரமபத மடையுமென்றே பகரலாமே. (கக)

பகாவே வாதத்தி ஞடிதானும் பருகியதோர் பித்தத்தின் வீட்டைச்சேர்ந்து, பிகாவே பித்தத்தி ஞடிதானும் போரான சேட்டுமத்தின் வீட்டைச்சேர்ந்து, அசாவே யையமென்ற நாடிதானும் அதன்வீட்டை விட்டுமே யப்பாலேகித், திகாவே கண்டத்தைச் சேருமாகில் சடமலைந்து சிவலோகஞ் சேர்வர்தாமே. (உ௰)

சேரவே வீணைபோற் றெரிக்குமாகில் சித்தமாய்த் தினமூன்று நாளிற்றீர்வர், ஆரவே யையமா நாடிதன்னில் அதிர்ந்துமேத வளையைப் போற் குதிக்குமாகில், போரவே பாம்புபோற் பிறழ்வுற் றார்ந்து பொறியரவந்தன்னுடைய நடைகண்டாலும், மாரவே மரந்தன்னிற் கொடிபின்னுப்போல் வந்திடினு மரணமென வகுக்கலாமே. (உக)

நாடிபார்க்கும் இயல்பு.

வகுக்கவே மானிடர்தம் வலக்கைபற்றி வளைவின்றி முடக்கின்றி நெட்டிவாங்கி, முகுக்கவே மூவிரலாற் றெட்டுப்பார்க்கில் முன்னுடி வாதம்பின் ஞடிபித்தம், சிகுக்கவேயனுமிவிரல் சிலேட்டுமமாகும்செய லெல்லா மறிந்துணர்ந்து சேதிகேட்டு, நகுக்கவே நோயதனி னன்மைகண்டு நாடியிடச் செயலறிந்து நாடிடாயே. (உஉ)

பூத்தமங்கை நாடி.

நாடியே யெறும்புதா னூர்தல்போலு னல்லாமை யசைவதுபோல் வாதநாடி, கூடியே குளிர்ச்சியாய் மெதுவுபோன்று குடிலங்க ளில்லாமற் றேன்றுமாகில், வாடியேமங்கையர்க்குக் கெர்ப்பமாகும்மகத்தான பஞ்சுபோன் மெதுவாயுற்றுப், பூடியே கின்னரத்தின் பொலிவேயானல் பூத்தமங்கை நாடியென்றே புகலலாமே. (உ௩)

விகற்ப நாடி.

புகலவே புழுப்போல நிமிருமாகில் பொருகால வண்டினிட வொலியும்போல, நிகலவே காஷ்டத்தி னெய்தான்வீழ்ந்து நேர்ந்தெழும்புமக்கினியி னிலைமைபோலும், திகலவே கிளியெழும்புஞ்செய்கை போலத் திரையெழும்பி யொடுங்கும்போற் பித்தநாடி, விகலவே படபடத்துத் தோன்றுமாகில் விகாரத்தி ஞடியென்றே விளம்பலாமே.()

பூத நாடி.

விளம்பவே மேதினியிற்கல் லெறிதல்போலும் மிகப்புரவியாட்டுக்கிடாய்ப் பாய்ச்சல்போலும், திளம்பவே செக்கினிட திருகல்போலும் சீறுகின்ற மூஞ்சூறுசசியேபோலும், இளம்பவே பந்தடித் தெழும்பல்போலும் ஏற்றம்போ லேறியிழிந் திடுதல்போலும், புளம்பவே பித்தத்தி ஞடிதோன்றில் பூதத்தி ஞடியெனப் பேசலாமே. ()

மரண நாடி.

பேசவே பிங்கலையின் நாடிதானும் பேணிநாண் முழுதோடிற் புராளமற்றுன், வாசவே மூவாண்டின் மரணஞ்சொல்லும் வாதமா நாடியது வலிமையாகி, ஏசவே யிரண்டுநாண் முழுதுமோடில் ஈருண்டின் மரணமென வியம்பலாகும், நாசவே நாண்மூன்று வழுவாதோடில் நமனுக்கங் கிரையாவ ஞண்டிற்றுனே. (உ௯)

தானென்ற பித்தத்தி னடிதானும் தரிபாம னொன்று தயங்கு மாகில், ஆனென்ற வாறுதிங்கண் மரணஞ் சொல்லும் அசைவிலா திரண்டுநா ளோடுமாகில், மோனென்ற மூன்றுதிங்கட் குண்மரிப்பன் மூர்க்கமாய் மூன்றுநா ளோடுமாகில், நானென்ற நாற்பதோ டைந்தா நாளில் நசிச்சுமே நமனிடத்தி னல்குவானே. (உஎ)

நல்கவே சிலேட்டுமத்தி னடிதானும் நாண்மூன்று கடிதோடி லைந்து நாளாம், மல்கவே யிரண்டுநா ளோடுமாகில் மரித்திடுவ னீரைந்து நா ளிற்றானும், ஒல்கவே யொருநாளே யோடுமாகி லுறுசீவன் பதினைந்து மட்டு நிற்கும், பல்கவே பத்துநா ழிகையேநின்றால் பயமில்லைப் பார் தனிலே பாலிப்பாரே. (உஅ)

பாலித்த பித்தத்தி னடிதானும் பகட்டியே மூன்றுநாள் புரளு மாகில், ஆலித்த வாவினைக் கசைதல்போலு மாடியே யமர்ந்துதா னிருக்குமாகில்,மாலித்தமணியசைத லோசைபோலும் மகத்தான வுடுக் கையின்றன் றொனியைப்போலும், கோலித்தநாடியினிற் குறிகள்கண் டால் கொடுமறலி நகர்தனையே குடிகொள்வாரே. (உகூ)

சரீர இலக்ஷணம்.

கொள்ளவே வாதத்தின் றேகந்தானும் குளிர்ந்துமே சிறுதிடத் தே யூஷ்ணமாகித், தெள்ளவே துடிதுடித்தே யிருக்கும்பித்தந் தேகந் தா னதிவூஷ்ணமாயிருக்கும், தெள்ளவே சேட்டுமத்தின் றேகந்தா னும் சிக்கென்று குளிர்ந்திருக்குந் தொந்ததேகம், பன்னவே பலவிதந் தான் பெற்றிருக்கும் பரிந்துதொட்டு தேகத்தைப் பார்த்துச்சொல் லே. (௩0)

தேகத்தி னிறந்தானுஞ் செப்பக்கேளீர் சிறுமையாய் வாதந்தான் கறுத்திருக்கும்,போகத்தின் பித்தநிற மஞ்சளாகும் பொருஞ்சிலேட்டும ரோகிக்கு வெளுப்புமாகும், பாகத்தின் தொந்தரோகிக்குத்தானும் பல பலவன் னமுமாகிப் பரந்துநிற்கும், ஆகத்தி னிறம்பார்த்து நாடிபார்த் து அஷ்டவிதப் பரிக்ஷையெல்லா மடவாய்ப்பாரே. (௩க)

வசன பரிட்சை.

பார்வாத ரோகிக்கு வார்த்தைதானும் பக்குவமாய்ச் சட்டதமாய்த் தானிருக்கும், பேர்பித்த ரோகிக்கு வார்த்தைதானும் பேசிடிலோ பெ லத்துமே யுரத்திருக்கும், சேர்சிலேட்டும ரோகிக்கு வார்த்தைதானும் சிறுத்துமே யீனசுர மாயிருக்கும், வேர்தொந்த ரோகிக்கு வார்த்தை தானும் வெகுவிதமா யிருக்குமென்றே விரித்திடாயே. (௩உ)

நேத்திர பரிட்சை.

விரித்திட்ட வாதமென்ற ரோகிக்குத்தான் மீறியே கண்கறுத் துத் கண்ணீர்பாயும், பரித்திட்ட பயித்தியரோ கிக்குக்கண்தான் பச் சென்று சிவந்திருக்குஞ் சிலேட்டுமரோகிக்குப், பிரித்திட்ட பீளைசாரும் வெளுத்திருக்கும் பெருஞ்சன்னி வாதரோகிக்குக் கண்தான், கரித்திட்டு ச்சிவந்துபச்சென் றிருக்குங் காமாலைரோகிக்குப் பசுமஞ்சளாமே. (௩௩)

மல பரிட்சை.

மஞ்சளென்ற வாதரோகிக்கு மலந்தானும் மலபந்த மாகியே கறுத் திருக்கும், பிஞ்சலென்ற பித்தரோ கிக்குத்தானும் பெருகியே வெச் சென்று சிவந்திருக்கும், திஞ்சலென்ற சிலேட்டுமரோ கிக்குத்தானும் சி தறிமலம் வெளுத்துமே சீதமாகும், பஞ்சலென்ற தொந்தரோ கிக்குத் தானும் பலவன்ன மாயிருக்கும் பண்புதானே. (௩௪)

ஜல பரிட்சை.

பண்பாக வாதரோகிக்கு மூத்திரம் பாரித்துத் தெளிந்திருக்கும் வெண்மையாகும், மண்பான பித்தரோகிக்குமூத்திரம் மார்க்கமாய் மஞ் சளித்துப் பசத்திருக்கும், திண்பான சிலேட்டும ரோகிக்கு மூத்திரம் சேறுபோற் பொருமியே நுரைத்திருக்கும், கண்பான தொந்தரோ கிக்கு மூத்திரம் கண்டபல நிறமாகுங் கருதிடாயே. (௩௫)

நாவின் பரிட்சை.

கருதியே வாதரோகிக்கு நாக்கு கறுத்திருக்கு முள்ளுபோல் வெ டித்திருக்கும், பருதியே பித்தரோ கிக்குநாக்கு பச்சென்று தானிருக் குஞ் சிவந்திருக்கும், வெருதியே சிலேட்டுமரோகிக்கு நாக்குவெளுத் துமே தண்ணீருண் டாயிருக்கும், துருதியே தொந்தரோ கிக்குநாக்கு சூட்சாதி பலவன்ன மாகுந்தானே. (௩௬)

வன்னமா மெட்டுவகை பரிட்சைபார்த்து வகையான நாடியிட குணமுங்கண்டு, தின்னமாந் தேகத்தின் செயலும்பார்த்துத் தேசதே சாபேதச் செயலறிந்து, கன்னமாங் காலாகா லங்கள்பார்த்துக் கனமான வக்கினியின் கணக்கறிந்து, பன்னமாம் பலபலவா நூலைத்தேர்ந்து பரி காரப் பயனறிந்து பார்த்துச்சொல்லே. (௩௭)

மூன்றுவது நாடிநிதானம் முற்றிற்று. ஆகவிருத்தம்-௩௬௬.

—(*)—

## நாலாவது,

# சுரரோகநிதானம்.

சொல்லவே சுரத்தினிட திறமைகேளாய் சடத்திலுள்ள பிணிக் கெல்லா மிராசாவாகும், எல்லவே நமனுக்கு மொக்கு மொக்கு மெழி லோடு பிரதாப கோபமாகும், தள்ளவே தக்கனிட வேள்வியைத்தான் சாம்பசிவன் கோபத்தா லழித்தபோது, நெல்லவே நெற்றிக்கண் சுவா லைதன்னில் நேராகப் புறப்பட்டு நேர்ந்ததாமே. (௧)

நேர்ந்ததோர் சுரமேழு விதமுமாகும் நிலையான நாமத்தினேர்மை கேளாய், வார்ந்ததோர் வாதசுரம் பித்தசுரஞ் சிலேட்டும வாகான பூத சுரம் சீரணசுரமாகும், ஆர்ந்தவபி காதசுரந் தொந்தசுரத்தோடு ஆர்க் கமா மேழுவித மறிந்துக்கொள்ளு, தீர்ந்ததோர் சுரபேத வண்மை யெல்லாம் செயலறிந்து குணத்தோடு செப்புறேனே. (௨)

### வாதசுரம்.

செப்புகிறேன் வாதசுரத் தின்குணத்தைத் திருமுகமு முதடுமே கறுத்துக்காணல், தப்புகிறேன் சரீரமெல்லாந் தடித்துநோதல் தாகந் தான் மிகக்காணன் மெய்ந்நடுக்கல், திப்புகிறே னுடம்புதிமி ரெடுக்க லூஷ்ணம், தேகம்பா ரித்திருக்கன் மலபேதத்தால் குப்புகிறேன் குளிர்ந்துமயிர்க் குச்செறிதலிந்தக் குணமெல்லாம் வாதசுரக் கூறு மாமே. (௩)

### பித்த சுரம்.

கூறுனபித்தசுரத் தின்குணத்தைக் கூறிடவே நித்திரைதான் மெத்தக்காணல், தேறுன மலமூத்திரஞ் சிவந்திருத்தல் சிதறியே வயிறு கழிந் திடுதல்சத்தி, வாறுனவாய்ப்பிதற்றல் வாய்தான்கைத்தல் மகத் தான மூர்ச்சையொடு தாகங்காணல், தாறுன வெழுந்திருந்து மோடல் விக்கல் தவித்திடுதல் சந்தாபப்படுதல் காணே. (௪)

### சிலேட்டும சுரம்.

சந்தாபமானசிலேட் டுமசுரத்தைச் சாற்றிடவே நாக்குமுகம் வெளுத்துக்காணல், மந்தாப மார்நோத விருமலிளைப்பு வருகுதல்வாய் துவர்த்துமே உரிசையில்லை, முந்தாப மூச்சுவிடப் போகாமற்றுன் முயங்கியே விக்கலொடு தாகங்காணல், சிந்தாப மிடறுநொந்து மேன்மூச்சாதல் தினவெடுத்தல் தியங்கிடுதல் சிலேட்டுமமாமே. (௫)

### வாதபித்த சுரம்.

ஆகுமே வாதபித்த சுரத்தின்செய்தி யறிந்திடவே யங்கமெலா மசைதனோதல், நாகுமே நாக்குத்தான் கறுத்துக்காணல் நயந்துபிரலாபித்த னித்திரையாதல், வாகுமே மலபேத மாயிருத்தல் மலம்வெளுத்தல் வாய்கைத்தல் வடிவங்குன்றல், தேகுமே யறிவோடு தினைவுமாதல் தியங்கிடுதன் மயங்கிடுதல் சிலேட்டுமமாமே. (௬)

### வாதசிலேட்டும சுரம்.

திண்ணமாம் வாதசிலேட் டுமசுரந்தான் சடமெல்லா நொந்திடுதல் சுவாசங்காணல், எண்ணமா மிருமலுநா வெழுந்திருத்தல் இசைந்துமயிர்க் குச்செறிதன் மிடறுநோதல், கண்ணமாந் தாபமே மிகவுண்டாதல் தியங்கியே சஞ்சலித்தல் வாய்பினத்தல், விண்ணமாமிரளலொடு வியர்வைகாணல் மிக்கவழுதிட விதன்றன் விவரமாமே. (௭)

### பித்தசிலேட்டும சுரம்.

விவரமாம் பித்தசிலேட் டுமசுரந்தான் வியர்வையே மிகவருதல் வாய்பினத்தல், நிவரமாய் நித்திரையு மிகவேமிஞ்சல் நெடித்து மயிர்க்குச்செறித விருமலாதல், தவரமா மார்நோதல் தாபங்காணல் தலைவலியும் பிடரிவலி தகைந்துகாணல், நவரமா நாக்கதுவும் வழுவழுத்தல் நாக்கோடு மூக்கு நலமழிதல்காணே. (௮)

### பூதசுரம்.

அழிதலாம் பூதசுரத் தாண்மைகேளீர் ஆதியந்த குமரகண்டம் போல்வலிக்கும், கழிதலாங் கண்ணுருட்டி யேவிழிக்கும் கறுத்தலுடன் கருதியே பிரலாபிக்கும், விழிதலாம் போசனங்கண் மிகவிரும்பும் வேண்டினதெல் லாமிகவு மாசையாக்கும்,பழிதலாம் பாடலோடாடலா தல் பாரமயிர்க் குச்செறிதல் நித்திரையுமாமே. (௯)

### ஆசீரணசுரம்.

நித்திரையா மாசீர்ணசுர நேர்மைகேளீர் நேர்மையாய்ச் சுர மோடே யிளைப்புக்காணல், மத்திரையாய் விக்கலொடு வயிறுமந்த மா யிருத்தன் மார்புதொடை குறங்குநோதல்,பித்திரையாய்ப் புளித்தேப்ப மிடுதல்வாந்தி பேர்பெரிய தாகமொடு மூச்சுகாணல், சித்திரையாய் வயிறுநொந்து பொருமிக்கொள்ளல் சீதளமா யுடம்பெங்குந் திமிரு மாமே. (௰)

### அபிகாதசுரம்.

திமிரான வதிகநடை குதிரையானை சுமையெடுத்த லதிகமாய் வேலைசெய்தல், தமிரான தாகமோ டிளைப்புகைகால் தளர்ந்திட்டுப் பனிதனிலே சஞ்சரித்தல், அமிரானவபி காதசுரந் தானுண்டாகு மதின்குணங்க டாகமுட னுடம்பெல்லாநோம், வெமிரான வியர்வை யோடா லோபம்பிரமை மிகக்குளுந்த போசனத்தி லாசையாமே. ()

### ஆகீகசுரம்.

ஆசையா மாகிகத்தின் சுரத்தைக்கேளீர் அதிகதுளி ருண்டாதல் தேகம்வாடல், தேசையாய்த் தேகம்புள கித்திருத்தல் சிறியே யிரும லுடம் பெரிவுகாணல், தாசையாய்ச் சந்தாபந் தலைகண்ணோவு தருவி லா வுடம்பெல்லா முதுகுநோவு, ஆசையாய்ப் பத்தியத்தின் மனதுண் டாதல் அதிகநித்திரை வருதன்மயக் கந்தானுமே. (௧௨)

மயக்கமாய் மார்புமுக மெல்லாம்வாடி வடிவுவெளுத் திடுதல்கண் தான் பசுமையாதல், தியக்கமாய்க் கண்ணுகிரில்ரத்த மில்லையாதல் சிதறியே வயிறுசுழிந் திடுதல்சத்தி, கயக்கமா யுள்ளங்கா லுள்ளங்கை யும் கண்ணியே யெரிந்திடுதற் றுகங்காணல், இயக்கமாய்த் தேகமெங்கு மழற்றல்காண விசைந்தபடி பேசலெண்ணம் வேறுமாமே. (௧௩)

### மாறல்சுரம்.

வேறுகி யொருநாடான் மாறிக்காணல் விளங்கிரண்டு நாள்மாறிச் சுரமுண்டாதல், நாறுகி மூன்றுநா டானுமாறல் நலத்தவைந்து நாண் மாற லர்த்தராத்திரி, பாறுகி வருதல்பதி னைந்துநாண்மாறல் பகர்பந்த வொரு மாதந்தான் மாறிக்காணல், வாறுகி வாதபித்த சிலேட்டுமங்கூடி மருவிநின்ற சுரந்தானு மாகிகமாமே. (௧௪)

### ஆகிகசீதசுரம்.

ஆகிகத்திற் சீதசுரத் தாண்மைகேளீ ராகமெல்லா மிகக்கடுப்புற் றனல்போலாகித், தேகத்திற் சிரமிடறு கண்களொடுபுருவஞ் சிறுவலி யாய் வலித்துமத பேதமாகி, நாகிகத்தில் நாக்குதடு வழவழத்து நல்ல நித் திரையில்லா துடல்திமிர்த்து, மேகிகத்திற் சுரங்குளிருந் தாசமூர் ச்சை மிகத்தாப மயக்கமொடு தியக்கமாமே. (கரு)

### ஆமசுரம்.

தியக்கமா மாமசுரத் தாண்மைகேளீர் சிறுவலியாய் வலித்துமா சனங்கடுத்து, மயக்கமா மிரத்தமொடு சீதம்பேதி மருவுதண் ணீர்தாகஞ் சுரமுமுண்டாம், கயக்கமா யுடம்பூதி வெளிறிக்காணுங் கால்கையு மயர்ந்திருக்குங் கைக்கும்வாய்தான், தயக்கமாய் கால்கையுஞ் சயித்ய மாகுஞ் சளியோடு யிருமலுமாய்த் தவிக்குந்தானே. (கசு)

### சருமதாதுகத சுரம்.

தவித்திடாச் சுரநாலின் றன்மைதன்னைச் சாற்றிடவே சடத்தி னிற்குந் தோலைப்பற்றித், துவித்திட்ட சுரமோடு யென்பைப்பற்றிச் சூட்சமாய்க் காய்ந்தசுர மாக்தந்தன்னை, மவித்திடா தெரித்தசுரமாங்கி சந்தன்னை மருவிநின்ற சுரநாலின் வண்மைதன்னைக், குவித்திடாக் குணங் களெல்லாங் குறித்துச்சொல்லக் குறுந்தோலைப் பற்றியதோர் குணத் தைக்கேளே. (கஎ)

குணமாகச் சற்றுடலைக் காய்வதாகும் குடிலமாய் நாடிமந்த மாயிருத்தல், தணமாகச் சற்றேதான் றலையேநோதல் தண்ணீர்தான் வேண்டியே தாகங்காணல், பிணமாக வுடம்பெல்லாம் வெளுத்துக்கா ணல் பிரமையாய் வாய்பேசல் வாய்நீரூறல், நிணமாக வுடம்பெரிதன் மயக்கங்காணல் நேர்தோலைப் பற்றுசுர நேர்மையாமே. (கஅ)

### அஸ்திதாதுகத சுரம்.

நேர்மையா யெலும்பைப்பற் றியசுரத்தின் நிலவரங்கேண் மிக்க தாகந் தான்காணல், மேர்மையாய் மேலெல்லாங் குளிர்ச்சிகாணல் மிகக்கபடச் சுரந்தானும் மேலிருத்தல், தீர்மையாய் தேகம்வெளுத் திளைத்திருத்தல் தேகமெல்லாம் பஞ்சுபோற் சிரணித்தல், ஆர்மையா யடிவயிறு தனிலேகோதல் அதிகதீ விரமான மலம்போக்காமே. (கக)

### இரத்ததாதுகத சுரம்.

போக்கான ரத்ததாதுகத சுரகுணத்தைப் புகன்றிடவே பிரமை யாய்ச் சுரந்தான்காணல், தாக்கான வியர்வையொடு தாகமுண்டாய்த் தன் னுடம்பெல் லாநேதன் மூர்ச்சைகாணல், வாக்கானவுடம்பதுவுங் கன்ற லுண்டாய், வழவழத்து நாக்கெல்லா மஞ்சள்போலாம், நீக்கான நெஞ் சுதனிற் கோழையுண்டாம் நித்திரையாய் மலபந்த மாக்குந்தானே. ()

மாமிசதாதுகத சுரம்.

மலபந்த மாங்கிசகத சுரகுணத்தை வழுத்திடவே யதிகசுரமாகக் காணல், சிலபந்த சுவாசமொடு வியர்வுதோன்றல் சிக்கியே தேகமெலா நொந்துகாணல், வலபந்த வுதடுலர்த லாலாபித்த லுடம்புபுளகிதமாதன் மயிர்க்கூச்சாதல், அலபந்த மனதுவியா கூலமாத லருவியெனக் கண்ணினீர் ததும்புந்தானே. (உக)

ஜன்னிவாத சுரம்.

ததும்பலென்ற சன்னிவா தச்சுரத்தின் தன்குணந்தான் கழுத்து நெற்றி மார்பயர்க்கும், வெதும்பலொடு தந்திரமாஞ் சித்தப்பிரமை மிக்கான சரீரமெல்லா மெரிதஞேதல், அதும்பலொடு கண்சிவந்து பச்சைபாய்தல் அதிகமாய் வாய்பினத்தல் மூர்ச்சைகாணல், வதும்பலொடு மார்வலித்தல் தியக்கமாதல் மயிர்ச்செறித்த விருமல்விக்கல் சுவாசந்தானே. (உஉ)

நான்காவது சுரரோகநிதானம்முற்றிற்று. ஆகவிருத்தம்-கருஅ.

—(*)—

## ஐந்தாவது
# சன்னிரோக நிதானம்.

தானென்ற சன்னியிட நிதானந்தன்னைச் சாற்றவே பதின்மூன்றும் சந்திகமாஞ்சன்னி, ஆனென்ற அந்தகமாஞ்சன்னிதானும் அதிகருத்தாசசன்னி சித்தவிப்பிரமம் தேனென்ற சீதாங்கச் சன்னியோடு சிறிய தாந்திரிகசன்னி கண்டகுப்சம், கானென்ற கர்ன்னிகமாஞ் சன்னியோடு கடுபுக்ன நேத்திரசன்னி யுந்தானுமே. (க)

தானான ரக்திஷ்டீவி சன்னியோடு தக்கபிர லாபசன்னி ஜிம்மகமாஞ் சன்னி, ஆனான அபிநியாசச் சன்னியோடு அடங்கலாய்ப் பதின்மூன்று சன்னிதன்னில், கானான ஆறுசன்னி சாத்தியமாகுங் கடிந்தேழு சன்னியுமே யசாத்தியமாகும், பானான சன்னிபதின் மூன்றுக்குள்ள பரிவான குணமெல்லாம் பண்பாய்க்கேளே. (உ)

சந்திகசன்னியின் குணம்.

பண்பான சந்திகச்சன்னி யதின்குணந்தான் பகரவே தேகமுமெப்போதும் போலாம், உண்பான வுடலதனிற் குத்தல்காணல் உயிர்சோப மாயிருத்தல் கால்வலித்தல், திண்பான சிலேட்டுமமே மிகுந்துகாணல் தியக்கமாய்க் கண்திறவா மற்றூன்மூடல், தெண்பான தேகமெல்லா மெரிச்சல்காணல் தேகமெல்லாங் குளுமையா யிருக்கும்பாரே. (ங)

அந்தகசன்னியின் குணம்.

இருக்குமே நாவறளுந் தண்ணீர்தாக மெரிவுண்டாய் தேகமெலாம் பிரபையாகும், தருக்குமே தலைசுற்றல் மிகவுங்காணுந் தன்னிலே வாய்பிதற்றும் வாந்தியாகும், விருக்குமே விக்கலொடு சுரந்தானுண்டாம் மேன்மையாங் கைகாலு மசதியாகும், பருக்குமே தலைதனிலே பாரங்காணும் பாரந்த கச்சன்னி பாதமாமே. (ச)

### ருத்தாகசன்னியின் குணம்.

சன்னியென்ற ருத்தாகந் தன்குணங்கேள் தவித்துமே பிரதாபமெரிதலுண்டாம், தின்னிசித்தப் பிரமையொடு கழுத்துநோதல் தேகமெல்லாங் குத்தலுண்டாய்த் தியக்கமாதல், பின்னிகிடைகொள்ளாமற் புரளல்மெத்த பின்கண்ட பேருடனே முறைபாடாதல்,உன்னவுதடுலர்தல்நெற்றி வியர்வையாதல் ருத்தாக சன்னியென வுரைக்கலாமே. ()

### சித்தவிப்பிரமசன்னியின் குணம்.

உரைக்கவே சித்தவிப்பிரம சன்னிதன்னை உடம்பெல்லா மிகக்கறுத்து நோதலுண்டாம், வரைக்கவே வாதமொடு பித்தமிஞ்சல் மருவியசித் தப்பிரமை நினைவழித்தல், நரைக்கநா ஞவிதமுங் குணமாய்க்காணல் நவியாகிப் பாடியே வாய்பிதற்றல், இரைக்கவே சுவாசமொடு பேதியாத விருந்தவிடம் விட்டுமே யேகும்பாரே. (சு)

### சீதாங்கசன்னியின் குணம்.

ஏகவே சீதாங்க சன்னிதன்னை யியம்பிடவே சரீரமெல்லாங் குளிர்ந்திருத்தல், ஆகவே யிருமலொடு யிளைப்புண்டாத லசதியொடு விக்கலுடம் பெல்லாநோதல், மோகவே வாந்தியோ டழற்றல்மூர்ச்சை முரண்டுமே தேகமெல்லா மசைதல்காணல், பேகவே பேதியடிக்கடியுண்டாதல் பிதற்றியே புலம்பிமிகப் பேசுந்தானே. (எ)

### தாந்திரிகசன்னியின் குணம்.

பேசுமே தாந்திரிகசன்னிதானும் பிதற்றலாய் வாய்ப்பிரா வுதலுமாகும், கூசுமே நாக்கதுவு மிகக்கறுத்துக் கூர்முள்ளு போல்நாக்கிற் றண்ணீரில்லை, தாசுமே யுதடுலர்ந்து தாபங்காணும் தவிப்பெய்தி வயிர்கழியுஞ் சுவாசமுண்டாம், வீசுமே தினவெடுத்துக் கண்பருத்து மிகத் தண்ணீர் பாய்ந்துசுர மிகுதியாமே. (அ)

### கண்டகுப்ச சன்னியின் குணம்

மிகுதியாய்க் கண்டகுப்சம் விளம்பக்கேளாய் மிகப்பிரமை தான்வருதல் தாபமாதல், தகுதியாய்த் தலைசுற்றல் சந்தோஷித்தல் தனுப்போலக் கழுத்துநரம் பிழுத்துக்கொள்ளல், பகுதியாய்ப் புலம்பல் பயப்படுதல்மூர்ச்சை பாரமாய்ச் சரீரமெல்லா நோதல்காணல், வகுதியாய் வாந்தியோ டிருமல்விக்கல் மார்புதலை நோதலாய் மருவுமாமே. (கூ)

### கர்ன்னிகசன்னியின் குணம்.

மருவுகர்ன்னி காசன்னி பாதந்தன்னை வகுத்திடவே வாய்ப்பிதற்றல் வெடித்தல்காணும், நருவுநாக் குக்கறுத்துப் பிரலாபித்தல் நடுக்கியே விக்கலோ டிரைப்புகாணல், உருவுமுடம் பெங்குமே யசைதலாதல் உற்றசெவிகேளாது காதிரைச்சல், தருவுதலை பாரமாய் நடுக்கல்காணல் தண்ணீர்மே லடிக்கடிக்குத் தவித்தலாமே. (ய)

## புக்னநேத்திரசன்னியின் குணம்.

தவித்தபுக்ன நேத்திரசன்னி பாதந்தன்னைச் சாற்றிடவே சரீரமெல்லாஞ் சயித்தியமாதல்,துவித்தகண்தான் திறந்துமேசுழன்றிருத்தல் தூயகண்ணீர் பாய்ந்துமே தியங்கிக்காணல், கவித்தகண்ணில் பார்வைகாணுதிருத்தல் கடுஞ்சித்தப் பிரமையாய்ப் பிரலாபித்தல், பவித்துடம்பெல்லாம்வாதம் பதைப்புகாணல் பரந்தெழும்புமக்கினிபோற் சுரமுண்டாமே. (கக)

## ரக்திஷ்டீவிசன்னியின் குணம்.

சுரமான ரக்திஷ்டீவி சன்னிதன்னைச் சொல்லிடவே நாக்குதடுவெடித்துக்காணல், நிறமான ரத்தமாய் வாந்தியாதல் நெருப்பாகச் சுரமடித்த லூஷ்ணமாதல், திரமான வாய்வறளல் சித்தப்பிரம்மை தியங்கியே நினைவழிதல் விக்கல்காணல், தரமான தலைசுற்றல் கறுப்புநாக்குத் தருகாது கேளாம லிருத்தல்தானே. (கஉ)

## பிரலாபசன்னியின் குணம்.

இருத்தல்பிர லாபமாஞ் சன்னிதன்னை இயம்பிடவே சரீரமெல்லாமசைவுகாணல், புருத்தல்புலம்பல் ஊஷ்ணமாயிருத்தல் புண்ணுகச் சரீரமுன்னைந் திருமல்காணல், அருத்தல்தா பச்சுரமாய்த் தானடித்தல் அடிக்கடிக்கு விக்கலொடு மூர்ச்சைகாணல், வருத்தல்மயிர்க் கூச்செறிதல் முகமும்வாடல் வாயலறி யோடிவிடும் வண்மைதானே. (கங)

## ஜிம்மகசன்னியின் குணம்.

வண்மையாஞ் ஜிம்மகமாஞ் சன்னிதன்னை வழுத்திடவே சுவாசமோ டுஷ்ணமாதல், தண்மையாய்த் தாகங்கை காலெரிச்சல் தருநாக்குக் கறுத்துமுட் போல்வெடித்தல், கண்மையாக் காதுகே ளாதிருத்தல் கடினமாய் வாய்திறவா மற்றுன்மூடல், உண்மையா யுடம்பெங்குஞ் சுரந்தான்வீசல் உடம்புபா ரித்திருத்தல் விக்கலாமே. (கச)

## அபிநியாசசன்னியின் குணம்.

இருத்தவே வாதபித்த சிலேட்டுமங்கூடி இரும்லொடுசுவாசமாய்ச் சுரமடித்தல், நருத்தவே நாக்குபலவன்னமாகி நாவதுதான் வரண்டுநித்திரை மயக்கமாதல், தெருக்கவே தேகமெங்கு நோதல்காணல் சடமெல்லாம் வியர்வையாய்ப் பலயீனமாதல், அருத்தவே யாகமெங்குமழன்றுபொங்கு மபிநியாச சன்னியிட வாண்மைதானே. (கரு)

## சன்னிகளில் சாத்தியம்.

ஆண்மையா யாறுசன்னி சாத்தியமாகு மதின்விவர மோவ்வொன்று யறையக்கேண்மின்,தாண்மையாய்ச் சந்திகசன்னி தாந்திரிகசன்னி தாக்கான பிரலாபச் சன்னியோடு, திண்மையாய்ச் சித்தவிப்ரம சன்னியோடு ஜிம்மகச்சன்னி கர்ன்னீகச் சன்னியாறு, வெண்மையா யவுஷதத்தில் விடுபட்டேகு மேன்மையாஞ் சன்னியிட குணமிதாமே. (கசு)

### சன்னிகளில் அசாத்தியம்.

குணமில்லா தசாத்தியசன்னி கூறக்கேளாய் கொடிதானருத்தாகச ன்னியோடு, அணமில்லா வந்தகமும் புக்னநேத்திரம் அரிதான கண்ட குப்சம் ரக்திஷ்டீவி, திணமில்லாச் சீதாங்க மபிநியாசஞ் சீரானவவி ழ்தமிட விதுதீராது, பணமில்லாச் சன்னிபதின் மூன்றுஞ்சொன்னே ன் பக்குவமாய்ப் பார்த்திதனைப் பாவிப்பாயே. (கஎ)

### சன்னிகட்குக் காலவளவு.

பாவித்த சன்னிகட்குக் காலங்கேளாய் பகர்சந்திக சன்னிக்கு நாளேழாகும், ஆவித்த வந்தகர்க்குப் பத்துநாளாம் அதிருத்தாக சன் னிக்குப் பனிரண்டேநாள், சேவித்தசித்த விப்ரமத்துக் கிருபத்தோர் நாள் சீதாங்கச் சன்னிக்குப் பதினைந்தாகும், காலுத்த தாந்திரிகத்துக் கிருபத்தைந்து காணுகின்ற நாளேழிற் றீருந்தானே. (கஅ)

தீருமே கண்டகுப்சம் பதின்மூன்றேநாள் தீர்க்ககர்ன்னிகா சன் னிக்குத்தொண் ணூறேநாள், பாருமே புக்னநேத்திர சன்னிநாளெட்டு பத்துநாள் ரக்திஷ்டீவி சன்னிக்காகும், பேருமே பிரலாப மீரேழாகும் பெரியஜிம்மகத்துக் கிரெட்டதாகும், ஆருமே அபிநியாசம் பதினைந்தா கும் அளவுநாட் சன்னிதனக் கறிந்திடாயே. (கக)

### தோஷசுர உற்பத்தி.

அறிந்திடவே தருணசுரத் தவபத்தியம்வந்தால் ஆக்கிரமா மேழுவி தத் தோஷமாகும், தெறிந்திடவே யேதென்றால் சொல்லக்கேளாய் தித்திப்புப் புளிப்பழற்சி கசப்புமாகும், பறிந்திடவே பாக்குவெற் றி லையும்பாலும் பரிமளமாந் திரவியமும் பச்சைத்தண்ணீர், தறித்திடவே சயித்திய்பண்டம் ஸ்திரீசையோகம் தரித்தேடு வாசித்த லழுதல்வழி நடையே. (உய)

வழிநடைதான் சுகந்தமாஞ் சந்தனமும்பூவு மணமான கற்பூரஞ் சிவந்ததொருவஸ்திரம், நெழிந்திடைதான் நெய்வெல்ல மெண்ணெயு டன் மோர்தான் நெகிழ்ச்சியாந் தயிர்மெத்த புதுப்புடவைகாற்று, சுழி நடைதான் பெண்பார்வை மெய்தீண்டியாளல் சுரம்வந்த வொன்பதுக்கு ளொன்பதின்மேற், பழிநடையிப் படிக்கொத்த வபத்தியம் வந்தால் பரிந்துமகா தோஷம்வந்து பிறக்குந்தானே. (உக)

தானென்ற சுரத்திலவ பத்தியந்தன்னால் சயித்தியத்தா லுபசாரத் தால்மந்தத்தால், சூனென்ற சுரம்பிறந்து தோஷமாகும் சுருக்கான மூ ர்ச்சையாய் மிகுந்துகாணும், கானென்ற பிரமையொடு கடியதாகம் கருத்தழிந்து புலம்பியே மார்தானோதல், ஆனென்றஅவ பத்தியத்தில் வந்ததோஷம் அதின்குணத்தை யறிந்துதா னவிழ்தஞ்செய்யே. (உஉ)

செய்யவே தருணசுர மாயிருக்கில் ஸ்திரீசஞ்சா ரஞ்செய்தாற் றி ரிதோஷமாகும், உய்யவே இதின்குணந்தா னுடம்பெல்லாநோகும் உயர்கின்ற மாருக்கு ளெரிதலுண்டாம், கையவே சரீரமெங்கு மாட் டங்காணுந் தவித்துமே புலம்புமடிக் கடியெழுந்து, கையவே கால்கை தான் குளிர்ந்திருக்கும் கடினமாஞ் சித்தப்பிரமை காணுங்காணே. ()

பிரமையாங் காய்ச்சலொடு பிதற்றல்காணல் பெருகவுஷ் ணம்மாதல் தாகமாதல், வறுமையாய் வயிறெரிதல் மூர்ச்சைகாணல் வாதமாம் நாடியது குடிலமாதல், விறுமையாய் வியர்வையொடு சஞ்சலித்தல் மிக்கான வுழலையுப் பிசமுமாதல், அறுமையா யங்கமெலா மழற்சியாதல் அதிகவிஷந் தோஷசுர மறிந்துபாரே. (உச)

தோஷமா மகாசுரந்தான் சொல்லக்கேளாய் தூய்தான மயக்கமாய்ச் சுரந்தானுண்டாம், கூசமாம் நாளொன்றுக் கிரண்டுதாமூன்று குளிருடனே தாகமுண்டாய்க் காய்ச்சலுண்டாம், நாசமாந் தலைநோயு நாக்கினிற்றான் நற்கடினமுள்ளைப்போல் தானிருத்தல், போஷமாம் பிரலாபஞ் சித்தப்பிரமை புலம்பலோ டங்கமெலாம் புரளும்பாரே. ()

புரளவே ஜிம்மகச்சன்னி தோஷந்தானும் பொன்னிறமாய் நாக்கிலே தானிருக்கும், மிரளவே நாவெடித்து நீரில்லாமல் மிகநாக்கு முள்ளு போற் றானிருத்தல், திரளவே காய்ச்சலொடு மூர்ச்சையாகித் தியக்கமொடு மயக்கமாய் வியர்வைகாணல், வாளவே யுருட்சியொடு மிரட்சியாதல் உதறிடுமே சரீரமெல்லா முண்மைதானே. (உரு)

உண்மையாய்க்காணுநீ ஜிம்மகத்தின்தோஷம் உண்ணுக்குக் கறுத்துலர்ந்து முள்ளுபோலாம், திண்மையா யெழுந்திருக்குஞ் சித்தப்பிரமை தேகமெலாந் தினவெடுக்கும் வியர்வைகாணும், துண்மையாய் சுவாசமோ டழலையாகும் கோரமாய்ச் சுரமுண்டாய்த் துடிப்புமாகும், கண்மையாய்க் கால்கையு மசதியுண்டாம் காந்தியாந்தேகமது கறுகுந் தானே. (உஎ)

கறுப்பான தோஷமதோ ரேழுதானும் காரியமாம் பத்தியமவ பத்தியமாகில், திறப்பான திரிதோஷ மொன்றேடொன்று சேர்ந்து பின்னி நாடியது குடிலமாகி, நறுப்பான நாபியினிற் றேஷம்பற்றி நாக்குமுக மூக்கோடு கண்சுருக்கி, வெறிப்பாகும் நாளேழு பதினைந்தாகி வியாதிசம னாகியே மேன்மையாமே. (உஅ)

அதிசாரசுர உற்பத்தி.

மேன்மையா மதிசாரம் விளம்பக்கேளாய் மிகக்குளுமை யானதுகள் புசித்தலாலும், பான்மையாம் பாரித்த பசுமையாங்கறிகள் பருக்கவே யழன்றதுகள் காரத்தாலும், ஆண்மையா யழுதாலும் வழிநடந்தால் அதிபேதி யானதுகள் பச்சைப்பண்டம், பேண்மையாய் புசித்தாலு மிவைகளாலே பேதியா யதிசாரம் பிறக்குந்தானே. (உகூ)

வாதாதிசாரத்தின் குணம்.

பிறக்குமே வாதாதி சாரச்செய்தி பொருமியே வயிர்தானும் பேதியாகும், அறக்குமே யடிக்கடிக்கு வாயுத்தான்பரியும் அனலாகி நுரையுடனே மலங்கறுக்கும், திறக்குமே யடிவயிற்றிற் பிடுங்கல்நோதல் தேகமெல்லா நொந்துமே மலமுண்டாதல், மறக்குமே மலங்கறுகி பேதியாகும் வாந்தியொடு மந்தமா மயக்கமாமே. (கூ0)

பித்தாதிசார குணம்.

மயக்குமே பித்தாதி சாரந்தானு மலஞ்சிவப்புற் றாஷணித்து விடுதலாகும, தயக்குமே தாகமொடு வயிர்வலிக்கும் தயங்கியே யழலை தான் மிகவுண்டாகும், வியக்குமே வியர்வையொடு மூர்ச்சையாகும் மிக்காக வுதடுலரு மார்வலிக்கும், மியக்குமே மேனியெல்லா மழற்றிமீ று மிடறுநொந்து புண்ணாக வெதும்பலாமே. (௩௧)

சிலேட்டுமாதிசார குணம்.

வெதும்பலாய் சிலேட்டுமாதி சாரந்தானும் வெளுத்துமே சீதந் தான் மிகவுமாகும், வதும்பலாய் வயிறுநொந்து மலநுரைக்கும் மார்க் கமா யிருமலொடு சுவாசங்காணும், அதும்பலா யடிவயிறு தனில்வலிக் கு மருசியா யிருந்துமே கோழைகட்டுங், திதும்பலாய்த் தேகமெங் கும் வெண்மையாகுஞ் சிக்குமே சலந்தானுந் தியக்கமாமே. (௩௨)

தோஷாதிசார குணம்.

தியக்கான தோஷாதி சாரந்தானும் தேகமுள் ளெரிச்சல் புறங் குளுத்திகாணல், கயக்கான காலசையுங் குளிர்ந்திருத்தல் கண்டவே ருடன்புலம்பல் வாந்திபண்ணல், இயக்கான விருமல்விக்கல் சுவாசமா த லெழுந்திருந்து ஆடுதலோ டுதல்போராடல், வியக்கான சீதாத்தம் வியர்வையுப்பல் மிக்கநித் திரையில்லா திருத்தலாமே (௩௩)

அசாத்திய வதிசார குணம்.

இருத்தலே யசாத்தியமா மதிசாரந்தா னோண்டத் தெண்ணெ யைப்போ லிளகும்பேதி, மறுத்தலே மாமிசம்போல் வயிறுபேதி மரு வுகுரற் கிழக்குரற்றுன் பட்டிருக்கும், திருத்தலே தேன்போலும் பே தியாகும் சுவறியே சுவாசமொடு கோழைகாணும், விருத்தலே விக்க லொடு வியர்வையாகும் மீளாது அசாத்தியந்தான் விளம்புங்காலே. ()

விளம்பவே மலமிளகல் கட்டியாதல் மிகக்கறுத்து விடுதல் பல வன்னமாதல், இளம்பவே யிரத்தம்போல் கழிதல்வீக்கம் இரைத்த பொல்லா நாற்றமாய்ப் பேதியாதல், திளம்பவே தேன்போலக் கழித லுப்பல் தேங்காயின் றிருகற்போற் செரியாதிருத்தல், அளம்பவே யடிக்கடிதான் பேதியாதல் அசாத்தியமா மதிசார மறிந்திடீரே. (௩௫)

சாத்தியகுணம்.

அறிந்தசாத் தியகுணந்தான் ரோகிகட்கு அலர்ந்தகண்தான் கரு நெய்தற் பூப்போலாகும், தறிந்தமுகம் பூரணச்சந் திரன்போலாகும் ச மதாது வாய்நாடி தானடக்கும், மறிந்ததொனிக் குயிலோசை போலவா கும் மனதுதா னுணவின்மீ தாசையாகும், தெறிந்துமே தினம்பல்லு முல்லையரும் பதுவாய்ச் சிவந்துமே நாவதனிற்றண் ணீருண்டாமே. ()

உண்டபின்பு வியர்வைதான் கண்டுமாறல் உறுவிசேஷங் காதிரண் டுஞ் சரியாய்க்கேட்டல், மிண்டபின்பு மூக்குமண மறிதல்கைகால் மி கச்சிவந்து நகக்கண்ணும் ரத்தமாதல், பண்டபின்புநித்திரையுந் தூரப்பா ர்வை பார்க்கின்மெய்தான் சிவந்துமே பாங்குண்டாதல், நண்டபின்புநா டியுமே இறுகிக்காணல்நற்குணஞ்சாத் தியமென்றே நவின்றிடாயே. ()

அசாத்திய குணம்.

நவின்றிட்ட வசாத்தியமாஞ் சுரமதிகமாதல் நலங்கியே யதிகமாய்க் குளிர்ந்துகாணல், அவின்றிட்ட அதமசுரமாயடித்தல் அதிககண்கை கானகக்கண் ணிரத்தமில்லையாதல், கவின்றிட்ட கண்காந்தி யிலாதிருத்தல் காதுகே ளாதிருத்தல்வன்மேனிதன்னில், முவின்றிட்ட மெத்தவுமே வியர்வையாதல் முகக்காந்தி யிலாதிருத்தல் முகம்பாழாமே. ()

பாழாகக் கண்விழித்த வாக்கிருத்தல் பார்த்தகண்டான் மிகச்சிறுத்த லாயிருத்தல், தாழாகத் தொப்புண்மார் மூக்குக்கால்கை சோர்ந்துமே குளிர்ந்திட்டு சுவாசங்காணல், மேழாக விக்கலொடு தநுர்வாதம் போல் மெய்வலித்தல் சரீரமெங்கு மிகவுமாடல், தாழாகத் தலைஞேதல் பித்தமேறல் தடித்துமே தொண்டையினிற் சிலேட்டுமந்தானே. ()

தான்மூக்கு மணமறியா தேயிருத்தல் தருநாக்கு முரிசையறி யாதிருத்தல், வான்மலங்கள் கபிலநிற மாயிருத்தல் மாசற்ற நாடியதி சூட்சுமமாதல், தூனடி சக்கரம்போற் சுற்றியோடல் சுகதுக்க மொன்றுமறியாதிருத்தல், வேனிந்த விவரமெலாங் காணுமாகில் மீறுமசாத் தியமென்றே விளம்பிடாயே. (சய)

விளம்பியதோர் வழக்கினிட வகையறுத்தல் மிக்கான சோதிடந்தான் காலஞ்சொல்லல், வளம்பியதோர் தர்க்கமது வாதுகூறல் வயித்தியந்தான் பிணிமூன்றின் வண்மைசொல்லல், தளம்பியதோர் சாஸ்திரத்தின் படியேபார்க்கில் தாக்கானவிக பரமிரண்டுக் குண்டானன்மை, உளம்பியதோர் சாஸ்திரமில் லாமற்செய்தா லுற்பவிக்கு மியமகதி யுடன் கண்டாயே. (சக)

நாடி தெரியாதபேர்.

உற்பவித்த நாடிதெரி யாதபேர்கள் உண்டவர்க்கும் அப்பியங்கனம் பண்ணினோர்க்கும், கற்பவித்தப் பட்டினியா யிருந்தபேர்க்கும் கனக்கவழி நடந்தவர்க்கு மிளைத்தவர்க்கும், குற்பவித்த பேய்பிடித்தோர் கோபத்தோர்க்கும் கூட்டுறவாய் ஸ்திரீபோகம் பண்ணினோர்க்கும், பற்பவித்த பயித்தியந்தான் பிடித்தபேர்க்கும் பகர்கஞ்சா கள்ளபிணி பாவிப்போர்க்கே. (சஉ)

பாவித்த வாயுசா தனையுள்ளோர்க்கும் பகர்கின்ற கோழிமுதலிறைச்சிமீன்கள், சேவித்துத் தின்னவர்க்குங் குமாகண்டம் சிறுகாக்கைவலியுளர்க்கும் பாஷாணங்கள், கோவித்த கெந்தகமும் விஷங்களான கொடூரமா மருந்துகளைத் தின்னபேர்க்கும், நாவித்த விவர்களுக்கு நாடிதானும் நடக்கைதான் செவ்வையிலே நடவாதென்னே. (சஙூ)

இலங்கண மூடையபேர்.

என்னவே சுரந்துவக்கி லியற்கைகேளாய் இசைந்தவன்று பட்டினியே தானிருந்து, கன்னமே யிரண்டாநாட் காலையிற்றான் கைகழுவிப் பல்விளக்கி நாவழித்து, முன்னமே முகங்கழுவி வெந்நீராலே முழுகாது மறையவே வேட்டிகட்டி, பன்னமே யிடக்கைக்கி ழாய்ப்படுத்துப் பட்டினியே தானிருக்கப் பண்புதானே. (சச)

பண்பான மூன்றுநாட் காலையிற்றான் பல்விளக்கி முகங்கழுவி வி பூதிசாற்றி, துண்பான சூரியநமஸ் காரம்பண்ணிச் சுருதியைத்தா னயந்தோர்க்குத் தானமீந்து, வண்பான வயித்தியர்க்கு வரிசைநல்கி மகா செபங்கள் பண்ணியபின் மத்தியானம், நண்பாகநாவிலொன்றாய்க் காய்ந் தவென்னீர் நலக்கருந்தித் தேர்த்தொருவிற்றருந்திடாயே. (௬௫)

அருந்தியே நாலானாள் கழித்துமற்ற ஐந்தானாள் கற்கமன்ன சாரமீந்து, நருந்தியே நவசுரந்தான் கழிக்குமட்டு னண்பான கற்கமொடு கஷாயநல்கத், தருந்தியே சுரமதுதான் தணியாவிட்டால் சாந்தகமாங் குணமான வைத்தியர்கையில், வருந்தியே தாம்பூலதட் சணையுமீந்து மாத் திரைதான் செந்தூர மருவியுண்ணே. (௬௬)

உண்ணவே பத்தியமாய்ச் சுரம்விட்டேகு மோங்கியதோர் சுரந்தணிந்த பின்புதானும், விண்ணவே விரேசனங்கள் வாங்கிக்கொள்ள மேன்மையாஞ் சடமதுதான் மெலியாதாகும், வண்ணவே வாதசுரந் தனக்கேழ்நாளு மாசற்ற லங்கணந்தான் மார்க்கமாகும், பிண்ணவே பித் தசுரந் தனக்கோராறு பேரான லங்கணந்தான் புகலலாமே. (௬௭)

புகலான சிலேட்டுமசுரந் தனக்குத்தானும் புகலுமோ ரொன்பதுபவாசமாகும், வகலான வாதசுரந் தனக்குத்தானும் மகத்தான வுபவாச மூன்றுநாள்தான், திகலான பித்தசுரந் தனக்குத்தானும் சிறிதாகப் போசனந்தா னிடவுமாகும், நகலான சிலேட்டுமமாஞ் சுரந்தனக்கு நற் சூடு கஞ்சிகொடுத் திடநன்றாமே. (௬௮)

நன்றான வாதசுரந் தனக்குக்கஞ்சி நவநாழிக் குள்ளாக நாட்டலாகும், பன்றான பித்தசுரந் தனக்குக்கஞ்சி பத்துநா ழிகைதன்னிற் கொடுக்கலாகும், மன்றான சிலேட்டுமசுரந் தனக்குக்கஞ்சி மத்தியா னந்தன்னில் வார்க்கலாகும், மின்றான விக்கிரம விதியேசெய்தால் மேன்மையா மருந்தென்றே விளம்பலாமே. (௬௯)

இலங்கண மில்லாதபேர்.

விளம்பவே யதிசார மானபேர்க்கும் மிகுந்தகெற் பனிஸ்திரீக்குங் கிழவனுர்க்கும், இளம்பவே யிளைத்தவர்க்குங் குழந்தைகட்கு மிடுக்கண்ணேய்க் காரருக்குஞ் சயரோகிக்கும், உளம்பவே யுபவாச மானபேர்க்கு முறுபித்த ரோகிக்குங் கிராணியோர்க்குந், துளம்பவே தொந்தமாம் ரோகியர்க்குஞ் சூடுமுட் காய்ச்சலாஞ் சுகதேகர்க்கே. ()

தேகர்க்குங் கெசதுரக மேற்கொள்வோர்க்குஞ் சுமைபார மெந்நேரமெடுக்கின்றோர்க்குந், தாகர்க்குஞ் சலரோக மானபேர்க்குஞ் சஞ் சலத்தோர் மலபந்த மானபேர்க்கு, மாகர்க்கு மகத்தான யோகத்தோர்க்கு மங்கையொடு வெகுபோக மருவினோர்க்கும், வேகர்க்கும் பிரமியமாம் வேட்கையோர்க்கு மிகவாகு லங்கணமாம் விதியாகாதே. (௭௧)

விதியாக வயித்தியந்தான் செய்யும்பேர்கள் வேதமாஞ் சாஸ்திரத்தின் விரிவைப்பார்த்து, திதியாக தேகத்தின் செயலைப்பார்த்து தசநாடி தசவாயு திட்டம்பார்த்து, அதியாக வக்கினியி னிலையைப் பார்த்து அசாத்தியசாத் தியமிரண்டு மறிந்துணர்ந்து, மதியாக மருந்தினிட வண்மைபார்த்து மார்க்கமாய் வயித்தியத்தை வளமாய்ச்செய்யே.()

ஐந்தாவது சன்னிரோகநிதானம் முற்றிற்று. ஆகவிருத்தம்-உகo.

—(*)—

## ஆருவது
# குன்மரோக நிதானம்.

செய்யானகுன் மத்தினுற் பத்திதன்னைச் செப்பிடவே துவர்ப்பான புசிப்பினுலும், மையானமங்கையுடன் மார்க்கத்தாலும் வகையாகுங் கிழங்குவகை யருந்தலாலும், உய்யான மிளகுகா யுறைப்பினுலு முறுபசியை யடக்கிடினு மந்தத்தாலும், தையான சண்டாள கோபத்தாலுஞ் சலிப்பாலுங் குன்மம்வந்து தாக்கும்பாரே. (௧)

பார்க்கவே குருநிந்தை பண்ணினேர்க்கும் பாலகரைச் சிசுவைப் பட் டினிவைத்தோர்க்கும், மார்க்கவே மாதாவைப் பிதாவைநிந்தை வஞ்சனைதான் செய்தோர்க்குமடந்தைதன்னைக், கார்க்கவே கற்பழித்த காமுகர்க்கும் கருதியே சிவநிந்தை பண்ணினேர்க்கும், ஆர்க்கவே யஷ்டகுன்ம மணுகுமென்று அரன்சொல்லத் தேவிசொன்ன ளறிந்துபாரே. (௨)

செய்யவே யஷ்டகுன்மச் செயலைக்கேளாய் செயலான வாதகுன்மஞ் சூலைகுன்மம், எய்யவே பித்தகுன்ம மெரிகுன்மமாகும் ஏலான வலிகுன்மஞ் சத்திகுன்மம், தையவே சன்னிகுன்மஞ் சிலேட்டுமகுன்மஞ் சாகசமாங்குன்மமது யெட்டதாகும், கொய்யவே யிதினுடைய குணங்களெல்லாங் குறிப்பறிந் தொவ்வொன்ருய்க் கூர்ந்துபாரே. (௩)

### சூலை குன்மம்.

பார்க்கவே சூலைகுன்மம் பகரக்கேளாய் பருகியதோர் பதார்த்தங்கள் செரித்திடாது, தோர்க்கவே யசனந்தான் செல்லாதாகும் துருத்திகொண்ட காற்றதுபோல் வயிறுமுப்பும், ஊர்க்கவேயு ள்ளபெலன் குன்கெடுக்கு முடலுலரு னடைகுறையு மோச்சலாகும், வேர்க்கவே யடிவயிறு தனிலேவந்து மிகப்புரண்டு வில்லுப்போல் பிகுத்தமாமே. (௪)

### வாத குன்மம்.

பிகுத்தமாம் வாதகுன்மம் விளம்பக்கேளாய் மிகத்தானு நடைகுறையு மலம்விடாது, உகுத்தமா முடல்தானு மிகக்கடுக்கும் உறக்கமொடு தியக்கமா யுழலையாகுந், தகுத்தமாஞ் சரீமது கனத்துத்தோன்றும் சங்கையா யசனமிகத் தானுஞ்செல்லா, பிகுத்தமாம் பெலக்கேடாங் கைகாலோயும் பேசொணு நாவறளுந் தலையுனேமே. (௫)

பித்த குன்மம்.

நோம்பித்த குன்மத்தி னுட்பங்கேளாய் நுனிமஞ்ச ணிறம்போல முகமுமாகும், வாஞ்சத்தி வாந்தியுண்டாய் மனமறுக்கும் மயக்கமாய் நெஞ்சதனிற் கோழைகட்டும், காம்நெருப்பாய்த் தானிருக்குங் கைகா லோயுங் கடுவெய்யிற் கண்டவுடன் றலைசுழற்றும், மூமூத்திரஞ் சிவந்தி ருக்குந் தாகங்காணு முக்கியே மலம்விழு மூச்சுண்டாமே. (௬)

சிலேட்டும குன்மம்.

உண்டாகும் வாய்நீர்தா னிலைப்புண்டாகு முடலம்வற்றிக் கருத் தழியு மூரத்திரைக்கும், வெண்டாகும் பெலன்கெடுக்கு மசனந்தள்ளு மிக்கான தலையதுக்கும் வெளிறுமேனி, தெண்டாகு நெஞ்சுதனிற் பு கைச்சலுண்டாந் திடுக்கிட்டு நடுக்கலுமாந் தேகந்தானுந், திண்டாகுந் தலையெங்கும் பாரமாகுஞ் சிலேட்டுமமாங் குன்மமென்றே செப்ப லாமே. (௭)

சன்னி குன்மம்.

செப்பலாஞ் சன்னிகுன்மச் செயலைக்கேளாய் தியக்கமொடு மயக் கமாய்க் குளிருண்டாகும், அப்பமா மசனமிகத் தானுஞ்செல்லா அடி வயிற்றி லிரைச்சலுமாம் வாய்நீரூறும், உப்பமாய் வயிற்கழியு மூஷ்ண மாகு முவர்க்கும்வாய் நெஞ்சதனிற் புகைச்சலுண்டாந், தெப்பமாய் மூச்சதுவுஞ் சிதைந்தெழும்புந் தேகமெங்குங் குளிர்ச்சியுமாய்த் திடுக் குமாமே. (௮)

எரி குன்மம்.

திடுக்குமா மெரிகுன்மச் செயலைக்கேளாய் சிறுவயிற்றி லெரிந்து மே குடல்குமட்டும், வடுக்கும்வாய் நீர்சுழற்றுந் தலைவலிக்கும் வயிறு ப்பிக் கிறுகிறுக்கும் பிளிங்தேக்காகும், வெடுக்குமயிர் கால்தோறும் வியர்வையாகு மிகப்பொருமி வயிறுகழிந் திரைச்சலாகும், எடுக்குமே யுடலிளைக்கு மிரங்காதன்ன மெரியுமே யுடலெங்கு மிருமலாமே. (௯)

சர்த்தி குன்மம்.

இருமலாஞ் சத்திகுன்ம மியல்பைக்கேளாய் ஈரலுக்குள் ளெரிவா கு மேக்கமாகும், திருமலாந் தியக்கமொடு மயக்கமுண்டாஞ் சிறுவலி யு முண்டாகி வாந்தியாகும், பொருமலாம் பெலன்கெடுக்கு மலம்வி டாது போரான வக்கினிதான் மிகவுமுண்டாம், செருமலா னடைகுறை யு மருசியாகும் சிறுகரம் பெல்லாம்புடைத்துத் திமிருமாமே. (௰)

திமிராக வயிறூதுந் திரையுமேனி செடமுலைந்து கருத்தழியுஞ் சிதறுந்தூக்கம், வமிராக வயிரிரைந்து முன்போலாகும் வருத்தமா ய சனமிகத் தானுஞ்செல்லா, மூமிராக விலாவதனிற் சொருகலாகு முது குதண்டு வலிகாணு மிடுப்புநோவாம், கமிராகக் காயமது கடுப்புக்கா ணும் கனசுரமாய்ப் பொய்ப்பசியுங் காணுங்காணே. (௧௧)

காணவே பஞ்சபூதியத்தைச் சொன்னேன் கருத்துரைத்துத் தத்துவத்தைக் கருதிச்சொன்னேன், நாணவே நாடியிட நிதானந்தன்னில் நற்குறிப்புந் துர்க்குறியும் நாடிச்சொன்னேன், ஆணவே யஷ்டவிதப் பரிட்சைசொன்னேன் ஆக்கமாஞ் சுரமெல்லா மடங்கச்சொன்னேன், சாணவே சன்னிகுணஞ்சாத்யவசாத்தியம் சாற்றினேன் குன்மத்தின் சார்வைத்தானே. (௧உ)

ஆறவது குன்மரோகநிதானம் முற்றிற்று. ஆகவிருத்தம்-உஉஉ.

—(*)—

ஏழாவது

# சூலைரோக நிதானம்.

---

சார்வான சூலையிடத் தன்மைகேளாய் தக்கசிறைப் பட்டிருச்குந் தீமையாலும், ஆர்வான அறச்சுடுசோ றருந்தலாலு மறவுமே சலிப்பாலு மோட்டலாலுந், தார்வான சபைமிகுத்த சண்டையாலும் தகையான துவர்ப்பொசிப்பு புகைத்தலாலும், மீவான மோகத்தின் புணர்ச்சியாலு மிகுந்தபலி யுறுதலினாற் சூலையாமே. (௧)

ஆமென்ற வன்னத்துக் கிடையூறுபண்ணி யகதி பரதேசிகளை யடித்தபேர்க்குங், காமென்ற கற்புடைய மங்கைமாரைக் கருதியே மனதினிலிச் சித்தபேர்க்கும், வாமென்ற வாழ்மாத்தை வெட்டினோர்க்கும் வழிமறித்துப் பொருள்பறித்த மதிகேடர்க்கும், ஏமென்ற எச்சிறனைக் கலந்தபேர்க்கு மிகத்திலே நோவெய்திச் சூலையாமே. (உ)

சூலைதான் பதினைந்தின் சூட்சங்கேளாய் துளைக்கின்ற மேகத்தின் சூலையோடு, வாலையா முறியென்ற சூலைதானும் வாதத்தின் சூலையொடு பித்தசூலை, ஆலைதான் சிலேட்டுமமாஞ் சூலையாகு மாமமென்ற சூலையொடு கறைச்சூலையாகும், கோலகுன்மச்சூலையோ டுலர்த்துசூலை கொடிநிதம்பச் சூலையொடு உக்காரசூலையாமே. (௩)

ஆமென்ற சுரசூலை கெற்பச்சூலை அதிபக்கச் சூலையொடு தூரச்சூலை, பாமென்ற பதினைந்து சூலையாகும் பசியாலும் பழகியதோர் காடியாலுந், தாமென்ற சிலைநுதலாள் புணர்ச்சியாலுஞ் சருகிலையின் நீராலுஞ்சண்டையாலு, வேமென்ற ரசமருந்தின் வெட்டையாலு மிடுக்கான சூலைவந்து விளையுந்தானே. (௪)

மேகசூலை.

விளைமேக சூலையின்றன் விவரங்கேளாய் மிகக்கைகால் கடுப்போடு குடைச்சலாகுங், களைநீரு மலங்கட்டுங் கைகால்வேர்வை கசிவோடு களிருண்டா மேனியெங்கும், இளைமையவரிதழதுதான் சிவப்புமாகு மெரிச்சலுண்டாந் தேகமெல்லா மிளைத்துக்காணும், உளைவோடு சுரமாகுந் தாகங்காணு முறுகின்ற பிரமையா மயக்கமாமே. (௫)

முறிச்சூலை.

மயக்குகின்றமுறிச் சூலையின்றன் குணத்தைக்கேளாய் மறைப்பான வாண்குறியி னடியேயுற்று, அயக்கின்ற வழன்றுகீழ் முதுகைப் பற்றி அபானன்மே லடிக்குடலை யதிரச்சுற்றி, பயக்குகின்ற பாவியே வலிக்கும்போது படர்நாவி தனைநடுவிற் குழித்துவாங்கும், தயங்குகின்ற தலைவலியுஞ் சுரமுங்காணுந் தக்ககண்ணுஞ் சிவந்துநீர் ததும்புந்தானே. (௬)

வாதசூலை.

ததும்புமே கால்கைதா னுளைவுகாலுந் தடிப்பாகத் திமிருண்டாய்த் தூக்கமிஞ்சும், வெதும்பியே யங்கமெலாங் குளிருஞ்சற்றே மெய்தானும் பளபளக்குங் கனமுங்காணும், கதும்புமே வின்னுணிக் கடூரமாகுங் கடுத்துமே சிறுநீறுஞ் சிவந்துவீழும், அதிர்ந்துமே மெய்யெல்லாங் குடைந்துநோகு மதிகரிக்கும் வாதசூலை யாண்மைதானே. (எ)

பித்தசூலை.

ஆண்மையாஞ் சரீரம்வற்றிக் கடுப்புமுண்டா மாறவே கைகாலுளைந்து கனத்திரண்டு, நோண்மையாய் நோய்மிகுந்து நோக்கங்கெட்டு நுணுக்கமாந் தாதுவெல்லா நொய்யதாகி, கேண்மையாய் சடத்தினிடச் செழுமைமாறித் திரங்கியே மிகமின்னித் தெளிவில்லாமல், பேண்மையா மயக்கமொடு பெலக்கேடாகும் பித்தமாஞ் சூலையென்றே பேசலாமே. (அ)

சிலேட்டும சூலை.

சூலையாஞ் சிலேட்டுமத்தைச் சொல்லக்கேளாய் தொண்டையெல்லாம் வலித்துமே கோழைகட்டும், ஆலையா மடிவயிறு தன்னினுேவா மங்கமெலாம் புண்போல வழற்றல்காணும், வேலையா மெய்யெங்கும் வியர்வைதோன்றும் மெய்வெளுத்து நகக்கண்ணு மிரத்தமில்லையாகும், பாலையா யிருந்தவுடல் பஞ்சுபோலாம் பலகாலம் வாயூறிப்பாவுமாமே. (௯)

ஆமசூலை.

பாவுமே ஆமசூலையின்குணந்தான் பாவான வசீரணத்தின் பண்பினாலுந், தாவுமே தண்ணீர்தான் குடித்தலாலுந் தகுந்தபுளிப் புக்கசப்புத் தித்திப்பாலும், ஊவுமே யுபவாசம் பண்ணலாலு முறவளர்ந்த மந்தமொடு சீதந்தானும், வாவுமே வயிறோடு விலாப்பக்கங்கள் வலித்துமே கடுப்புமிகக் குத்துண்டாமே. (௰)

உக்காரசூலை.

குத்துமுக் காரசூலையின் குணந்தான் கோர்வையாய் விலாவுதனில் முதுகில்நெஞ்சில், அத்தியினி னுபியினி லபானமாங்குதத்தி லதிகதுன் மாங்கிசந்தான் வளர்ந்துமேவிப், பத்துமனற் பருக்கைபோற் சலத்துவாரப் பதிநெருக்கி மூத்திரமாங் கிரிச்சியுண்டாய்த், தத்துசடங் கடுப்பெடுத்து மதிகலங்கித் தளர்ச்சியொடு மயக்கமாய்த் தள்ளுந்தானே. (௧௧)

### துன்மசூலை.

தள்ளுகுன்மச் சூலைதனைச் சொல்லக்கேளாய் தளருமல மூத்திரந் தான் சிக்கலாகி, வள்ளுவயிற் பொருமிசத்தி யிரைச்சல்மூர்ச்சை வலித்தெரித்துச் சூலைபோல் வயிற்றிற்றோன்றி, தெள்ளுவாய் நீரூறலேப் பமுண்டாம் சிறுத்துமே யூணுமெத்த வெதும்பலாகி, அள்ளுமே யங்கமெலா மழற்சியாகு மதிகமா யுடலுலர்ந் தருசியாமே (௧௨)

### உலர்த்துச்சூலை.

உடலான வுலர்த்தியென்ற சூலைதன்னை யுரைக்கவே யூஷ்ணமாம் பித்தந்தன்னால், வடலான வக்கினியின் வறட்சிதன்னால் வலித்துத்தான் மெத்தவே வீங்கித்தோன்றும், குடலான வாதத்தால் குன்மத்தானுங் குடிலமாய்க் கனத்துமே யுடம்பெல்லாமேனும், தடலான வுள்வலியும் புறவீக்கமாகித் தடித்துலர்ந்து சடமெல்லாந் தயங்கும்பாரே. (௧௩)

### நிதம்பச்சூலை.

தயங்குகின்ற நிதம்பமாஞ் சூலைதன்னைச் சாற்றிடவேபிள்ளையது தனைப்பெற்றக்கால், உயங்குகின்ற யோனிவாய் வருத்தமாகி உள்ளடங்கி யிரத்தமுளைத் தேங்காய்போல அயங்குகின்ற யோனிவா யடைத்துக்கொண்டு அசைக்கிலங்கு நீர்பெருகிச் சசனத்துள்ளே, மயங்குகின்ற சரீரமெல்லாம் வாடியூதி மாசற்ற சடந்தானும் வெளுப்புமாமே. ()

### கறைச்சூலை.

மாசற்ற கறைச்சூலை வண்மைகேளாய் மருவுதிரந் தான்திரண்டு தோலைப்பற்றித், தேசற்ற வளையம்போற் றிரண்டுநொந்து சிறந்திருந்த நரம்பின்வழித் தங்கித்தங்கிச், கேசற்றநோவாகிக் கீழ்முதுகைப்பற்றிக் கெட்டியாய் வலித்துமே நோவுமுண்டாங், காசற்ற கைகாலும் வலியதாகுங் கருத்தழிந்து மேனியுமே கறுகும்பாரே. (௧௫)

### சுரசூலை.

கருகுகின்ற சுரசூலை கருத்தைக்கேளாய் கடிந்திரண்டு பக்கமாஞ் சூலைதோன்றி, வருகின்ற வாய்தனிலே ரத்தமுண்டாய் வடிவெல்லாஞ் சுரந்தோன்றி யுளைச்சலுண்டாய்ச், சொருகின்ற தேகமெல்லாஞ் சூலையுண்டாய்ச் சுருக்கியே வயிறதுதான் வலித்துநோகுந், தெருகின்ற நெஞ்செரிந்து வாய்நீரூறிச் செரியாமல் வாந்தியாய்த் தியக்கமாமே. ()

### பக்கச்சூலை.

தியக்கான பக்கமாஞ் சூலைகேளாய் திருகியே யண்டத்திற் பொருமிநொந்து, உயக்கான சுரந்தோன்றி வலித்துநொந்து உடம்புப்புண் போலுளைந்துத் தலைவலியுமாகிப், பயக்கான பக்கத்திற் குத்தலுண்டாய்ப் பாரித்துக் கனத்துமிகத் திமிருமுண்டாய்க், கயக்கான கைகாலு மோச்சலாகிக் கண்புகைந்து கருமாறிப் பாய்ச்சலாமே. (௧எ)

கருப்பச்சூலை.

பாய்ச்சல்கெற்ப சூலையினைப் பகரக்கேளாய் பண்பான மருந்திட்டின் குணத்தினாலும், வாச்சவஞ் சனையாலும் சூனியத்தாலு மாசற்ற காயமது வேட்கையாலும், பீச்சவே மகப்பேறி லுதிரத்தாலும் புரண்டுசிக்கிக் கீழ்வயிற்றி லிரத்தம்வீழ்ந்து, கேச்சலாய்க் கெற்பம்போற் புரள்வுற்றாறிக் கீழ்வயிற்றில் வலிதோன்றி மயக்கமாமே. (௧அ)

தூரச்சூலை.

கீழ்வயிற்றிற் றூரமாஞ் சூலைகேளாய் கெடியுண்டி மறுத்துமே வாய்நீறூரிப், பாழ்வயிற்றி னெஞ்செரிந் தீரல்பற்றிப் பக்கமன்றிச் சிரத்தோடு வயிறுமூதி, ஆழ்வயிற்றிற் றிரண்டுமே புரள்வுற்றேதான் னடிக்கடிவந் தமர்ந்தொதுங்கி யெழும்பிமீளுங், கீழ்வயிற்றில் வெளிபட்டு வுதிரஞ்சிக்கும் கிளத்துமல சலந்தானுஞ் சிக்கிப்போமே. (௧௯)

சிக்கான பதினைந்து சூலைதன்னில் சிறப்பாகக் குணகுணத்தின் செயலைச்சொன்னேன், அக்கான வசாத்தியமாஞ் சூலையாறு ஆகாதகுணங்கண்டாய் முறியென்றசூலை, உக்கான வுக்கார சூலைசிலேட்டுமமுறுதிகுன்மச் சூலையோடாமசூலை, நிக்கான நிதம்பமாஞ் சூலைசாத்தியம் நீங்கியதசாத்தியமாஞ் சூலையென்னே. (௨௰)

ஏழாவது சூலரோகநிதானம் முற்றிற்று. ஆகவிருத்தம்-௨௬௨.

—(*)—

## எட்டாவது,

# வாதரோக நிதானம்.

என்னவே வாதந்தா னென்பதாகு மிகத்திலே மனிதர்களுக் கெய்துமாறு, பின்னவே பொன்தனையே சோரஞ்செய்து பெரியோர்கள் பிராமணரைத் தூஷணித்தும், வன்னவே வச்சொத்திற் சோரஞ்செய்து மாதாபிதா குருவை மறந்தபேர்க்கும், கன்னவே வேதத்தைநிந்தை செய்தபேர்க்குங் காயத்திற் கலந்திடுமே வாதந்தானே. (௧)

தானென்ற கசப்போடு துவர்ப்புறைப்பு சாதகமாய் மிஞ்சுகினுஞ் சமைத்தவன்னம், ஆனென்ற வாறினது பொசித்தலாலு மாகாய தேறலது குடித்தலாலும், பானென்ற பகலுறக்க மிராவிழிப்பு பட்டினியே மிகவுறுதல் பாரமெய்தல், தேனென்ற மொழியார்மேற் சிந்தையாகில் சீக்கிரமாய் வாதமது செனிக்குந்தானே. (௨)

வாதம் வர்த்திக்குங்காலம்.

வாதவர்த் தனைகால மேதோவென்னில் மருவுகின்ற வானிகர்க்கடகமாகும், ஆதவைப் பசியோடு கார்த்திதன்னி லடருமே மற்றமாதங்கடன்னில், போதவே சமிக்கின்ற காலமாகும் பொருந்தியே யிவர்தொழில்தான் கண்டிறத்தல், காதவே கண்மூடல்கை காலசைத்தல் கடிந்தோட்ட முடக்கலொடு நீட்டலென்னே. (௩)

என்னவே வாதமது எண்பதாகு மேற்றமாம் பேருடைய வெழி லைக்கேளாய், வன்னவே வாதஸ்தம்பம் வாதகர்ஷணம் வகையான கரஸ் தம்பந் தலஸ்தம்பந்தான், பொன்னவே பூசுவா தத்திேனாடு பெரியகா ளாஞ்சகமு மூருஸ்தம்பம், குன்னவே வாதகர்ன் னங்குரிஷகிரிஷம் கூ றுன நரித்தலையின் வாதமாமே. (ச)

தலைக்கும்ப வாதமொடு மலைத்தகம்பம் தருக்கான பாணிகம்பங் கூனிவாதம், அலைய ஆகுனிவாதம் அஷேவகந்தான் அதிவாதம் உபக தமும் நெற்றிசூலை, கலைகர்ன சூலைசெவி படுவாயாகும் கடுபக்கவாதமொ டு பக்ஷவாதம், திலையபேய் வாதமொடு பிராணலயந்தான் தருக்கான ச லஸ்தம்பமொடு சந்துவாதமாமே. (ரு)

சந்துவா தத்தோடு சகனவாதந் தரித்தவற் புதவாத முரகன்வா தம், உந்துமுர காரியொடு வஸ்வதம்பம் உறுதிபாசத்தம்பம் நேத்திர பவுத்திரம், அந்துதண்ட வாதமொடு வஷ்டதந்திரம் அதிவசன வாத மொடு மகாவாதந்தான், முந்துமிருத்து வாதமோ டுதரவாதம் முகிழ்மூ த்திர வுதிரவா தமுமாமென்னே. (சா)

என்றசுக்கில வாதஞ்சவ் விரங்கவாத மெழில்ஊர்த்துவ வாதமொ டு வஞ்ஞானத்தம்பந், தென்றசிரக் கம்பவாதமுஞ் சதஸ்தம்பம் செய வச்சிர ரூபமொடு கண்டக்கிராகம், நன்றதாம்நகாரியொடு பதிதவாதம் நலியோனி சூலையொடு கெற்பசூலை, குன்றவஷ்ட சூலையொடு குடல்வா தந்தான் குறியசுவ வாதமெச்சு வாதந்தானே. (எ)

தான்மூடு வாதமாம் வசுவாதந்தான் தனுபீஜத் தம்பமொடு தந்தி ரவெட்டி, வான்வாத சுரோணிதஞ்சித் துவாதசுரோணிதம் மகத்தான வைகிதவா தச்சுரோணிதம், ஊனுதிர வாதசுரோ ணிதந்தன்னேடு உ றுபயித்ய வாதசுரோ ணிதமுமாகும், தேன்சிலேட்டும வாதசுரோ ணி தந்தான்மிக்கச் சினத்துதர வாதசுரோ ணிதமுங்காணே. (அ)

காணவே குணவவதா னகமாம்வாதங் கண்டகவ தானகமாம் வா தமாகுந், தேணவே சிரக்கம்பவவ தானகந்தான் சிறியதோர் வாதத் தின் றலைநோக்காடு, பூணவே பித்தத்தின் றலைநோக்காடு புகழான சிலே ட்டுமத்தின் றலைநோக்காடு, சாணவே சன்னிவாதத்தின் றலைநோக்காடு தருாத்த பித்தத்தின் றலைநோக்காடே. (கூ)

நோக்கான கிருமிகந்த தலைநோக்காடு நுதற்சூரியா வர்த்தமொடு சந்திராவர்த்தம், ஊக்கான கர்னவா தந்தன்னேடு ஒருதலையின் வர்த்த வா தமுமேயாகும், வாக்கான வாதகர்ன சூலையோடு மருவியதோர் பித் தகர்ன சூலையாகுந், தேக்கான சிலேட்டுமகர்ன சூலையோடு செயமான கிருமிகர்ன சூலைதானே. (ய)

தானன தந்தவா யுவின்றன்னோடு தாக்கான வாதந்தா னென்பதா கும், ஆனன வரன்றனையே மதியாமாந்தர் அகதிபரதேசியர்கட் கன்ன மீயார், கோனன குருமொழியை மறந்தபேர்கள் கொலைகளவு பொய்கா மங் குறித்தபேர்க்கு, ஊனன சடந்தன்னில் வாதம்வந்து உற்பவிக்கும் வேதத்தி னுண்மைதானே. (கக)

வாதஸ்தம்பம்.

உற்பவிக்கும் வாதமது எழுந்துபொங்கி உயர்காலின் புறவடியைக் குடைந்துபற்றித், தெற்பவிக்கும் வீக்கமாய்ச் செழும்பலுண்டாய்த் தேகமெங்கு ஞேவாகித் திமிருமாகி, விற்பவிக்கும் வில்லுபோல் வித னமாகி மிடுக்கான மாந்தனைப்போல் விதனமாகிப், பற்பவிக்கும் பான்ற னையே நினையாமூடர் படுகின்ற வாதஸ்தம் பமுமாம்பாரே. (கஉ)

வாதகர்ஷணம்.

பார்க்கின்ற வாதவுள் ளடியிற்சாணி பதித்துவைத் ததுபோலப் பாதமெங்கும், நோக்கின்ற குதினரம்புக் கால்களெங்குங் கொடிதான பாரமாய்த் திமிர்ப்புண்டாகி, வார்க்கின்ற வார்த்தைகள்தான் மிகவே செய்து வளைந்திடினு நிமிர்ந்திடினும் வசங்கொடாமல், ஏர்க்கின்ற காலு ளைக்கும் வாதகர்ஷணம் ஈதலற மில்லாதார்க் கெய்துங்காணே, (கங)

காஸ்தம்பவாதம்.

எய்தியே விரிவுதனி லிரண்டுகாலு மிசைந்தவுள் ளடிதனிலு மெரிந்துநோவாம், ஐதியே யக்கினியில் வைத்தாற்போல வங்கமெலா மிகவெளுத் துலர்த்தியாகும், பொய்தியே புரைதனிலே புழுக்களூர்தல் போலவே மிகவூர்ந்து நடைகொடாது, கைதியே வாயுலர்வுற் றுடல் கனக்கும் கணக்கான காஸ்தம்பங் கருதிப்பாரே. (கச)

தலஸ்தம்பவாதம்.

கருதியே மிகக்கனத்து முள்ளங்காலைக் கனக்கவே குடைந்துநொ ந்து கருகிக்காணும், வருதியே வணக்கஞ்சற் றிலாமலேற வலித்துமே மேனேக்கி வருத்தங்காணுஞ், சருதியே சடமுலர்ந்து மேல்முச்சுண் டாய்த் தாகமா யுடம்புலர்ந்து தளர்ந்துகாணுங், சருதியே கடுவுப்பு பு ளிப்புதன்னுற் கனவாதங் கோபித்தே தலஸ்தம்பங்காணே. (கரு)

பூசுவாதம்.

தம்பமா மலத்துவா ரந்தனைத்தான் தைத்ததோ ரம்புபோற் குடை ந்துநொந்து, உப்பமா முள்ளடியி னளவாய்ப்பற்றி உறுதியாய் மிகநொந் து குடைச்சல்காணும், நம்பனர் பதம்போற்று நார்கள்தன்னை நணுகி யே யுருக்குலைந்து நலிக்கப்பண்ணுங், கம்பமாங் கனத்துதிரம் வலியுண் டாக்குங் கனத்ததோர் பூசுவா தந்தானுமே. (கசு)

### காளாஞ்சகவாதம்.

வாதமாங் கால்கையிற் குறங்கிரண்டும் வகுத்துசந்து முறுக்கியே குடைந்துநொந்து, நாதமா நடைதானுந் தான்கொடாம னவிந்துமே முடமாகிக் கரடுகட்டிச், சேதமாஞ் சடந்தானு மிகவெளுத்துத் தின வோடு சிரங்குமாய்ச் சிலேட்டுமமாகிக், காதமா யருசியொடு மயக்கமா குங் கருதிய்கா ளாஞ்சகமாம் வாதமாமே. (௧எ)

### ஊருஸ்தம்பவாதம்.

ஆமென்ற வாதமது உள்ளடங்கி அடித்துடைதான் குறங்கிரண் டு மளவாய்ப்பற்றிக், காமென்ற கைகாலில் விரலுஞ்சுற்றிக் கனத்துமே சாணியது பொதிந்தாற்போலத், தேமென்ற சிரந்தனிலே பாரமுண் டாய்த் தேகமெங்கு மூதியே திமிருண்டாகும், நாமென்ற நடக்கொணு வொடுக்கமாகி நலியூருஸ்தம்பமது நணுகுங்காணே. (௧அ)

### வாதகர்ணகம்.

தம்பமா நடக்கும்போ துந்தரித்தும் தாவியே யுயரமா யெட்டும் போதும், வம்பமாய் வள்ளத்தி லிறங்கும்போது மயக்கமாய்த் தள்ளா டி இடைந்துவீழ்ந்தும், வெம்பமாம் பாம்புவிஷமேறும்போல மிக்கான சரீரமெல்லாந் தளர்ச்சியாகும், சிம்பமாம் புள்ளுப்போல் பரப்புகாணும் செறிவாத கர்ணகச்சி றப்புமாமே. (௧௯)

### குரிஷகிரிஷவாதம்.

சிறப்பான பாம்புவிஷம் போலேயேறிச் செறிவாக விறங்கிய் தோர் செய்கைபோலுங், துறப்பான சூரையா யரையிற்றட்டைச் சுழல வே சுருக்கித்தான் பற்றியங்கம், பிறப்பான பீறியதோர் குடலைப் போலப் பிதிர்கின்ற வன்போலும் பிரமியென்ன, முறப்பான தோ வில்முள்ளு பொதிந்தாற்போல முயன்றிடுங்காண் குரிஷகிரிஷ மூர்க் கந்தானே. (உ௰)

### நரித்தலைவாதம்.

மூர்க்கமாய் முயன்றுமுழங் கால்தான்வீங்கி முதிர்ந்தூரத்த முங் கிரண்டு முயற்சியாகி, நீக்கமாய் நின்றிட வொணுமற்றுனும் நிமிர்ந்தி டுகில் சந்துந்தான் முடக்கொணுமல், தீர்க்கமாய்த் துண்டித்து மிகச்சிக் கென்று செழுமை நரித்தலைபோல மிகவேவீங்கி, நார்க்கமாய் நாடியு மே படபடக்கும் நரித்தலையின் வாதமென்றே நவிலலாமே. (உ௧)

### தம்பவாதம்.

நவிலவே தோண்மீதுங் கரத்தின்மீது னலிந்துமெத்த வாகியே நோவுண்டாகும், கவிலவே கன்னமொடு நயனந்தானுங் கடுத்துமே விறு விறுப்பு மெரிவுங்காணும், துவிலவே துடிப்பாகுஞ் சிரசுதன்னிற் சுழற் றியே நாபிக்கீழ் வலியுமுண்டாம், அவிலவே யடிநாக்கி லழன்றுகாணு மலருமே வருகும்ப வாதந்தானே. (உஉ)

### மலேத்தகம்பவாதம்.

கும்பமாங் கையின்மணிக் கட்டுதன்னிற் குவிந்தரையில் மொத் தைபோ லூரத்துக்காணுந், தும்பமா மங்கங்கள் துடிப்பதாகுந் துண்டு மே கால்கையு நடுக்கமாகும், அம்பமா மரைக்குங்கிழ் திமிருண்டாகு ம தாமே மிகக்கறுத்து வெடிப்புண்டாகும், வம்பமாம் வாயுத்தான் புரியு நாற்றம் வருமலேத்த கம்பத்தின் மார்க்கமாமே. (உ௩)

### பாணிக்கம்பவாதம்.

மார்க்கமாய் வாயுவுமாய் மெய்நிறைந்து வயிறுதனிற் பசியிலா தூணுமற்று, நார்க்கமாய் ஞாலத்து நடக்கையற்று நடுக்கமாங் கையிர ண்டுந் திமிருமுண்டாம், ஊர்க்கமா யுறக்கமில்லா துணர்ச்சியற்று யுத றியே சரீரமெங்கு முலர்ந்துகாணும், பார்க்கமாய் வாய்விட்டு அலத்த லாகும் பாணிகம்ப வாதத்தின் பாங்குதானே. (உச)

### கூனிவாதம்.

பாங்கான மலபாண்டப் பையிற்றூனும் பண்பாகத் துடங்கியே மலத்துவாரம், நீங்காம லடக்கியே நோவுமாகி நினைவில்லாச் சர்த்தி யொடு மயக்கமாகித், தேங்கான தேகமெங்கும் வலியுமாகிச் சீதளமாய் க் குளிர்ந்துமே காணுங்கண்டாய், கோங்கான கோழிப்பே னூர்தல் போலுங் குறிகாணுங் கூனியாம் வாதந்தானே. (உ௫)

### ஆதுனிவாதம்.

கூனியே தேகமெங்குங் குத்தலுண்டாய்க் குளிர்குளிர்ந்தே யிருமி யே வாய்நீரூறி, ஆனியே யங்கமெல்லா மசைதலாகி யடிக்கடிக்கு வியர் வைதா னதிகமாகி, மேனியெல்லாங் குறுகியே யூதலுண்டாய் வெ ளுக்குமே சரீரந்தான் வீக்கமாகும், பாணியே யடிக்கடிக்கு வருந்திக் கேட்கும் பண்பான ஆகுனியின் வாதந்தானே. (உ௬)

### அஷேவகவாதம்.

வாதமே கோபித்துச் சரீரந்தன்னில் வயிறுவிலாப் பக்கங்கள் வா டியோடி, நாதமே யுட்புகுந்து இருபத்தஞ்சு நலமறிய ஈரலேத்தான் பற் றிநொந்து, காதமே கைகாலு மோய்ந்துபோகுங் கனக்கவே நோவாகிச் சுருளநொந்து, ஆதமே யங்கமெல்லா மசைதலாகு மஷேவகமாம் வாத த்தி னுண்மைதானே. (உ௭)

### வாதஉபகதம்.

ஆண்மையாங் காலோடு கையுஞ்சந்து மங்கமெலா மிகத்திமிர்த் துச் சாணிதானும், பூண்மையாய்ப் பூசினது போலேகாணும் புரண்டு தான் விறுவிறுத்துப் புளகமாகிப், பாண்மையாங் காதசையு மூஷ்ண மாகிப் பசித்துமே மிகநாணி நடைகொடாது, வாண்மையாம் வாட்ட முறு மயக்கமாகும் வாதவுப கதந்தன்னை வகுத்தவாறே. (உ௮)

## நெற்றிசூலவாதம்.

வாருன நயனந்தான் புருவமற்றை மத்தியத்திற் குடைந்துமே மூக்குத்தண்டு, கூருனகுரலினைத்தான் பற்றிநொந்து குடைந்துமே கை யோடு கால்கள்ரண்டும், ஆருன அங்கமெலாங் கடுப்புண்டாகு மழுகுர லாய் நித்திரையு மயக்கமாகுந், தேருன சிரசுதனிற் குத்தலுண்டாம் சி றுநெற்றிச் சூலையின்றன் செய்கைதானே. (உகூ)

## கர்னசூலவாதம்.

செய்கையாஞ் செவித்துவாரந் தன்னினின்று சிக்கெனவே குச்சி கொண்டு குடைந்தாற்போலச், சைகையாய் நோவுண்டாய்ச் சலிக்குஞ் சிந்தை சலத்தின்பேல் மனதுண்டாய்த் தாகமுண்டாம், வைகையாய் வ யிறுதனில் மந்தமுண்டாய் மயக்கமாய் மனதுதனிற் பயமுமுண்டாய் க், கைகையாய் வாய்க்கசந்து புளிப்புண்டாகுங் கர்னசூலையின் குணத் தைக் காணுங்காலே. (௩௰)

## செவிபடுவாதம்.

காணுமே செவிதனிலே சத்தம்போலக் கடலிரைச்சல் போல வே முழக்கங்காணும், நாணவே செவியுறுதல் நரம்பைப்பற்றி நனைவு களி மண்கொண்டு அடைத்தாற்போலத், தோணவே தொண்டைத னிற் கபந்திரண்டு சுப்பிரமாய்க் கட்டியாயிறுகிவீழும், ஊணவே பிறர் சத்தஞ் செவியிற்கேளா துண்மையாஞ் செவிபடுவாதத் துண்மைதா னே. (௩க)

## பக்கவாதம்.

உண்மையா யுடம்பெல்லாம் வாயுவாகி உயர்கின்ற நாடியது அ சைவு மின்றி, கண்மையாய்க் காயமீதினிலேயேறிக் கசகியே யிழிந்து மே வலித்துக்காணும், பண்மையாய்ப் பக்கத்தி விசிவுமுண்டாய்ப் பா ரித்துப் பணைக்கையுங் காலுங்கோணும், வெண்மையா யுடம்பெங்கும் வியர்வைகாணும் மெலிவுபக்க வாதத்தின் விவரந்தானே. (௩உ)

## பக்ஷவாதம்.

தாஞன கால்கோணிச் செத்தாற்போலத் தாக்கான தரைதனிலே நடக்கொஞதது, காஞன கைகளொன்றும் பிடிகொடாது கனமான உ ணர்ச்சியின்றி கைகள்சோரும், மாஞன மயிர்க்கூச்சுந் திமிர்ப்புண்டா கும் வாய்தானுங் கோணியே தண்ணீர்வீழும், பேஞன பித்தம்போ லழன்றுகாணும் பிறிவுபட்ச வாதத்தின் பெற்றியாமே. (௩௩)

## பேய்வாதம்.

பெற்றியாம் பெருமையாங் காலுங்கையும் பெருவயிறு நெஞ்சோ டு விரலுமூக்கும், எற்றியா மெறிகழுத்து மெங்கும்பற்றி ஏக்கமாய் நொந்துவுடம் பெங்கும்வீங்கி, உற்றியா மூணவே திமிர்த்தெடுத்து வு றுதியாய்ப் பிடிக்கவு மொஞமலாகும், சத்தியாய் வாய்க்கசந்து மயக்க மாகுந் தரித்திடவொண் ஞதுபேய் வாதந்தானே. (௩ச)

### பிராணலயவாதம்.

ஞாதமாய் வலித்துமே கண்கள்தானும் வரிசையாங் கருவிழியிற் சோதிதன்னில், ஊதமாய் முழுவெளுப்பாய் தான்மறைந்து உக்கிரமாய்ப் பருமுதுகே கிட்டலாகும், நாதமாய்க் கையிரண்டு காலும்வற்றி நடுக்குமே யுண்டாகி நலியுந்தேகம், வேதமாய்ச் சொன்னதுதான் தீராதென்று விளங்குபிரா ணலயமாம் வாதந்தானே. (௩௫)

### சலஸ்தம்பவாதம்.

தானென்ற மலத்துவா ரத்திேனாடு தாக்கியே சலத்துவா ரந்தொடங்கி, வேனென்ற நீரிறங்கும் போதுதானும் வெடிபுண்ணில்நோவு போற் கிலேசம்பண்ணும், வானென்ற மலங்கடுத்துச் சிறுகிவீழும் மயிர்க்கூச்சுண் டாகியே வருத்தம்பண்ணுந், தேனென்ற தித்திப்புப் போல்நீராகும் சிறுகிவிழுஞ் சலத்தம்பச் செய்கையாமே. (௩௬)

### சந்துவாதம்.

செய்கைதான் சந்துகளு மிகத்திமிர்ந்து சடமெங்கு நொந்துமே மிகவழற்றி, நைகையாய் நளுத்துமே மயிர்க்கூச்சிட்டு நாணியே முன்போல நடைகொடாது, மைகைதான் மயக்கமொடு வாய்நீரூறும் வரண்டிடுமே நாவுதா னடிக்கடிக்கு, கைகால்தான் றரணிதனிற் றரிக்கொணுது சஞ்சலிக்குஞ் சந்துவாம் வாதங்கேளே. (௩௭)

### சகனவாதம்.

கேளுமே கழுத்தின்கீ ழரைக்குமேலுங் கெடியான கரமிரண்டு மிகவேநொந்து, வாளுமே சரீரமெல்லாங் கனத்திருக்கும் வாலிபர்க்கு மனங்கண்ணு மயக்கமாகும், எளுமே யிரண்டுகண்ணு மெரிச்சலுண்டா மேற்றமாய் சலந்தானு மிறுகிக்காணுந், தேளுமே கொட்டினது போற்கடுக்கும் சகனவா தத்தினிட தீர்க்கந்தானே. (௩௮)

### அற்புதவாதம்.

தீர்க்கமாய் ஸ்திரீசங்கம் பண்ணும்போதுந் திடுக்கெனவே வார்த்தை கோபித்தபோதும், ஊர்க்கமா யுறத்துதான் பாடும்போதும் உண்ணுமவல் சச்சாயம் பாக்குத்தானும், ஆர்க்கமாய்த் தட்டியே சடித்தபோது மழகான முகந்தன்னில் வாயுகோபித், தார்க்கமாய் மிகச்சிதறி வாயுங்கோணுஞ் சாங்கமா யற்புதவா தந்தானுமே. (௩௯)

### உரகவாதம்.

அற்புதமாய் நோவாகிப் புருவங்காது அங்கத்திற் பாதிதான் வலித்தெப்போதுந், தற்புதமாய்க் கோணியே தலையும்வாயுந் தாவவே மிகநடுங்கிக் குளிர்ந்துகூசும், விற்புதமாய் விழிகளுந்தான் மிமைப்புருது மெலிவாகிச் சரீரமெல்லாம் வியர்வையாகும், புற்புதமாய் வாய்நீரு மிகவேயூறும் புகலுமோ ருரகவா தத்தின்பேரே. (௪௰)

### உரகாரிவாதம்.

போரான நெஞ்சுடனே குரலுநொந்து பெருமீரல் தன்னிலே நோக்கிவாயு, ஆரான வன்னத்தை இறங்கொட்டாம லார்வசனங் கொள்ளாம லுதரம்விம்மிப், பாரான வாயுதான் மிகவுமூறிப் பாரமாய் நெஞ்சடைத்துப் பசத்திருக்குந், கூரான மேனியுமே கூச்சலுண்டாம் கொடிதான வுரகாரி வாதமாமே. (சக)

### ஆசுவதம்பவாதம்.

வாதமா யுடல்வெளுத்து வடிவெல்லாநேம் மயக்கமோ டிருமலாயிளையுண்டாம், நேதமாய் நெஞ்சடைத்துப் பொறிகலங்கும் நெருப்பாக உடல்காணு நெடுமூச்சுண்டாம், கோதுதான் மயக்கத்தில் மருத்தினீட்டால் குளிர்ச்சியாய்க் கோபிக்குங் கூச்சலுண்டாம், பாதந்தான் றிமிருண்டாய் முட்போலாகும் பருத்தஆ சுவதம்பம் பகாலாமே. (சஉ)

பகரவேவாதமது கோபித்தப்போ பண்பாக ஸ்திரீகோஷ்டி யதுதான்செய்யில், நகரவே வெகுதூர வழிநடக்கில் நளிரான காற்றுமே பனிமேற்பட்டால், மிகரவே காய்கள்கனி கிழங்குதன்னை மிகவருந்தி மீறியே தயிர்தான்கொண்டால், முகரவே முதுகெலும்பை முறுக்கிநொந்து முழங்காலுங் கணைக்காலுங் கடுப்புண்டாமே. (சந)

### பாசத்தம்பவாதம்.

கடுத்துமே சரீரமெங்குஞ் சோம்பலாகிக் கண்மயங்கிப் புகைந்துமே கூசிக்காணும், வடுத்துமே சரீரமெல்லா மிகவும்பற்றி வாய்வரண்டு புளித்தேங்காய் மந்தமாகி, நடித்துமே நாடியெங்கும் படபடத்து நாம்போடு சதைகளெல்லாம் பித்தமாகும்; அடுத்துமே இவ்வாத மசாத்தியமாகு மடுபாசத் தம்பமென்றே யறையலாமே. (சச)

### நேத்திரபவுத்திரவாதம்.

அறையவே நெற்றியொடு புருவங்காது அதட்டியே நோவாகிக் குடைச்சலாகும், நிறையவே யுடம்பெங்கு மூதலாகும் நிற்கவுந்தா ணொட்டாமற் றள்ளிப்போடுங், குறையவே தேகமெங்குங் குடைச்சலாகும் குறுவியர்வை மயக்கமொடு கூச்சலுண்டா, மறையவே நேத்திரபவுத்திரமுமாகு மறைசொன்ன படியானும் வழுத்தினேனே. (சரு)

### தண்டகவாதம்.

வழுத்தவே மூலாதா ரத்தைப்பற்றி மருவியே மேலேறி முதுகுமட்டாய், விழுத்தவே சிரசில்வந்து வியர்வுமாகி விகுவாக நோவாகி மேனிகண்ணிப், புழுத்தவே யுடம்பெங்கும் பஞ்சுபோலாம் புாங்கான மலசலமு மஞ்சளாகுங், குழுத்தவே தண்டகமாம் வாதந்தன்னைக் கூறினேங் குணமெல்லாம் கூர்ந்துபாரே. (சசு)

கூர்ந்திட்ட மலசலங்கள் துரிதமானல் கொண்டடக்கிப் பின்புதான் கொடிதாய்த்தள்ளி, ஊர்ந்திட்ட சரீரத்தி லுதிரமீறி உறத்தேய்த்துத் தலையதனி லெண்ணெய்வார்க்கில், வார்ந்திட்ட வழிநடக்கில் மெத்தவுந்தான் வாதந்தா னுற்பவித்து நடைகொடாமல், நார்ந்திட்ட நரம்போடு எலும்பிற்சூழ்ந்து நணுகியே யோடிநெஞ்சி லேறுந்தானே. (சஎ)

அஷ்டதந்திரவாதம்.

ஏறியே யுணர்ச்சியற்று உள்ளுக்குள்ளே இருந்தால்தா னழைத் தாற்போற் சத்தமுண்டாங், காறியே கண்ணீரு முண்டாய்வாய்நீர் கசந் துமே முன்போல விழித்திடாமல், பாரியே பற்கிட்டி மூச்சுமற்றுப் பல்காலும் பிதற்றியே பிணத்தைப்போலச், சீறியே யடிக்கடிக்குச் சி லேட்டுமமுண்டாம் செருக்குமஷ்ட தந்திரத்தின் செயலதாமே. (சஅ)

வசனுவாதம்.

தானுன தேகமெங்குந் தான்வலித்துச் சங்கற்ப விகற்பமாய்க் கி லேசமாகிப், பானுன பலகுணங்கள் மிகவேயாகும் பரமசிவ னடியார்கட் கணுகிடாது, தானுன துஷ்டரையே பற்றிநிற்குந் துடிப்புண்டாய்ச் சோரவே சொருகிவீழுந், தானுன காயமது கதித்துக்காணுங் கனவச னு வாயுவின்றன் கணக்குத்தானே. (சகூ)

மகவாதம்.

கணக்காகக் கதித்துமேல் வயிற்றைப்பற்றிக் கருகியே பொருமி த்தான் வலித்துவீங்கி, கிணக்காகக் கீழ்முதுகில் விதனமாகிக் கிஞ்சுக மாய் விதனவு ணற்பமாக்கும், வணக்காக மலசலந்தான் பலகாலுண்டா ம் வருத்தமாய்ச் சடந்தானு மழன்றுபோகும், மணக்காக மேனியுமோ மஞ்சளாகு மகவாத குணமென்றே மருவலாமே. (ருய)

மிருத்துவாதம்.

மருவலாய் முடியவாய் தனிலொதுங்கி மண்டியே மேனேக்கி ய பானவாயில், எருவலா யெருவாயில் நுரைப்பட் டிறுகியே தேகமெல் லாம் வலிக்குங்கண்டாய், துருவலாய் மலந்தள்ளுஞ் சோபையாகும் சு றுக்கென்று கால்கையுஞ் சோர்ந்துபோகும், பருவலாய் மனதுதான் பய முமுண்டாய்ப் பாரமிருத் துவாதத்தின் பண்புதானே. (ருக)

உதரவாதம்.

பண்பான குக்ஷியைத்தான் பொருமிநொந்து பருத்துமே மிடறு தான் கனத்துமெத்த, எண்பான விக்கலுமே இளைப்புண்டாகி இணைவி ழிநீர் பாய்ந்தங்க மிளைப்புண்டாகி, மண்பான வாதமது நிரம்பியேறி வாயினுன் மலந்தானும் புறப்பட்டாற்போல், விண்பான நீரதுவும் விடு த்துநிற்கும் மிகுமுதர வாதமென்றே விளம்பலாமே. (ருஉ)

மூத்திரஉதிரவாதம்.

விளம்பவே விடுமூத்திரம் வாயிற்றேன்று மீறியே நெஞ்சுதனி லழன்றுநோகும், கிளம்பவே நெஞ்சுதனில் வீக்கமுண்டாம் நித்திரை யில் லாமலே வெதும்பலாகும், வளம்பவே வயிறுதனில் நோவுமாகும் மகத்தான விக்கலுட னிருமலுண்டாம், அளம்பவே அடிவயிறு கனத் துநோகு மசைமூத்திர வுதிரமென்ற வாதந்தானே. (ருங)

சுக்கிலவாதம்.

[illegible] வற்றி மலமூத்திரஞ் சிக்கியே கீழ்வி மூ [illegible] தன்னில் நணுக்கமா யுதிரந்தா னரு விபா [illegible] மூங் கோழையுண்டாஞ் செயலோடு சு வாசமா [illegible] சுக்கிலந்தான் றுன்னியாகுந் துரிய சுக்கில [illegible] (ருச)

[illegible]

சூக்ஷ [illegible] தேகங்கூர்ந்து தேகமோ வெளு த்துப்பின் க [illegible] யொடு வாந்தியுண்டா மடி க்கடிக்குத் த [illegible] ஊட்சமா மன்னத்தை முன்னேகாணி [illegible] மாகுந், தாட்சமாய்ச் சலிப்போடு உறக [illegible] ன்றே சாற்றுநூலே. ()

[illegible]

நூலான சுவாச [illegible] நணுக்கமா மிடையுடனே வயிறுவிம்மி, வாலான [illegible] ண்டாய் வாய்கழுத்து மார்புமே மிகவுநொந்து, [illegible] றுகாணு மடித் துடையு மடிக்கையு மிக [illegible] மேனியுமே பசுமைகா ணும் பருவூர்த்துவ வாத [illegible] (ருரு)

அ [illegible]

பகர்கின்ற குரலதனைப் ப [illegible] மே கீழ் நோக்கெய்தி, நிகர்கின்ற கண் [illegible] கொண்டு [illegible] றென மூக்காலே சுவாசம்போகுந், திகர் [illegible] செவி தனனிறைந்து செழுமையாங் கொட்டாவி வாய் [illegible] கின்ற வாய்வறண்டு நெஞ்சுகாயு மஞ்ஞானத் தம்பமாம் வா [illegible] (ருஎ)

சிரக்கம்பவாதம்.

தம்பமாய் உதிரகண்ட நரம்பிற்புக்கித் தலையோடு சரீரமெல்லாந் தாக்கிப்புக்கும், கம்பமாங் காதிரண்டு மிகவுங்கேளா கையோடு காலிர ண்டும் வசக்கேடாகும், நிம்பமாய் நினைவுதான் கலங்கிக்காணும் நெடு மூச்சுங் கொட்டாவி நித்திரையுமாகும். சிம்பமாய் தலைநடுங்கிக் கனப்பு முண்டாஞ் சிரக்கம்ப வாதமென்றே செப்பலாமே. (ருஅ)

சதஸ்தம்பவாதம்.

செப்பவே நடுநாக்கு நுனிநாக்குந்தான் தெறித்துமே தேள்விஷம் போற் கனவுமாகும், அப்பவேயடிநாக்குத் தான்துடிக்கு மழகான வாய் தானும் அதிர்தல்தோன்றும், உப்பவே வுண்ணுக்கிற் கட்டுதூக்கு முரி சைதா னில்லாம லூறும்நாக்கு, வெப்பவே விஷந்தானு மமுதம்போ லாம் வெளியான சதஸ்தம்ப விதியிதாமே. (ருகூ)

வச்சிரநுபம்.

விதியான பிடரியைத்தான் மிகவிழுத்து மிகக்கண்க ளசைவின்றி மேலேநோக்கித், ததியான குறேக்கைபோற் சத்தம்பெற்றுத் தலை நோவு மிகுதியாய் நடுக்கலுற்றுக், குதியான நரம்பிழுத்துத் திமிருண் டாகிக் கொட்டாவி சோம்பலாய்க் கூச்சலுண்டாய், வதியான மலசல முஞ் சுறுக்கிவீழும் வச்சிரரு பந்தன்னின் வகையிதாமே. (சுய)

கண்டகிராகம்.

வகையான குரலதனைப் பற்றிநொந்து மாரோடு பிடரியினில் வலி யுண்டாகி, நுகரான சரீரமெல்லாம் நொந்தழற்றி நுணுக்கமாய்ச் சுவா சமது புறப்படாமல், முகையான நாவாலே மூச்சுமாறி முகத்திலே வி யர்வாகி விலாநோவுண்டாம், பகையான வன்னத்தைப் பருகொட்டா து பரியகண்ட கிரகத்தின் பண்புதானே. (சுக)

நகாரிவாதம்.

பண்பான குரலதனை விலாப்பக்கங்கள் பல்கியே பருநரம்பைப் பற்றிநோகும், வண்பான கீழ்வாய்தான் மேல்வாய்தன்னில் வாயுவங் கே பூரித்து வசனங்கொச்சை, நண்பான நடுநாக்கு மரம்போலாகு ந சையான தேகமெங்குஞ் சொறிதலாகும், விண்பான மேலுதடு தடிப்பு மாகு மீறியதோர் நகாரியாம் வாதமாமே. (சுஉ)

பதிதவாதம்.

காரியாய் மிகவார்த்தை பேசும்போது கழுத்திலுள்ள நரம்புமிக விசைத்துநோவாம், வாரியாய் வார்த்தைகள்தான் விக்கிப்பேசி வார்த் தைகள்தான் பேசுவதிற் றெரிந்திடாது, நாரியார் போகமது விரும்பி டாது நலுக்கமாய்த் தாதுவெல்லா மிளைத்துக்காணும், பாரியா யடிக்க டிக்குப் பசியேயுண்டாம் பதிதமாம் வாதமென்றே பகராமே. (சுங)

யோனிசூலை.

பகரவே மலத்துவாரந் தன்னிற்றோன்றிப் பக்கமா யிறங்கியே யோனிபற்றித், திகரவே குறங்கடியு மறையுமுள்ளுஞ் சிக்கெனவே கோல்கொண்டு குடைந்தாற்போல, அகரவே யடிக்கடிக்கு நோவுமாகு மாசனமுங் கடுத்துமே நீரிறங்கும், நகரவே நடக்கும்போ துறக்கமாகு நவில்யோனி சூலையென்றே நாட்டலாமே. (சுச)

கெற்பசூலை.

நாட்டமாய்க் கன்னியர்கள் துடக்குக்காலை நலமான கெற்பத்தின் ரேகைதன்னில், பாட்டுமாய்ப் பற்றியே வாயுதோன்றிப் பழகியே புருஷசங்கை பண்ணும்போது, தாட்டமாய்த் தடைப்பட்டு மலத்தைச் சிக்கித் தத்தளித்துக் கடுப்பாகி விலாப்பக்கம்போம், கேட்டமாய் மன துதனிற் கிலேசமுண்டாங் கெற்பமாஞ் சூலையென்றேகீர்த்திப்பாயே.()

அஷ்டசூலே.

சீர்த்தியாய் மலங்கடுக்குங் கெடியாஞ்சோபங் கிழான வருரேகை தனிலேநின்று, ஆர்த்தியா யலந்திடக்கோ பித்துநின்று அதட்டியா யிருகுறங்கும் யோனிதானும், கார்த்தியா யுமித்தணலின் காற்றளாவிக் கடினமாய் நீர்தானுந் துளியாய்வீழும், வேர்த்தியாய் நெறுநெறெனக் கடிக்கும்பல்லே மீறுபட்ட சூலையிட வினையந்தானே. (சுசு)

குடல்வாதம்.

வினையாகப் பலவிதமாய்க் குடலேப்பற்றி மிடுக்காக வலித்துமே நாபிதன்னில், அனையாக வடிவயிற்றில் நொந்துநொந்து அழகான விரைதன்னில் வலித்துவீங்கி, மினையான மிக்கவலி யிழிந்துநோவாம் மிடுக்கான நளிரோடு காய்ச்சலுண்டாந், தினையாகத் திடுக்கிட்டுத் தலையுநோவாஞ் செப்பினேனுங் குடல்வாதச் சேதிதானே (சுஎ)

அசுவவாதம்.

சேதியாய்ச் சிறுகுதிரைப் பாய்ச்சலாகிச் செகமெல்லா மிகக்குலுக்கிக் கோட்டிபண்ணி, மேதியாய் மேலேறிக் கிழேநோக்கி வெறிகொண்டாற் போல்மிரண்டு அண்டம்வீங்கி, ஏதியாய் யிரண்டுவிரை யுள்ளேபுக்கி இணையிலிங்க முட்சுருக்கி யிழிந்துநோவாம், ஆதியா மடிவயிறு இசிவுகாணு மணியசுவ வாதமென்றே யறியலாமே. (சுஅ)

மெச்சுவாதம்.

அறியவே யாண்மையா மிலிங்கந்தன்னே அடவாகச் சுருக்கியே குழிந்துநோவாம், நெறியவே நீர்க்கடுத்துச் சிவந்துகாணும் நேர்மையாய் குளிரோடு சுரமுமுண்டாம், வறியவே தியக்கமொடு மயக்கமுண்டாம் வாடியே தேகமெங்கு மசதியாகும், குறியவே கொட்டாவி சோம்பலாகுங் குறிப்பான மெச்சுவா தமுமாமென்றே. (சுகூ)

மூடுவாதம்.

மெச்சான பிடரிநரம் பதனைப்பற்றி மிடுக்காக விரங்கியே மலத்துவாரம், பிச்சான தனுகலங்கி மேலேயேறிப் புறவடியுங் குறங்கடியுஞ் சுற்றிநொந்து, குச்சான கோவணந்தான் தளைத்தாற்போலக் குறுக்காகி லிங்கத்தில் வலித்துநொந்து, கச்சான காற்றுக்கு மிகுதியாகுங் கடுமூடு வாதத்தின் கருமந்தானே. (எ0)

வசுவாதம்.

கருமமாய்க் குடல்முடங்கி வயிறுளைந்து கனமாக நொந்துமே மயிர்க்கூச்சிட்டுப், பருமமா யுடம்பெங்குந் தடிப்புண்டாகிப் பாரமா யுடல்கனத்துப் பங்கமாகும், வருமமாய்த் தோலெல்லா மிறுகிக்கொண்டு மாசற்ற வுடம்பெல்லாம் வாட்டமாகும், உருமமாய் அசனந்தான் வேண்டாதாகும் உயர்வசுவா தத்தினிட வுண்மைதானே. (எக)

பீஜஸ்தம்பம்.

உண்மையா யிரண்டுவிரல் தானும்வீங்கி யுயர்கின்ற புண்போல வலித்துநொந்து, தண்மையாய்ச் சலாகையது ஏற்றினாற்போற் ருக்கா ன பீசமெங்கும் வலித்துநொந்து, வெண்மையாய் நீரருவித் துளியாய் வீழும் விம்முமே யடிக்கடிக்குத் தண்டுதானும், பெண்மையாய் மனம துதான் பித்தல்காணும் பீசமாந் தம்பமென்றே பேசலாமே. (எ௨)

தந்திரவேட்டி.

பேசவே விரையிரண்டும் பருத்துவீங்கிப் பெருக்கவே நோயோ டே இசிவுமாகிக், காசவே களகளவென் றிரைச்சலாகிக் கனமான கு டல்தனிலே சத்தித்தேதான், வாசவே வயிற்றினைத்தான் முறுக்கிமெ த்த வலியோடு குளிர்தானுஞ் சுரமுமுண்டாம், ஆசவே யடிவயிற்றிற் குத்தலுண்டாந் தந்திரமா வெட்டியென்றே யறிந்திடாயே. (எ௩)

வாதசுரோணிதம்.

அறிந்திட்ட வங்கமெலா மெலிவுமாகி அசைவான தவ்விடங்கள் வீக்கமாகி, நறிந்திட்ட நடைகொடா தானிருத்தல் நலியாகி மொழி மொழிய வீக்கமாகச், சொறிந்திட்ட தேகமெங்கு மசைவுகாணல் சோ ற்றின்மே னினைவின்றித் தூக்கமாதல், வறிந்திட்ட வாயதனி னீர்தா னூறல் வாதசுரோ ணிதந்தானும் வகுத்தவாறே. (எ௪)

சிந்துவாதசுரோணிதம்.

வாரூன சரீரமெல்லா னுழைந்துஊதல் மாசற்ற தோல்தானுந் தி ரைந்துபோகும், நாரூன நாறுபோல் நரம்புசுட்கும் நாக்குத்தான் வழ வழத்துக் கோழையாகும், நூரூன நெருப்புத்தான் பட்டாற்போல நொந்துமே சடமெல்லாங் கொப்பளிக்கும், வீரூன வுரிந்துபின்னை வெ தும்பிவீங்கும் மிக்கசித்து வாதசுரோ ணிதமதாமே. (எ௫)

வைகிதவாதசுரோணிதம்.

ஆமென்ற வீங்கினதோர் விடத்தில்ரத்த மழுத்தமாய்த் திரண் டுமே யெங்கும்பாய்ந்து, ஓமென்று ஒட்டியே திரண்டிருக்கு முறுதியா ய்த் தொட்டுடனே மெத்தென்ருகுந், தேமென்ற தேகமெங் கணுமி சிக்குஞ் சிறியதோ ரிருமலொடு காய்ச்சலுண்டாம், பாமென்ற சடந்த னிலே திமிருண்டாகும் பாரமாய் வைகிதமாம் வாதந்தானே. (எ௬)

உதிரவாதசுரோணிதம்.

வைகிதமாய்க் கணைக்காலு முழங்கால்தானு மற்கடாஞ் சந்துபுற வடியும்வீங்கிச், செய்கிதமாஞ் சிறுவிரல்கள் மிகவுநொந்து சிந்ததத டு மாறியே சலிப்புண்டாகும், பைகிதமாம் பயித்தியத்தில் வாதமிஞ் சிப் பாரமா யுற்பவித் தழலுண்டாகும், உய்கிதமா மசனமது தா னும்வேண்டா உதிரவாதச் சுரோணிதத்தி னுணர்ச்சியாமே. (எஎ)

### பயித்திய வாதசுரோணிதம்.

உணர்ச்சியாய்ச் சுரோணிதந்தான் மிகவெதுப்பி ஊக்கமாய்த் தேகமெங்கு மிகவேநொந்து, முணர்ச்சியாய் முழங்கால்கள் முழங்கையொக்க முனையான சிறுவிரல்கள் கன்னம்நெற்றி, தணர்ச்சியாய்ச் சந்துசருவாங்கமெங்குந் தாஷ்டீக மாய்க்குடைந்து சுரமுமுண்டாம், பணர்ச்சியாய்ப் பாண்டதுபோன் மேனியாகும் பயித்தியவாத சுரோணிதத்தின் பண்புதானே. (எஅ)

### சிலேட்டும வாதசுரோணிதம்.

பண்பாக வுடல்குளிர்ந்து வயிறுவீங்கிப் பதைப்பான விடந்தொட்டாற் போலநோவாந், திண்பான சிரசுநெற்றி நோக்காடுண்டாஞ்சிலேட்டுமமாய்க் கோழையொடு சுவாசமாகும், மண்பாக மயக்கமொடு கனவுமுண்டாம் வாய்வரண்டு ருசியில்லா வருத்தமாகும், நண்பாக நாடியுமே-படபடக்கும் நற்சிலேட்டும சுரோணிதமாம் நாடுங்காலே. (எகூ)

### உதர வாதசுரோணிதம்.

நாடுமே சுரம்வந்து நடுக்கலுண்டாம் நாவரண்டு தலைநொந்து உடம்பமுந்தி, வாடுமே தேகமெல்லா மணிச்சம்பூப்போல் மகாவருத்த முண்டாகி மயக்கமாகுஞ், சாடுமே யடிக்கடிதான் பேதிதானுந் தவிக்குமே தண்ணீர்தா னுட்டமாகித், தேடுமே சோற்றின்மேல் நினைவுதானுஞ் செயவுதா வாதசுரோ ணிதந்தானென்னே. (அ0)

### குண அவதானகம்.

என்னவே குமரிதான் செற்பமுண்டா யேறியே நாண்மூன்று திங்கட்குள்ளே, வன்னவே வயிறிழிந் திரத்தம்விழ்ந்து வாடியே வயிறெல்லாஞ் சுருக்கிக்கொண்டு, கன்னவே கால்கையு முடக்கமாகிக் கருதியே தேகமெங்குங் காந்தலாகும், குன்னவே கோபமது மிகுதியாகுங் குணவவதா னகமென்றே கூறிடாயே. (அக)

### கண்டகஅவதானகம்.

கூறியே கெற்பமுண்டாய்ப்பயின்றபோது குணகியே பச்சுடம்பில் வலிப்புத்தோன்றி, மூறியே மூக்கோடு புருவந்தன்னி லுக்கிரமாய் மிகநொந்து வலிப்புண்டாகி, நாறியே நாக்கோடு உண்ணாக்குத்தான் நலித்துமே பல்லெல்லாங் கடுப்புண்டாகும், ஆறியே முன்சொன்ன தனுவசாத்திய மரியகண் டகவவதா னகந்தானாமே. (அஉ)

### சிரக்கம்பஅவதானகம்.

அவதான வடிசிரசு தன்னைப்பற்றி அதட்டியே பின்னெல்லாம் பற்றிநொந்து, வவதான வடிம்புகுறங் கடியிற்சென்று வளைத்துடம்பெல்லாநொந்து வாட்டமாகிச், சிவதான தேகமெங்குந் திமிருண்டாகுஞ் சடம்போகுங் காலத்தில் மூன்றுங்காணும், பவதான சிரக்கம்பவவதானகந்தான் பாடியதோ ரிம்மூன்று மசாத்தியமாமே. (அங)

### வாதத் தலைநோக்காடு.

சாத்தியமாம் வாதத்தின் றலைநோக்காடு தண்மையாம் பிடரிபற்றித் தலைநோயுண்டாகு, காத்திரமாய்க் காதிரண்டுந் தான்வலித்துக் கதுப்படியுங் குறட்டோடு மூக்குஉச்சி, நேத்தியுமாய் நெற்றியொடு நேர்வுமாகி நெருக்கான வாப்படித்தாற் போலேகுத்தும், மாத்தியமாய் மனக்கிலே சப்படுத்தும் வாதத்தின் றலைநோவு வண்மைதானே. (அச)

### பித்தத் தலைநோக்காடு.

வண்மையாய் நிற்கின்ற மூக்குத்தானும் வடிந்துமே நீர்ப்பாய்ந்துத் தலைகனத்து, வெண்மையாய் வாய்நீர்தான் மிகவுமூறி மீறியே உண்ணாக்கைப் பற்றிநொந்து, திண்மையாய்ச் செவிதனிலே குத்தலுண்டாய்ச் சிரசுதான் பாரமாய் மிகக்கனக்கும், கண்மையாய்க் கண்ணோடு புருவங்குத்தல் கனமான பித்தத்தின் றலைநோக்காடே. (அரு)

### சேட்டுமத்தலைநோக்காடு.

நோக்காட்டில் மிகத்தண்ணீர் குடிக்கையாலு னுகர்ந்தபின் புலாவாமற் படுக்கையாலுந், தீக்காட்டில் மிகத்திரண்டு சிலேட்டுமந்துன்னிச் சிரசெங்கு ஞேவாகிப் பிடரியோடு, வேக்காட்டிற் றேகமெல்லா மிக வெளுத்து மேனியுமோ மிகவுலர்ந்து சுரமுமுண்டாஞ், சாக்காட்டிற் பசியற்று ருசியில்லாதால் சண்டாளச் சிலேட்டுமத்தின் றலைநோக்காடே. ()

### சன்னிவாதத் தலைநோக்காடு.

தலைநோக்கா டாகியே மிகவருந்தி சஞ்சலத்தால் மனக்கிலேசந் தானுமுண்டாய், மலைநோக்காய் நெஞ்சடைத்துப் பெருமூச்சாகி மறுகாதிரண்டினிலாப் படித்தாற்போலும், புலைநோக்காய் வாய்தானும் பேசவொட்டா புழுக்கள்தா னூர்தல்போற் றேகமாகுங், கதநோக்கா யுணர்ச்சியறி வில்லாதாகுங் கனசன்னி வாதத்தின் றலைநோக்காடே. (அஎ)

### இரத்தபித்தத் தலைநோக்காடு.

சன்னியாய்க் குளிர்ந்துமே வெச்சென்றுகுந் தாகமே மிகவுண்டாய் மயிர்க்கூச்சாகுந், தின்னியாந் திமிர்திமிர்த் திரத்தமீறிச் செவிமூக்கு வாயாலே ரத்தம்விழும், உன்னியா யுடலதுதான் றுடிப்புண்டாகு மூக்கமாஞ் சுவாசமது மெத்தவாகுங், கன்னியாஞ் சரீரமது கருகலாகுங் கதித்தெழுந்த ரத்தபித்தத் தலைநோக்காடே. (அஅ)

### கிருமிகந்த தலைநோக்காடு.

கதித்துமே மௌலிபற்றித் தலைநோயுண்டாங் கடிமூக்குத் தண்டுபுரு வம்வலிக்கும், வதித்துமே வாய்நீர்தான் மிகவுமூறும் வடிவமெல்லாம் நோவாமே மனமறுக்குங், குதித்துமே கைகாலு மிடறும்பற்றிக் குத்தியே விறுவிறென்றே தானிருக்கும், நதித்துநா ணற்பூப்போற் கிருமிவிழும் நாறுமே கிருமிகந்த தலைநோக்காடே. (அகூ)

### சூரியாவர்த்தம்.

கந்தமாம் வலப்பக்கமிடப் பக்கமாதல் கண்ணடியு மூக்கடியும் புருவம்பற்றி, புந்தமாம் புருவத்தி லூசிகுத்தல் போல்வலிக்குங் கண்தானுஞ் சுருங்கிக்காணும், பந்தமா முடம்பெங்கும் பாரமாகும் பகற்போது தாழ்ந்தவுடனேவுமட்டாந், துந்தமாந் துந்துமிபோல் வலியுண்டாகுஞ் சூரியாவர்த் தந்தன்னின் சுரூபமாமே. (கூ0)

### சந்திராவர்த்தம்.

சுருபமா யுடம்பெங்கும் வலியுமாகித் தும்மியே மூக்கடைத்துச் சுகந்தமற்று, புருவமே மிகவலித்து நெற்றியோடு புண்போலக் குடைந்திட்டுப் புளகமாகி, அருபமா யந்தியின் போதுதோன்றி அர்த்தராசத் திரிமட்டு மலேச்சலாகி, சருபமாய்விடிகிறநே ரத்திற்றானுஞ் சாய்க்குமே மாசந்திர வர்த்தமாமே. (கூக)

### கர்ணவர்த்தம்.

வர்த்தமாய் மார்போடு பிடரிகாது வலித்துமே வாப்புகொண்டடித்தாற்போலக், குற்றமாய்க் காதிரண்டுங் குடைச்சலாருங் கோணியே கழுத்துங்கா துங்கனக்கும், அற்றமா யுச்சியிலு நெற்றிதன்னி லடிக்கடிக்கு நோயாகி யசதியாகும், பற்றமாய்ப்பசியின்றி யுரக்கமின்றேல் பாரகர்ண வர்த்தமென்றே பகாலாமே. (கூஉ)

### ஒருதலைவகாதபேதம்.

பகரான வொருதலையைப் பாதிநொந்து பகழிகொண்டு மௌலிதனைப் பிளந்தாற்போல, நிகரான கண்ணுநீர் பாய்ந்துகாந்தி நெடுமூச்சு விட்டுமே நினைந்துதுன்பந், திகரான சடந்தானுந் திடுக்குண்டாகிச் சிணுக்கிரும லாகியே பசிகாணாது, வகரான வாதமாய் மயிர்க்கூச்சாகும் வாகாத பேதத்தோர் தலைவலியுமாமே. (கூரு)

### வாதகர்னசூலை.

வலியாகிச் சீவிழுந்து காதிரண்டு மகத்தான சமுத்திரம்போ லிரைச்சலாகிக், கிலியாகிச் செவிதனிலே சத்தமுண்டாய்க் கேள்விகள்தான் வசனமது கேட்டிடாது, பெலியாகிப்பிறர்வசனத் திசைகேடாகும் பேய்கொண்ட மனமதுதான் பேச்சுதானு, மலியாகி யாணவகாமியங்குறைக்கு மடங்காத வாதகர்ன சூலைதானே. (கூச)

### பித்தகர்னசூலை.

தானென்ற விரண்டுசெவி தன்னிலேதான் தாக்கான கிரந்தியே எழுந்துநொந்து, ஊனென்ற உதிரமொடு சீழும்பாய்ந்து ஊற்றையாங் கும்பிபோல் நாற்றமாகுங், கானென்ற சிரசெங்கு மளிபோலூறுங் காதிரண்டும் பருத்துமே வீக்கமுண்டாம், பேனென்ற புளகிதமாய்த் தலையெங்கும்கோம் பித்தகர்ன சூலையென்றே புகலுவீரே. (கூரு)

சிலேட்டும கர்னசூலே.

புகலவே காதுக்குட் குரும்பிசேர்ந்து பொருங்கோலேக் கொண்டு தான் குடைந்தாற்போல, நுவலவே நோவாகிப் புண்தானுண்டாம் நோக்கான சடந்தானு னுணுக்கமாகும், இகலவே இரைச்சலது கொஞ்சங் காணு மேற்றமாய்த் தினவுமே மிகவுண்டாகும், அகலவே யாக்கையெல்லாம் வெளுத்துக்காணு மரிதான சிலேட்டுமகர்ன சூலேயாமே. ()

கிருமிகர்னசூலே.

ஆமென்ற கம்புமூளே யரிசிபோல வடைத்துமே காதிரண்டுந் துன்னிப்போகும், போமென்ற புழுக்களது மெத்தவூர்ந்து புரண்டுமே புண்ணுகி யுதிரம்பாயுந், தாமென்ற சீயோடு சில்லுங்காணுந் துடிக்குமே படபடத்துக் காதிரண்டுங், கேமென்ற சத்தமது கேட்டிடாது கிருமி கர்னச் சூலேயென்றே கீர்த்திப்பாயே. (௬௭)

தந்தவாயு.

கீர்த்திப்பாய் கெட்டியாய்க் கடித்தலாலுங் கெடியான சீதளங்கள் மிகவேயூறிப், பார்த்திப்பாய்ப் பல்லதனி லடங்கலாலும் பலபலவா முதிரந்தான் பற்றலாலும், மூர்த்திப்பாய் முகமெல்லா மிகக்குடைந்து முகுளிதமாந் தந்தங்கள் சதைகரைந்து, நார்த்திப்பாய் நாவடியு நரம்புநோவாம் நாறுதந்த வாயுவின்றன் நலமதாமே. (௬௮)

நலமான வாயுவது கோபித்தக்கால் நற்சந்து குடைந்துமே பல்லுநோவாந், தலமான தலேயோடு பிடரிகுத்துந் தாக்கான மலமிறுகி நீருங்கட்டுங், குலமான பெருநரம்பு தான்முடங்குங் குடைச்சலாய் வாய்தானும் வரண்டுகாணும், பெலமான குளிரோடு சுரமுமுண்டாம் பேர்பெரிய வாதமென்றே பேசலாமே. (௬௯)

ஆமப்பா வாதமதெண் பத்துநாலு மதினுடையகுணுகுணங்கள டங்கலாக, ஓமப்பா வடமொழியைப் பிரித்துப்பார்த்து உலகத்தோர் பிழைக்கவென்றே உறுதிசொன்னேன், தாமப்பா தன்வந்திரி சதாசிவனைக் கேட்கச் சதாசிவன்றான் சொன்னபடி நானுங்கேட்டு, நாமப்பா குருவினடி மனதிலுன்னி நாதாக்கள் சொன்னபடி நாட்டினேனே. (௭௰)

எட்டாவது, வாதரோகநிதானம் முற்றிற்று. ஆகவிருத்தம்-௲௪௨.

—(*)—

ஒன்பதாவது

# பித்தரோக நிதானம்,

நாட்டினேன் பித்தத்தின் பெயரைத்தானும் நாற்பத்தி ரண்டான குணுகுணங்கள், ஆட்டினே னுவுருபித்தந் தன்னுேடு ஆம்லபித்த மதனுேடுன் மாதபித்தந், தாட்டினேன் தமந்தபித்தம் வாதபித்தந் தனித்ததோர் வன்னிபித்தஞ் சிலேட்டுமபித்தந், தூட்டினேன்சுரோ ணிதபித்தம் விகாரபித்தந் துடியான விரணபித்தந் தொகையைக்கேளே. (க)

தொகையான வுரத்தபித்த மிரத்தபித்தஞ் சுழிகாசப் பித்தமொடு சுவாசப்பித்தம், வகையான சிலேட்டுமபித்தங் கரும்பித்தந்தான் மாகா ப்பான் பித்தத்தோ டசீர்ணபித்தம், அகையான வருசிபித்த மெரிபித் தந்தா னழல்பித்தந் துடிப்பித்தம் விஷப்பித்தந்தான், முகையான அ திசாரப் பித்தந்தானும் மூலபித்த முதிர்பித்த முறைமையாமே. (உ)

முறைமையாங் கண்டபித்த மோடுபித்தம் மூடுபித்த நடுக்குபித் தங் கபாலபித்தம், தறமையாஞ் சர்த்திபித்தந் தாகபித்தந் தருக்கான விக்கல்பித்தம் க்ஷயபித்தந்தான், திறமையாந் திமிர்பித்தம் வலிபித்த மோடு சீதபித்தங் கிருமிபித்த மசாத்தியபித்தம், மறமையாம் மார்க்க பித்த மருத்திடுபித்தம் வகையதுநாற் பத்திரண்டு மகிழ்ந்துபாரே.(ங)

மகிழ்ந்துமே பித்தந்தான் வருகுமாறு மகதேவர் தமைப்பணிய மாட்டாதார்க்கும், மகிழ்ந்துமே குருவடியை வணங்காதார்க்கும் மாதா வின் மனமகிழா மார்க்கத்தார்க்கும், மகிழ்ந்துமே தந்தையைவஞ்சித்த பேர்க்கும் மகாலயங்கள் தொழுதிடா மார்க்கத்தார்க்கும், மகிழ்ந்து சிவ திரவியத்தை யபகரித்த மாபாத கர்க்கும்வந்து மருவும்பாரே.(ச)

மருவுமே புளிப்புறைப் புவர்ப்புமிஞ்சல் மனதிலே துக்கங்க ளடைதலாலும், நெருவுமே நெருப்புவெய்யில் கோபந்தன்னில் நித் திரைதா னில்லாமல் விழித்திருத்தல், அருவுமே வக்கினியிற் பொசி க்காதுண்ட லதிகமாய்ப் பெண்போக மனுபவித்தல், நருவுமே நாபிக்கு மேலேநின்று நாடியே கண்டமட்டா யிருக்கும்பாரே. (ரு)

## பித்தம் வர்த்திக்குங்காலம்.

இருக்குமே பித்தம்வர்த் திக்குங்கால மேதென்று லாவணியுங் கன்னிதானும், அருக்குமே யைப்பசிகார்த் திகைக்குமெத்த வாட்சியா யெழுந்துமே பொங்கிக்காணுங், கருக்குமே சமிக்கின்ற காலந்தானே தனியான மார்கழியிற் றையிற்றானும், பருக்குமே பங்குனியு மேஷந் தானும் பெருகுமே சரீரமெங்கும் பித்தந்தானே. (சு)

## ஆவுரு பித்தகுணம்.

தானுன சரீரந்தான் வெதும்புந்தாகஞ் சளியிளைப்புக் கடுப்புமா யழற்சியாகும், பூனுன வாய்தனிலே புளிப்புறைப்புப் புசழான மல சலந்தான் மஞ்சளிக்குங், கோனுன குறுமொழிகொண் டெங்கும்பார்க் குங் கூத்தாடுங் கொக்கரிக்குங் கூவலாகும், ஆனுன வடிக்கடிக் கெழுந் திருக்கு மாவுருபித் தக்குணத்தி னுண்மைதானே. (எ)

## ஆம்ல பித்தம்.

ஆண்மையா யங்கமெல்லாங் கருகலாகு மதிசயமாய்த் தலைதிரு ப்பு மாவேசம்போல், தாண்மையாய்ச் சாப்பிட்ட வசனந்தானுந் தரித் தொருநாள் பின்புதான் வாந்திபண்ணும், பூண்மையாய்ப் புளிப்போடு கசப்பெடுக்கும் புகலரிய கால்கைதா னசதியாகும், வேண்மையாய் விக்கலொடு வயிறுவுப்பும் மிகவாம்ல பித்தத்தின் விகற்பந்தானே. (அ)

## உன்மாத பித்தம்.

விவரமாய் மேனியெல்லா மிடுக்குண்டாகு மிக்கான தீபனந்தான் மெத்தவாகுந், தபரமாய்த் தலைதானுங் கனத்துக்காணுந் தரிக்குமோ ரிடந்தன்னில் மிகவிருக்கும், உபரமா யொருவருடன் பேசிடாம லூமையைப்போல் விழித்திருக்கு முறக்கமில்லை, திபரமாய் வாய்நீர் தான் வடித்துநிற்குஞ் சித்தமது கலங்குமுன் மாதமாமே. (கூ)

## தமந்தபித்தம்.

மாதமாய் மதுத்தானு முண்டவன்போல் மறதியதா யிருக்குமே சரீரந்தானும், நாதமாய்ச் சரீரந்தான் மிகத்துடித்து நாவடியி னரம்பெல்லா மஞ்சளிக்கும், பேதமா யழைக்கழைக்கப் பிரேதம்போலப் பேசாம லடிக்கடிக்குத் தாகமாகுஞ், சாதந்தான் மிகவுண்டு மவுனமாகுந் தமந்தபித் தத்தினிட தரிப்புத்தானே. (ய)

## வாதபித்தம்.

தரிப்பான கண்தனையே மிகமறைக்குந் தரியாத மிகவிரைச்சல் புகைச்சலுண்டா, மிரிப்பான கண்மின்மினி யாய்ச்சுழன்று மிக்கநீர்த் ததும்பியே கலங்கிநிற்கும், வரிப்பான மின்னுடம்பு வியர்வையாகு மயக்கமொடு தியக்கமாய் வாந்தியாகுங், குறிப்பான கொம்பேழும் அன்னம்வேண்டாங் கூறினோம் வாதபித்த கொள்கைதானே. (கக)

## வன்னி பித்தம்.

கொள்கையாய்ப் பேதமாய் வயிறுளைந்து கொடிதான கனல் தானுங் கபாலமேறி, வள்ளையாய்ச் சீதமாய்ச் செந்நீர்பாய்ந்து வாட்டமாய்க் கருகியே யுடல்வெளுத்து, மங்கையாய் மயக்கமொடு தியக்கமாகி வாருன வசனமிகத் தானுஞ்செல்லா, நள்ளையாய் நாவழன்று புளிப்புகாணும் நளினமாம் வன்னிபித்த நாட்டலாமே. (கஉ)

## சிலேட்டும பித்தம்.

நாட்டவே மிகவுடம்பெல் லாம்வெளுத்து நளிர்ந்துமே யுடம்பெல்லா நோக்காடாகி, மாட்டவே மனமதுதான் கோபமாகி மயங்கியே யறிவழிந்து விருமலுண்டாய்க், காட்டமே கண்களெல்லா மிகப் பச்சென்று கருதியே பசிகாணுங் கலக்கமாகித், தேட்டமாய்த் தும்மலொடு சிரங்கனக்குஞ் சிலேட்டுமத்தின் பித்தமென்று செப்பிடீரே. ()

## சுரோணித பித்தம்.

செப்பவே சுரோணிதந்தான் மிகவெதும்பித் தேகமெங்குங் குடைந்துமே சந்துநோவாஞ், செப்பவே மேனிமுட் பொதிந்தாற்போல விடாயாகித் தாகமாய் மேனிகன்றும், தப்பவே தலைநோவு மிகுதியாகுஞ் சஞ்சலிக்குஞ்சிந்தைதான் தயங்கலாகுந், துப்பறவே வாந்தியொடு கோழையாகுஞ் சுரோணிதமாம் பித்தமென்றே சொல்லுவீரே. ()

### விகாரபித்தம்.

சொல்லவே துயிலொழிந்து கசந்துவாயைத் துப்புரவாய்ப் பல பேச்சும் விரும்பிடாது, கல்லவே கண்சிவந்து கலக்கமுண்டாங் கடுத்துடம் பெலாம்வெளுத்துக் கருகிப்போகும், மல்லவே வாந்தியொடு மயக்கமாகு மனமருக லாகியே வாய்நீரூறும், பல்லவே பட்டினிதான் மிகவிருக்கும் பாரமாம் விகாரபித்தப் பண்பதாமே. (கரு)

### விரணபித்தம்.

பண்பாக உடம்பெங்குந் திமிருண்டாகிப் பாரமாய்த் தினவெடுத்து விரணமாகும், நண்பான நாவெல்லாங் கசப்புகாணும் நாடியெல்லாம் படபடத்துத் துடிப்புண்டாகுந், திண்பான விங்கமெல்லாஞ் சிவந்துகாணுந் திடுக்கிட்டு நித்திரையி லெழுந்திருக்கும், வெண்பாக வாய்நீர்தான் மிகவுமூறும் விரணமாம் பித்தத்தின் மூர்க்கமாமே. (கசு)

### உரத்தபித்தவாதம்.

மூர்க்கமாங் கோபமது மிகவுண்டாகு முனையாக வடிக்கடிக்குச் சண்டைகொள்ளும், ஆர்க்கமாய் கூவியே விரைச்சலாகு மாதானபாதாளம் பேதியாகும், நார்க்கமாய் நன்மைதுன்மை தோற்றுமற்றுன் நலக்கமாக் கண்சிவக்குந் தூக்கமில்லை, ஊர்க்கமா யுடம்புதா ளிக்குமுப்புமுரத்தபித்த வாதத்தி னுண்மைதானே. (கஎ)

### இரத்தபித்தம்.

உண்மையா யிருமற்றுன் மிகவுமுண்டா யுதட்டியாய்க் குத்தியே ரத்தம்வீழ்ந்து, யண்மையாய்ச் சரீரமது மிகவும்வற்றி அடிவயிறு சுருங்கியே வற்றிக்காணும், வண்மையாய் வாய்நீரிற் கவுச்சடிக்கு மறுகியே வல்லுடம்பு வாட்டமாகும், இண்மையா யிடுப்புதான் குடைச்சலாகு மடும்யிரத்த பித்தத்தி னியற்கைதானே. (கஅ)

### காசபித்தம்.

இயற்கையா யிருமியே மிசப்புரட்டி ஈண்டியே விக்கலொடு சர்த்தியாகும், உயற்கையா யுடம்புதான் மிகவலிக்கு மூஷ்ணமாய் வெதும்பியே குரலேகம்மும், தியற்கையாய் வாய்நீரு மிகவேயூறுந் தித்திப்பு மிகவிருக்குந் துயரங்காணுங், கயற்கையாய் நெஞ்சுதனிற் கனமாய்க் காணுங் கரும்பினுக்குங் காசபித்தங் கருத்துதானே. (ககூ)

### சுவாசபித்தம்.

கருத்தாகச் சுவாசமது மிகவுண்டாகுங் கனமாக வயிறுமே ஊதிக்காணும், உருத்தாக உடலதுதான் மிகவலிக்கு மூறுமே கேணிபோல் வாய்நீர்தானும், மருத்தாக மயங்கியே கண்மறைக்கும் மார்பிலே வலியோடு இருமலுண்டாந், துருத்தாக வயிறதனிற் பசியோயில்லை சுவாசமாம் பித்தத்தின் சூட்சந்தானே. (உ0)

### சிலேட்டுமபித்தம்.

சூட்சமாஞ் செம்புதனிற் களிம்புபோலுந் துரிதாக வாயெடுக்குஞ் சிகப்பாய்வீழும், மாட்சமா மலமிறுக்கிச்சிவப்புபோலாம் மயக்கமொடு வியர்வைதான் செந்நீர்பாயுந், தாட்சமாந் தண்ணீர்தான் மிகத்தவிக்குந் தலைதானுந் திருப்பியே தவக்கமுண்டாந், தேட்சமாந் திடுக்கோடு பயமுமாகுஞ் சிறுகதிர்போல் மேனிச்செம் பித்தமாமே. (உக)

### கரும்பித்தம்.

செம்பித்த மாகியே தியக்கமுண்டாய்ச் சிரசோடு மெய்நடுக்குந் தலைவலிக்குங், கம்பித்த மாகியே கண்ணுறங்குங் கடைக்கண்தான் சிவந்துமின் மினியதாகும், நம்பித்தஞ் சடமெல்லாங் கனத்துவற்றும் நாவுதனில் ருசியில்லைப் பசியுமில்லை, வம்பித்தங் கருப்பாகி வாந்தி யுண்டாம் மாசடையுங் கரும்பித்த வளப்பந்தானே. (உஉ)

### காப்பான்பித்தம்.

வளப்பமாய்ச்சரீரமெல்லாஞ் சொறியுண்டாகி வருத்தமிக வாகியே கட்டிகட்டுங், குளப்பமாய் வயிறுதான் பேதியாகுங் குமுறலா யிரு மியே யிழுத்துக்கொள்ளும், இளப்பமாய்க் கால்தானும் பெலக்கே டாகு மிடுப்பிலே வலியுண்டாய்த் திமிருண்டாகுங், களப்பமாய்க் கரு கியே மேனியெல்லாங் கன்றுகாப் பான்பித்தங் கண்டிடாயே, (உங)

### அசீரணபித்தம்.

கண்டிட்ட மந்தமாய்ப் பசியோயில்லை கடுத்துமே நளிராகி மல மிறுக்கும், வெண்டிட்ட விழிகரித்து நீர்தான்பாயு மிக்கதலை வலிக் கும்வயி றிரைச்சலாகும், அண்டிட்ட அடிவயிறு வழுத்தமாகு பசன மிகச் செல்லாது கைகாலோயும், பண்டிட்டபுளித் தேங்காய் போல்வாய் நீரூறும் பண்பான வசீர்ணபித்தம் பயின்றிடாயே. (உச)

### அருசிபித்தம்.

பயின்றிட்ட மனமறுத்துக் குடல்புரட்டிப் பாங்கான வாந்தியொடு வருசியாகித், தியன்றிட்ட தியக்கமாய்ச் சிரசிலேறித் திருப்பியே தலைதன்னைப் பிறகேவீசும், நவின்றிட்ட வடிநாக்கு மிகத்தடித்து நாவிலே உணர்ச்சியில்லா துறக்கமற்று, அவின்றிட்ட வாகாய மெரிதல் போலா மதட்டுமே வருசியென்ற பித்தந்தானே. (உரு)

### எரிபித்தம்.

அதட்டியே அடிதுடைதா னிரண்டுபாத மழகான கண்ணோடு உள்ளங்கால்கள், கதட்டியே யுள்ளங்கை யெரிவுகாணுங் காதிரண்டு மூக்கோடு வறண்டுபோகும், முதட்டியே முதுகுகை கால்கடன்னில் முதிர்ந்த விறுவிறுப்புமே மெத்தவாகும், பதட்டியே காற்றுத்தான் மிக வே வேண்டும் பாரமா மெரிபித்தம் பயின்றவாறே. (உசு)

### அழல்பித்தம்

வாருன விளமைதனில் மிகநரைக்கும் வடிவமெல்லா மிகவெளுப் பாய்த் தானிருக்குங், காருன கடைக்கண்தான் மிகச்சிவக்குங் கண்ட பல ஞானங்கள் மிகவேபேசுந், தூருன வார்த்தைகள்தான் மிகச்சிக் கென்று துடியிடையார் மேலின்பந் திறந்தாகூறல், பாருன பலகலை தான் மிகவுரைத்தல் பாடுமே யழற்பித்தப் பரிசுதானே. (உஎ)

### துடிபித்தம்.

பரிசுதா னுடம்பெல்லா மிகத்துடித்துப் பாண்டுவாய் மேனியுந் தான் பச்சென்ருகும், உரிசைதா னில்லாம லுண்ணமாட்டா ரோட் டமே மிகுதியா யுலையப்பண்ணும், அரிசுமே யாயிழைமேல் மனப்புண் ணகு மடிக்கடிக்கு யாரோடுஞ் சண்டைகெ ாள்ளுந், துரிசுதான் மிகப் பண்ணும் பலவுண்டிமீது துடிபித்தந் தன்னுடைய சொரூபமாமே. ()

### விஷபித்தம்.

சொரூபமாய்ச் சோர்ந்துமே வீழ்ந்திருக்குந் தூற்றுமே கொடுமை தன்னை யாரோடுந்தான், உருபமா யுள்ளங்கால் தனிலிருந்து உயரமா யேறுமுச்சந் தலைதன்னிற்ருன், திருபமாய் விஷமிறங்கும் போலேஎறுந் தேகமெல்லாம் வலியுண்டாய்க் கண்டிப்பாகும், அருபமா யசனமிகத் தானுஞ்செல்லா வரிதான விஷப்பித்த மசாத்தியமாமே. (உகூ)

### அதிசாரபித்தம்.

அரிதான வயிறதனி லிரைச்சலாகு மடிவயிறு பிடுங்கியே பேதியாகும், உரிதான உப்பசந்தான் மெத்தவாகு மொளிவிலாப் பக்க த்தில் வலியுமாகும், எரிவான ஈரலெல்லாங் குமுறல்காணு மேற்ற மாய்த் தாகமொடு மயக்கமாகுங், கரிதான வரோசகமா மசாத்திய மாகுஞ் சலிக்குமே யதிசாரப் பித்தமாமே. (ஙய)

### மூலபித்தம்.

சாரமாய் வயிறிறைந்து பேதியாகுஞ் சலிப்பான கோபமாய்த் தடு மாறுடும், கோரமா மூலத்தில் முளையுங்காணுங் குறங்கிலே டடித்து டையுங் கடுப்புமுண்டாஞ், சோரமா யுடல்வெளுத்து சோபையாகுந் தூக்கமே மிகமிஞ்சிச் சோம்பலாகுங், காரமாய்க் கண்ணுந்தான் கரிச்ச லுண்டாங் கனமூல பித்தத்தின் காட்சியாமே. (ஙக)

### முதிர்பித்தம்.

ஆமென்ற வங்கமெல்லா மம்மைவார்த்து வாட்டினுற் போலவே தினவுமாரும், போமென்ற சரீரமெல்லாம் புண்களாகும் புழுதியள் ளிப் பூசினுற் போற்சரீரம், வாமென்ற வடிவமது மஞ்சளாகு மல சலமுஞ் சுருங்கியே வாட்டமாகும், நாமென்ற நாடியது துவண்டு காணும் நாட்டமுண்டா முதிர்பித்த நாடுவோர்க்கே. (ஙஉ)

### கண்டபித்தம்.

நாடியே குரலினைத்தான் கனத்துக்கொண்டு நற்கசப்பாய் சர்த்தி யது தானெடுக்கும், வாடியே கண்டத்திற் புண்போலாகும் வழவழத்து நாவெல்லாம் வரண்டிருக்குந், தாடியே தாளடியிற் கனப்புண்டாகுஞ் சமுத்திரத்தி னோசைபோற் காதிலுண்டாம், பேடியா மயிருஞ் செம் பட்டையாகும் புறவிசுவாங் கண்டபித்தப் பிரதாபந்தானே. ()

### ஓடுபித்தம்.

பிரதாப மாகியே யோடியெங்கும் பிதற்றலா யுதாசினங்கள் மெத்தப்பேசும், நிரதாப மாகவே பற்கடிக்கும் நெருப்பாகக் கண்சிவக்கும் நிமைத்து மூடும், குரதாப மாகவே கூவற்போடுங் கொக்கரிக்குங் கூத்தாடுங் குறித்தே பார்க்கும், அரதாப மாகவே யாண்மையுண்டா மசாத்தியமா மோடுபித்த மணுகினோர்க்கே. (௬௪)

### மூடுபித்தம்.

அணுகியே யாபரணப் பொன்றனைத்தா னகப்பட்ட விடந் தனிலே புதைத்துப்போடும், மணுகியே மனிதரைத்தான் கண்ட போதே வார்த்தைகள்தா னுதாசினங்கள் வசனிப்பாகும், நணுகியே நாக்குக்குள் தானேபேசும் நலத்தண்டி பண்ணியே யிருக்குங்கைகள், மிணுகியே வெந்நோ மன்னம்வேண்டா மிக்கான மூடுபித்த மீறினோர்க்கே. (௬௫)

### நடுக்குபித்தம்.

மீறியே தலையோடு சிரசுநெற்றி மிக்கான பிட்ரியொடு முதுகுத் தண்டு, காறியே கண்டங்கள் கதுப்போடொக்கக் கனமாக நடுக்கியே காந்தியாகுஞ், சீறியே கசப்பாக வாந்தியாகுஞ் சிணுக்கிரும லாயிருமுந் தூக்கமில்லை, ஊறியே வாய்நீர்தான் மார்பில்வீழு மூறுமே நாத்தானு நடுக்குபித்தம். (௬௬)

### கபாலபித்தம்.

நடுக்குமே கபாலந்தான் சிரசோடொக்க நளிராகி யுடம்பெங்குங் கடுப்புமாகும், விடுக்குமே அம்புபோற் சிரசெல்லாந்தான் மேனியுமே மஞ்சணிற மாகுங்கண்டாய், முடுக்குமே மூக்குதண் டெல்லாநோகு முகமெல்லாம் வீங்கியே மூர்ச்சைகாணும், படுக்குமே வடிக்கடிதா னெழுந்திருக்கும் பாரமாங் கபாலபித்தப் பண்புதானே. (௬௭)

### சர்த்திபித்தம்.

பாரமா யுடம்பெங்குந் திமிருண்டாகும் பதைத்துமே ஈரலுக்குள் வலியுண்டாகும், வாரமாய் வாய்கைப்புற்று வாந்தியுண்டா மகத்தானதலையெடுக்க மயக்கமாகும், ஆரமாய் அக்கினிதான் மிகவுண்டாகு வரோசகமா யெந்நோ மாண்மைகுன்றுந், தாரமாய்த் தண்ணீர்தான் மிகவேண்டாது சமிக்காது சர்த்திபித்தத் தாண்மைதானே. (௬௮)

### தாகபித்தம்.

ஆண்மையா யடிவயிற்றிற் பதைப்புண்டாகு மங்கமெலாம் வெவ்வழல்போ லழன்றுகாணுந், தாண்மையாய்த் தண்ணீர்தான் மிகக் குடிக்குஞ் சயித்தியமாம் பண்டத்தி விச்சையாகுங், காண்மையாய் கண்டத்தில் வியர்வைகாணுங் கழுத்தடியு நாவடியு மிசித்துக்கொள் ளும், பூண்மையாய்ப் புளிப்புமே விச்சையாகும் புகலரிய தாகபித்தம் பேசலாமே. (சுகூ)

### விக்கல்பித்தம்.

தாகமுடன் சர்த்தியதாய் விக்கலாகுந் தவிப்பெய்தி சரீரமெல் லாஞ் சயித்தியமாகும், பாகமுடன் றலைபுரட்டுக் கிடைகொடாது பால் போலே வாயினிலே நுரையுந்தள்ளுஞ், சாகமுடன் சயித்தியத்தில் மிகக்கிடக்குந் தணலாக வுடல்வெதும்புந் தளர்ச்சியாகுஞ், சோகமுடன் கைகால்தா னோச்சலாகுஞ் சுருக்கிடுமே விக்கல்பித்தஞ் சுருதிதானே. ()

### க்ஷயபித்தம்.

சுருதியா யிருமலது மிகவுமுண்டாய்ச் சூக்ஷமாய் வெதும்பலொடு தண்ணீர்தாகம், பருதியா யுடல்வெளுத்துப் பாண்டுவாகும் பஞ்சுபோற் கண்களெல்லாம் வெளுப்பாய்ப் போகுங், குருதியாய் நெஞ்சுதனிற் கோழைகட்டுங் குணுக்காகக் கட்டிபோற் சளியேவிழும், நிருதியாய் நெஞ்சுதனி லெரிவுண்டாகு நித்திரையே மிஞ்சுக்ஷயபித்தந்தானே. ()

### திமிர்பித்தம்.

பித்தமா யுடம்பதுதான் மிகமயக்கும் பேதமாய் வயிறெங்கு முள்ளுபோலாம், நித்தமாய்க் காலமே வாந்தியாகும் நினைவோடு நித் திரையு மசதியாகும், பத்தமா யொன்றையே பிடித்துநிற்கும் பாரமா யுடம்பெங்குந் திமிருண்டாகுஞ், சுத்தமாய்ச் சரீரமெல்லாந் தூசுண் டாகுந் துருசுநடை கொடாதுதிமிர் பித்தந்தானே. (சுஉ)

### வலிபித்தம்.

நடைகொடா தடிவயிற்றி விழுத்துநொந்து நாவரண்டு தலையெ ல்லா மிகக்கனத்து, இடைகொடாச் சந்தெல்லா நோயுண்டாகி ஈரல் தனிற் குலைதனிலே வலித்துநோவாம், படைகொடா மலந்தானும் பச் சென்றாகும் படபடத்து உடம்பெங்கும் பக்கங்கொள்ளும், மடை கொடா வயிறெரிச்சல் மெத்தவாகு மார்படைக்கும் வலிபித்த வண் மைதானே. (சுங)

### சீதபித்தம்.

வண்மையா யுடம்பெங்கும் வடியுந்தண்ணீர் மயக்கமா யுடல் கனத்துப் பாரமாகும், புண்மையாய்ப் பிடரிதனி விசிவுண்டாகும் பொருமியே வயிறுப்ப சந்தாணுகுந், திண்மையா யுடல்கனத்துச் சொக்குபோலாஞ் சிறியே மிகவிருமிச் சிந்தைகேடாஞ், செண்மையாய் வாய்நீர்தான் உப்புறைக்குஞ் சிறுநீருஞ் சிகப்பாகுஞ் சீதபித்தம். (சுச)

### கிருமிபித்தம்.

சீதமா யடிவயிற்றிற் றிமிருண்டாகிச் செழுமையா யுடம்பெங் குர் தினவுமாகி, வாதமா யுடம்பெங்குங் கடுப்புண்டாகி வற்றியே மல சலமும் வரண்டுபோகும், காதமாய்க் கால்கைகள் கதவித்தண்டு கலத் ததுபோல் வெச்சென்று கடுப்புமாகும், நாதமாய் மலந்தன்னிற் கிருமி வீழும் நாறுமே யுடல்கிருமிப் பித்தமாமே. (சரு)

### அசாத்தியபித்தம்.

உடம்பதுதான் லாகிரிகள் தின்றவன்போ லுணர்ச்சிதா னில்லா மற் புடவைகட்டா, தடம்புதா னழலணுகுந் தன்மைபோலத் தவிச் சுமே தாகந்தான் மிகவுண்டாகும், வடம்புதான் வாதாடு மனிதரோடே வார்த்தைகள்தான் பலபேச்சும் வசனிப்பாகும், வடம்புதா னுக்கிர மாய்க் கண்சிவக்கும் வாய்வறளுமசாத்தியபித் தந்தானென்றே. (சசு)

### மார்க்கபித்தம்.

தானென்ற சகலநூல் தான்ருன்பேசுஞ் சடுதியினி லுட்காரு மோட்டம்பாயும், போனென்ற புடவையைத்தான் கிழித்துப்போடும் புலம்புமே வாயில்வந்த தெல்லாம்பாடுந், தேனென்ற சிரசோடு பிடரி யெல்லாஞ் சிக்கெனவே இசிவாகுந் தேகம்வாடும், பானென்ற பலபல வாங் கருமஞ்செய்யும் பழிக்குமே பிறரைத்தான் மார்க்கபித்தம். (சஎ)

### மருந்தீடுபித்தம்.

மார்க்கமா மனமதுதான் மௌனமாகும் வடிவெங்கு மூதியே நெஞ்சுவற்றும், ஊக்கமா யுடம்பதுதா னசதியாகு மூணுறக்க மில் லாம லுழலுமெங்குந், தேர்க்கமாந் திடுக்கிட்டுச் சிதைவாம்புத்தி சேயிழையார் மருந்திஞற் றிரட்சியாகி, ஆர்க்கமா யடிக்குடலில் மிகு ந்துபாழி யடங்காது மருத்திடு பித்தமாமே. (சஅ)

ஆமப்பா பித்தமது நாற்பத்திரண்டி னடவான குணமெல்லா மாய் ந்துபார்த்து, தாமப்பா சதாசிவன்ருன் தன்வந்திரிக்குத் தயவுடனே வநு க்கிரகம் பண்ணிச்சொல்ல, வாமப்பா தன்வந்திரிஅசு வினிதேவர்க்கு மகிழ்ந்துரைக்க அசுவினியாந் தேவர்தாமும், தேமப்பா அகஸ்தியமா முனிக்குச்சொல்ல சித்தமகிழ்ந் தேயுரைத்தார் புலத்தியர்க்கே. ()

புலத்தியருந் தேரையமா முநிவனுக்குப் போதிக்கத் தேரையரு முநிவன்ருனுந், தலத்தியராம் யூகியா மெனக்குச்சொல்ல சாங்கமா யூகி யென்ற முநியாம் யானே, வலத்தியராய் வடமொழியின் விரிவாய்த்தா னே மானிடர்கள் தமக்குரைத்தேன் மறைப்பில்லாமல், குலத்தியராங் குருவினிட வுபதேசத்தாற் குற்றபித்த நாற்பத்தி ரண்டுமுற்றே. (ருய)

**ஒன்பதாவது, பித்தரோகநிதானம் முற்றிற்று. ஆகவிருத்தம்-ருகூஉ.**

—(*)—

பத்தாவது

# சிலேட்டுமரோக நிதானம்.

முற்றான சிலேட்டுமந்தா னிருபத்தொன்று முனியுரைத்த சொற்படியே மொழியக்கேளாய், சிற்றான விருமலாஞ் சிலேட்டுமத்தோடு செறிகாசச் சிலேட்டுமமாஞ் சுவாசச்சிலேட்டுமம், மற்றான தீபனசிலேட்டுமத்தோடே மந்தசிலேட்டுமம்வாத சிலேட்டுமமாகும், துற்றான பித்தசிலேட்டுமந் தொந்தசிலேட்டுமஞ் சுகசன்னிவாதசிலேட்டுமெந்தானுமே. (க)

ஆகுமே சுரசிலேட்டும மதிசாரசிலேட்டும மதிகசல சிலேட்டுமமா மக்கினிசிலேட்டுமம், போகுமே பூதசிலேட்டும முயலகன்றான் பொறிவெறிச் சிலேட்டுமமாம் விகாரசிலேட்டுமம், சோகுசுரோ ணித சிலேட்டுமம் விரணசிலேட்டுமந் துற்கந்த சிலேட்டுமமா நித்தியசிலேட்டுமம், நாகுமே இருபத்தொன் றுஞ்சிலேட்டுமம் நாட்டினேன் வரலாறு நயந்துகேளே. (உ)

நயமாக ஒருவருடன் பேசும்போது நாவிலொன்று மனதிலொன்று நாடும்பேர்க்கும், பயமாக வந்தவர்கட் கிடங்கொடாத பாதகர்க்கும் வேதத்தைப் பழிக்கின்றோர்க்குந், துயமாக சூரியனுக் கெதிரேநின்று துரிசாக மலசலங்கள் விட்டபேர்க்குஞ், செயமாக விஷ்ணுசமயஞ் சிவசமயந்தான் திடாகரித்த துரோகிகட்குஞ் சிலேட்டுமமீறும். (ங)

மீறியே தித்திப்புப் புளிப்புத்தானும் மிகத்தின்றுங் கிழங்குவகையருந்தலாலுஞ், சாறியே சயித்தியமாங் குளிர்ந்தபண்டந் தண்ணீர்தான் பழையதுக ளருந்தலாலுஞ், சீறியே தன்வயது தனக்குமூத்த ஸ்திரீகளுட னனுபோகஞ் செய்தலாலும், மாறியேமயானபுகை படுதலாலும் வருகுமே சிலேட்டுமத்தின் மகிமைதானே. (ச)

சிலேட்டுமம் வர்த்திக்குங்காலம்.

மகிமையாய் மாசியொடு பங்குனித்தான் மருவியே வர்த்திக்குமையந்தானும், நகிமையாய் வைகாசி தனிற்கோபிக்கும் நன்மையாய்ச் சமிக்கின்ற காலங்கேளாய், அகிமையா யாடிதனில் மிகச்சமிக்கும் ஆவணியும் புரட்டாசி தன்னிற்கேளாய், தகிமையாய்த் தாட்சியாங் காலமாகுஞ் சதாசிவன்றான் சொன்னபடி சாற்றினேனே. (ரு)

இருமல்சிலேட்டுமம்.

சாற்றியே யினிப்புநெய்ப்பாய்ச் சளியேவீழுந் தளுக்காகு முகந்தானுங் குளிருண்டாகு, மாற்றியே மூக்கதனில் நீரோபாயு மாசற்ற வுடம்பெல்லாம் வெள்ளையாகுஞ், சீற்றியே மலந்தன்னிற் சீதமுண்டாய்ச் சிறுநீரு மஞ்சளித்துச் சிறுகவீழுங், காற்றியே யுடம்புக்குள் வெகுசூடாகுங் கனவிரும லாஞ்சிலேட்டுமக் கணக்குத்தானே. (சா)

### காசசிலேட்டுமம்.

கணக்காகச் சரீரந்தான் சீதளமாகிக் கனத்துமே மதத்திட்டுப் பாரமாகி, மணக்காக நாடியெல்லா நுணுக்கமாகு மருவுசிலேட் டுமத்தடைந்து வாய்வரண்டு, அணக்காக அக்கினிதான் மிகவுண்டாகி அடிமூக்குத் தண்டெல்லா மிகக்கனத்து, திணக்காக இருமலொடு தினவுமுண்டாம் செயலாகச் சிலேட்டுமத்தின் றிறமைதானே. (எ)

### சுவாசசிலேட்டுமம்.

திறமையாய் நெஞ்சுதனிற் கோழைகட்டுஞ் சிக்கென்று தானிருமி மூக்கடைக்கும், குறமையாய்க் குறட்டென்று சுவாசங்காணுங் குளிரோடு சுரமுண்டாய் மயக்கமாகும், மறமையாய் மார்போடு நெஞ்சடைக்கும் வாய்வரண்டு மூக்கதனில் நீரோபாயும், வெறுமையாய் மிகத் தண்ணீர் தாபமுண்டாய் விடுசுவாச சிலேட்டுமத்தின் விவரந்தானே.()

### தீபனசிலேட்டுமம்.

விபாமாய்த் தீபனந்தான் மிகவுண்டாகு மிக்கான வுடம்பெல்லா மெரிவுண்டாகும், அபாமாம் நெஞ்சடைக்கு மழுகையாகு மாக்கையெல்லாம் வலியுண்டா யழலுண்டாகுங், கபரமாய்க் கைகாலுஞ் சயித்தியமாகுங்கனத்துமே சரீரந்தான் பருத்துக்காணும், உபரமா யுண்ணுக்கிற் பசபசக்கு முறுதியாய்த் தீபனசிலேட் டுமந்தானென்னே. (கூ)

### மந்தசிலேட்டுமம்.

தானென்ற வயிறதனில் மந்தமுண்டாய்ச் சலங்கட்டு மலங்கட்டுஞ் சயித்தியமாகும், ஊனென்ற வுடம்பதனில் வியர்வையாகு மோக்காள மிகவாகி உயர்மூச்சாகுங், கானென்ற அடிவயிறு கல்லுப்போலாங் கனத்திரும லாகியே காறலுண்டாம், வானென்ற வாய்கைத்துத் துவர்ப்பு காணு மந்தமாஞ் சிலேட்டுமமென்றே வழுத்தலாமே. (ய)

### வாதசிலேட்டுமம்.

வழுத்தவே வயிறுதான் பொருமிக்கொள்ளும் வலித்துமே வலியிரங்கி நீர்க்கடுக்கும், அழுத்தவே யங்கமெல்லாங் குழிகள்வீழு மதரங்கள் பல்லெல்லாங் கறுத்துக்காணும், விழுத்தவே மேனியெல்லாம் வலியுண்டாகு மேகம்போல் நீரிறங்கும் வெள்ளைகாணும், பழுத்தவே பல்லுக்குட் குடைச்சலாகும் பாரமாய் வாதசிலேட் டுமத்தின்பண்பே. (கக)

### பித்தசிலேட்டுமம்.

பண்பாகக் கண்மயங்கிக் கிறுகிறுக்கும் பத்தியந்தான் மிகுதியாயசதியாகும், உண்பாக வசனமிகத் தானுஞ்செல்லா ஊறியே வாய்நீர்தான் மிகவுண்டாகுங், கண்பாகக் கண்டத்திற் கோழைகட்டுங் கனக்கவே யிருமலொடு மூச்சுமாகு, மிண்பாக மேனியுமோ மஞ்சளிக்கு மிக்கபித்த சிலேட்டுமத்தின் விவரந்தானே. (கஉ)

தொந்தசிலேட்டுமம்.

விபரமாய் மேனியெங்கு மழற்சியாகும் விக்கலோ டிருமலாய்ச் சுவாசமுண்டாம், அபரமாய்ச் சுரமுடனே யசதியாகு மழன்றுமே வுடம்பெங்கு மெரிவுண்டாகுந், தபரமா யன்னமுந்தான் பொசிக் கொட்டாது சளியோடு இருமலுமாய்ச் சண்ணுநிற்குங், குபரமாய்க் குளிரோடு மயிர்க்கூச்சுண்டாங் கொடிதான தொந்தசிலேட் டுமமசாத்தியம். (கங)

சன்னிசிலேட்டுமம்.

கொடிதாக நாவரண்டு கறுப்புமாகுங் குளிர்ந்துமே சுரமுண்டா மெரிவுண்டாகுங், கடிதான உடம்பெங்கு மிசிவுகாணுங் கனமான வசதியொடு மறதியாகுந், தடிதாகத் தாடையொடு கன்னங்காதுந் தாக்கான புருவமொடு நாசியுச்சி, படிதாகத் துடித்துமே படபடக்கும் பாகசன்னி சிலேட்டுமமென்றே பகர்ந்திடாயே. (கச)

சுரசிலேட்டுமம்.

பருகவே சுரந்தானும் பலகாலுண்டாம் பாரமா யுடம்பெங்கும் வலியுண்டாகும், அருகவே யடிக்கடிக்கு வியர்வையாகு மன்னந்தான் கொண்டுடனே வாந்தியுண்டாம், உருகவே வயிறெல்லா முளைச்சலாகு முப்பிசமு மேல்மூச்சு மிருமலுண்டாங், கருகவே நாவரண்டு நீர்தாகிக்குங் கனமான சுரசிலேட்டுமங் காணச்சொல்லே. (கரு)

அதிசாரசிலேட்டுமம்.

சொல்லவே வயிறுதனிற் குத்தலுண்டாஞ் சூலையாய் வலித்துமே சுழன்றுவிம்மும், அல்லவே விலாப்பக்க மிரைச்சலாகி வதிசாரம் போற்சிவந்து வசதியாகு, மல்லவே மார்போடு நெஞ்சுநொந்து வாய்வரண்டு இருமலொடு மூச்சுண்டாகுந், தல்லவே தாகமுட னெரிவுமுண்டாந் தவிக்குமே யதிசார சிலேட்டுமந்தானே. (கசு)

சலசிலேட்டுமம்.

தவிக்குமே தண்ணீர்தான் மிகவுங்கேட்குஞ் சலந்தானுஞ் சிக்கென்று தடித்திறங்கும், அவிக்குமே யடிக்கடிக்கு நீரிறங்கு மனலாகத் தழன்றுமே வாலோசிக்குங், கவிக்குமே குரல்தானுங் கம்மலாகுங் கனமாகக் கோழையொடு சிலேட்டுமம்வீழும், பவிக்குமே பல்லெல்லா மலைச்சலாகும் பாகமென்ற சலசிலேட்டுமம் பகர்ந்திடாயே. (கஎ)

அக்கினிசிலேட்டுமம்.

என்றதோ ரிருமலொடு கோழையுண்டா மெழிலுடம்பு வக்கினியா யெரிபறந்து, கன்றெனவே கால்கையு மழற்சியாகிக் கண்ணோடு மூக்குமே யெரிவாய்க்காணுந், தன்றெனவே தாகமது மிகவுமுண்டாஞ் சயித்தியமாய்க் கால்கைகள் குளிர்ந்துகாணும், உன்றெனவே யுண்டபின்பு பசியேயாகு முறுதியக்கினி சிலேட்டுமத்தி னுண்மைதானே. (கஅ)

## பூதசிலேட்டுமம்.

உண்மையாய்க் கண்ணுருட்டி விழித்துப்பார்க்கு மூமையைப் போற்றனிருந்தேஉரத்துப்பேசுங், குண்மையாய்க் குறட்டோடு மூச் சுவாங்குங் கொடிகொடியாய்ச் சளியோடு மிருமலாகுந், தெண்மையாய் மேனியெங்கு மிகவேவேர்க்கு னெறுநெறெனப் பல்தனையே மிகக் கடிக்குந், தண்மையாய்ச் சந்தோஷ வார்த்தைபேசி சண்டைகொள் ளும் பூதசிலேட் டுமந்தானுமே. (௧௯)

## முயலகசிலேட்டுமம்.

தானன சடமெல்லாம் வலிப்புகாணுஞ் சரீரத்தி லுணர்ச்சியற்று த் தளர்ச்சிகேடாம், வேனன கண்தானுஞ் சிவந்துகாணு மிகக்கண் ணீர் பாய்ந்துமே மேனிகன்றும், ஊனன உடம்பெங்குங் கருகிக்காணு முறுதிமல சலம்விழுதல் தெரிந்திடாது, மூனன மூச்சோடு விரும லாகு மூர்க்கமா முயலகசிலேட் டுமமசாத்தியம். (௨௦)

## வெறிசிலேட்டுமம்.

முயல்போலே விழித்துமே முறுக்குமீசை முனையாக வெழுந்திரு ந்து முறுக்கிப்பாயும், பயல்போலப் பல்லையே மிகத்திறக்கும் பாடுமே சங்கிதம் பலகாலுந்தான், கயல்போலக் கண்களெல்லாஞ் சிவந்துகா ணுங் காயிலைபோ லுடம்பெங்கு மிகக்கறுக்கும், உயல்போல உறுமியே யுதடுகாயு முலைச்சலாம் வெறிசிலேட்டும உண்மைதானே. (௨௧)

## விகாரசிலேட்டுமம்.

வெறிச்சுமே மேனியெல்லா மோடியெங்கு மிடுக்காகப் பாடுமே சங்கிதந்தான், மறிச்சுமே மங்கையர்மேற் சிந்தையாகு மனதொன்று மற்றொருகா ரியத்திற்செல்லா, வறிச்சுமே சஞ்சலங்கள் தனக்குட்பே சுஞ் சாப்பாட்டு மேனினைவு தரிகொடாது, குறிச்சுமே மயக்கமாம் வி காரமாகுங் கூறினேம் விகாரசிலேட் டுமத்தினுண்மை. (௨௨)

## சுரோணிதசிலேட்டுமம்.

உண்மையாய் முழங்காலில் மிகக்குடைந்து உளைந்துமே முதுகோடு விலாப்பக்கங்கள், கண்மையாய் முழங்கைகள் முழங்கைச்சந்து கடி னமாய் வீங்கியே குடைச்சலுண்டாந், தண்மையாய்ச் சளிகட்டுந் தாக மாகுஞ் சாதகமா யிருமியே மூச்சுண்டாகுந், திண்மையாய் நாவரண் டு தித்திப்பாகுஞ் செயமான சுரோணித சிலேட்டுமந்தானே. (௨௩)

## விரணசிலேட்டுமம்.

தானென்ற தொண்டையினிற் புண்ணுமாகிச் சளியோடு சீத் தானுங் கலந்துவீழுங், கானென்ற கழுத்தோடு பிடரிகன்னங் கனமாக வீங்கியே காய்ச்சலுண்டாங், கோனென்ற குளிரோடு எரிவுண்டாகுங் கொக்கென்றே இருமியே கூவலுண்டாம், வேனென்ற மிடறெல்லாம் நாவும்புண்ணு மிகவிரண சிலேட்டுமத்தின் விவரந்தானே. (௨௪)

துற்கந்த சிலேட்டுமம்.

விரணமாய்ச் சீயோடு ரத்தமுண்டா மிகவிருமி மீன்றண்ணீர் போலநாறும், அரணமா யன்னத்தை இரங்கொட்டாது அடிவயிறு வீங்கியே கால்கைவீங்குந், தரணமாய்த் தாகமே மிகவுண்டாகுஞ் சரீரந் தான் மிகவற்றித் தழலாய்வேர்க்குந், தரணமா யவிழ்தந்தான் பலித் திடாது துற்கந்த சிலேட்டுமந்தா னசாத்தியமாமே. (உரு)

நிந்தியசிலேட்டுமம்.

கந்தமாங் காசமொடு இருமலாகிக் கனக்கவே தும்மலாய்க் கருதி வற்றி, பந்தமா மேனியெங்கு மெரிவுண்டாகும் பாண்டுவாய் மேனி யெங்கு மிகவெளுத்து, உந்தமா யோக்காள மிகவுண்டாகு முயரமாய்க் கிறுகிறுத்துக் கிழேதள்ளுஞ், சந்தமாய்க் குரல்கம்மிப் பேசொட்டாது தனிநித்ய சிலேட்டுமதாவ்ஷ டீகந்தானே. (உசு)

தாட்டியாய்ச் சிலேட்டுமமஃ திருபத்தொன்று தயாநிதியாஞ் சிவ ன்ருனுந் தாய்க்குச்சொன்னர், நாட்டியாய்த் தாயார்நந் திக்குச்சொல்ல நந்தியுந்தான் திருமூலர்க் குபதேசிக்கத், தேட்டியாய்த் திருமூலர் சித்த ருக்குத் திறமாக வுபதேசம் பண்ணச்சித்தர், ஊட்டியா யூகிமுனி யாம் எனக்கு உபதேசஞ் செய்தபடி யுரைத்திட்டேனே. (உஎ)

உரைத்திட்ட பஞ்சபூ தியத்தைச்சொன்னேன் உண்மையாய்த் தத்துவத்தி னுண்மைசொன்னேன், நரைத்திட்ட நாடியிட நிதானஞ் சொன்னேன் நலமான அஷ்டவிதப் பரிக்ஷைசொன்னேன், துரைத்தி ட்ட சுரத்தோடு சன்னிசொன்னேன் சுயமான குன்மமொடு சூலைசொ ன்னேன், வரைத்திட்ட வாதமொடு பித்தஞ்சொன்னேன் வகையான சேட்டுமத்தின் வளஞ்சொன்னேனே. (உஅ)

பத்தாவது சிலேட்டுமரோகநிதானம் முற்றிற்று. ஆகவிருத்தம்-சஉ०.

—(*)—

## பதினோராவது
# பிரமியரோக நிதானம்.

உரைத்திட்டேன் பிரமியமென்ற ரோகந்தானே உத்தமனே இரு பத்தொன் ருகுங்கண்டாய், திரைத்திட்ட சிவனுந்தே விக்குச்சொன் னர் தேவிதான் றன்வந்திரிக் குபதேசிக்க, தரைத்திட்ட தன்வந்திரி அசு வினிதேவர்க்குச் சாற்றிடவே யசுவினியாந் தேவர்தாமும், பரைத் திட்ட வகஸ்தியருக் குப்போதிக்கப் பாங்காகப் புலஸ்தியருக் கருள் செய்தாரே. (க)

அருள்செய்தார் அகஸ்தியர்தான் புலஸ்தியர்க்கு அன்னவர்தாந் தேரையமா முனிக்குரைத்தார், பொருள்செய்தார் பூலோகத் துள்ள பேர்க்குப் போரான ஆயுருவே தத்தைத்தானே, தெருள்செய்து திரட் டியே தேரையர்தான் தேசிகனு யெனக்குரைக்கச் செகத்தோர்க்கெல் லா, மருள்செய்து போகாமல் சாத்திரத்தின்படியே மார்க்கமாம் பிர மேகம் வழுத்தக்கேளே. (உ)

வழுத்தவே பிரமியத்தின் பெயரைக்கேளாய் வாதத்தின் பிரமிய மாம் பித்தப்பிரமியம், திழுத்தவே சிலேட்டுமத்தின் பிரமியந்தான் சேரா ன வாதபித்தப் பிரமியமாகும், நழுத்தவே பித்தசிலேட்டுமப் பிரமியந் தான் நலத்ததொந்தப் பிரமியமாங் கட்டிப்பிரமியம், தழுத்தவே சலப் பிரமியந் தந்திப்பிரமியந் தனித்ததோ ரிரத்தப்பிர மியந்தானென்றே.()

தானென்ற சீப்பிரமிய மொழுக்குப்பிரமியந் தனியரித்திராப் பிர மியமாங் கிரிச்சரப்பிரமியங், கானென்ற கரப்பனும் ·பிரமியத்தோடு கல்வினையும் பிரமியமாந் தந்துப்பிரமியம், நேனென்ற நீச்சுப்பிரமியம் மலினப்பிரமியந்தான் நேரான மதுப்பிரமியம் விரணப்பிரமியம், ஏனெ ன்ற பிரமியந்தா னிருபத்தொன்று விதினுடைய உற்பத்தி யியம்பக் கேளே. (ச)

இயம்பவே யெளியோரை யிகழ்ச்சிசொல்லல் ஏற்றமாம் பெரி யோரை யேவல்கொள்ளல், புயம்பவே பொன்றனையே சோரஞ்செய்தல் பொருளதனை யபகரித்தல் பெருமைசொல்லல், நயம்பவே தம்பினர்க்கு நஷ்டஞ்செய்தல் நாட்டமா யெந்நேரம் பெண்மோகித்தல், பயம்பவே பயந்துவந்த பேரைக்காட்டல் பழித்தபேர் பிரமியத்திற் படும்பா டாமே. (ரு)

பாடாகப் பெண்போக மிகவிரும்பிப் பயின்றிட்டுப் பட்டினியே மிகவிருத்தல், தாடாகத் தான்பதத்திற் சூடுதாங்கல் சரசமாய்க்காரத்தை மிகப்புசித்தல், ஊடாக வுப்புறைப்புத் துவர்ப்புமிஞ்சல் உக்கிரமாம் ப லபலவாம் விசேஷஞ்செய்தல், காடான மனக்கிலேசங் காரமான கைத் தலொடு மிகுத்தலிது காணுங்காணே. (சூ)

காணவே முதுகெலும்பு கோர்வைசுற்றிக் கனமான நாபியிலுங்க தித்துச்சுற்றி, ஆணவே வடிக்குய்ய மூலாதார மழன்றுமிக நோவா கிப் பற்றிக்கொள்ளும், நாணவே நாடியோ டெலும்பிற்சூழ்ந்து நலமா ன சுரோணிதத்தில் மிகக்கலந்து, ஆணவே யடிவயிறு இழுத்துநோவா மாகாதபிரமியத்தி னுண்மைதானே. (எ)

வாதப்பிரமியம்.

ஆண்மையாய்க் கோசலம்போ னீரிறங்கு மருக்கியே யடித்த ண்டில் மிகவலிக்கும், வேண்மையாய்க் கட்டியாய்ச் சித்தான்வீழும் வி ரையிலே கனத்துமே நோக்காடுண்டாம், பாண்மையா யடிவயிறு பக்க ந்தன்னில் பரபரத்து நோவாகிப் பாரமுண்டாம், வாண்மையாய் வயி றதனி விசிவுண்டாகும் வற்றுமே சரீரந்தான் வாதப்பிரமியம். (அ)

பித்தப்பிரமியம்.

சரீரந்தான் மிகவற்றித் திபக்கமுண்டாய்ச் சந்தோடு கைகால்தா னேவுண்டாகுஞ், சரீரந்தான் கறுத்துமே யெரிவுண்டாகுங் கனமான குதங்குய்யக் கடுப்புக்காணும், வரீரந்தான் மஞ்சள்போற் சீயாய்வீழு மனந்தானு மலுபியாய்க் கைகாலோயும், புரீரந்தான் லிங்கமது புளகிவி ம்மும் போரான லிங்கமனே பித்தப்பிரமியம், (கூ)

## சிலேட்டுமப்பிரமியம்.

விங்கத்தில் நோயுண்டாய்க் கடுப்புக்காணும்நீரிறங்கி வெள்ளையா ய்ச்சலமாய்வீழும், பங்கத்தில் மேனியெல்லாம் பழுப்பாய்க்காணும்பா ண்டுவாய்க் கண்ணகங்களிரத்தமில்லை, சுங்கத்திற் சுருக்கிட்டு நீரிறங்கு ந் துரிசாக வடிக்கடிக்குக் கருக்கல்காணும், அங்கத்திலனல்மிகவே யழ ன்றுமேனி அசாத்தியசிலேட் டுமப்பிரமிய மறிந்துகொள்ளே. (௰)

## வாதபித்தப்பிரமியம்.

அறியவே யாக்கையெல்லாம் வலியுண்டாகி அடிவிங்கத் தடியி லே சலாகை வைத்தாற்போல, மறியவே யடிக்கடிக்கு வருத்தமாகு மாப்போலச் சிறுநீரிற் கறைந்துவீழும், வெளியவே யுதரத்திற் கட்டி கட்டு மேன்மையாய் மலமதுதா னிறுகிக்கொள்ளுந், துரியவே சுருக் கென்று நீரிறங்குந் துடிக்குமே வாதபித்தப் பிரமியந்தானே. (கக)

## பித்தசிலேட்டுமப்பிரமியம்.

பித்தமாய் வாயெல்லா மிகவேகைத்துப் பொருமியே யடிவயிறு இசிவுகாணுஞ், சுத்தமாய் மஞ்சளித்து வெள்ளைவீழுஞ் சுருக்குத்தான் விங்கத்தில் மிகுதியாகும், பத்தமாய்க் கணுக்கணுச்கு நோயுண்டாகும் பகலுறக்க மிகுதியாம் பசியெடாது, பித்தமா யுடம்பெல்லா மூதிக்கா ணும் பித்தசிலேட்டுமப் பிரமியத்தைப் பேசுங்காலே. (கஉ)

## தொந்தப்பிரமியம்.

பேசுமென்ற சரீரத்திற் றினவுண்டாகிப் போரான புழுக்கள்தா னூர்தல்போல, ஆசுமென்ற அடிவயிற்றிற் சுரப்புண்டாகு மடிக்கடிக்கு நீர்தானுங் கடுத்திறங்குங், கூசுமென்ற விங்கத்திற் கசிவுண்டாகி குறி கள்தான் பலவன்ன மாகக்காணுந், தூசுதா னடிதன்னிற் றேய்ந்திருக் குந் தொந்தமாம் பிரமியத்தின் சூக்ஷந்தானே. (கங)

## கட்டிப்பிரமியம்.

தானுகச் சடமெங்குங் கட்டியாகித் தரிக்காமல் வலியுண்டாய்த் தளர்ச்சிகேடாய்த், தோனுக விங்கத்தில் தினவுண்டாகிச் சொரியாகி விரையிரண்டிற் றீநீர்பாயும், ஊனுகக் கட்டியாய் லிங்கந்தன்னில் உறு தியாய் பருக்கைபோற் சீயும்வீழும், மானுக வுடம்பதுதான் வற்றிக் காணு மருவுகட்டிப் பிரமியத்தின் வண்மைதானே. (கச)

## சலப்பிரமியம்.

வண்மையாய் வடிவமெல்லாம் வலியுண்டாதல் வாய்கைத்து வாந் தியொடுமயக்கமாதல், தண்மையாய் விங்கத்திற் சலங்கசித்தல் தாக்கா ன வடிவயிற்றிற் பிடுங்கலுண்டாம், வெண்மையாய் மலந்தனிலே சீத ங்காணல் வெளுப்பாகிநீரிறங்கிக் குத்தலுண்டாம், அண்மையா யறை யாப்புக் கட்டியுண்டா யழுந்துமே சலப்பிரமிய வாண்மைதானே. ()

### தந்திப்பிரமியம்.

ஆண்மையா யடிவயிறு புண்போனொந்து அடித்தண்டு விறுவிறுத்து உச்சங்காணுந், தாண்மையாய் லிங்கத்தில் கின்னரத்தின் தந்திபோல் நீருக்கு முன்னேவிழு, மேண்மையாய் வெளுப்புத்தான் சீலைதன்னில் விந்தையா யடிக்கடிக்கு நனைவுகாணும், நாண்மையாய் கால்கையு மெரிச்சலாகும் நாறுதந்திப் பிரமியத்தி னுட்டந்தானே. (கசு)

### இரத்தப்பிரமியம்.

தந்திரமாய்த் தியங்கியே தலைதிருப்புஞ் சரீரமெங்கும் பஞ்சுபோற் றளர்ச்சிகேடாம், மந்திரமாய் வருந்தியே நீறிரங்கு மாசற்ற முயவிரத்தம் போலேவிழுஞ், சுந்தரம்போ விருந்தமுகந் தூசியாகுஞ் சுருக்குத்தான் சிறுநீருஞ் சிகப்பாய்விழும், அந்தரமாய்ப் பசாசுபோ லலைச்சலாகு மடிக்கடிக்கு நீரிறங்கு மிரத்தப்பிரமியம். (கஎ)

### சீப்பிரமியம்.

கடுத்துமே சீப்போல வெள்ளைகாணுங் கட்டுமே அரையாப்பு பவுத்திரந்தான், நடுத்துமே நாபியெல்லாம் விரணமாகும் நற்சந்துக் கணுக்காலிற் குடைச்சலுண்டாம், படுத்துமே யடிக்கடிக்கு நீரிறங்கும் அதிகமாய்க் குளிரோடு சுரமுமுண்டா, மடுத்துமே வருத்தமாய் மயக்கமாகும் வடிவமெலா நொந்திடுஞ்சீப் பிரமியமாமே. (கஅ)

### ஒழுக்குப்பிரமியம்.

சீயாகித் தண்ணீராய் ரத்தம்போலச் சிறுகியே ஒழுகுமெந்த நேரமுந்தான், காயாகிக் கட்டியாய் முளையுண்டாகிக் கனமான விரணமாய்க் காயமெல்லாம், ஆபாகி யங்கமெலாங் குடைச்சலாகு மழன்றுமே யக்கினியா யண்டிக்கொள்ளும், நோயாகிப் பாய்க்குள்ளே கிடையுமாகி நுண்மையா யொழுகுமென்ற மேகந்தானே. (கக)

### அரித்திராப்பிரமியம்.

தானுமே மஞ்சள்போல் வெள்ளைகாணுந் தழலாக வெதும்பியே நீரிறங்குங், காணுமே கதிர்தனையே எற்றினாற்போல் கடுப்பாக விறுவிறுக்குங் கடேஷ்ணமாகும், வாணுமே மதியம்போற் றுனிருந்த மதிமுகங்கள் மஞ்சள்போற் றுனிருக்குந், தேனுமே கசப்பாகு நாவுதானுந் திடுக்குண்டா மரித்திராப் பிரமியந்தானே. (உ0)

### மூத்திரக்கிரிச்சரப்பிரமியம்.

அரித்திரம்போ னீரிறங்கு மாண்மைகுன்று மருக்கியே மிகக்கடுத்து நீர்தான்விழும், நெரித்திரம்போ னீர்தனையே கட்டிக்கொள்ளும் நிரசியம்போற் சரீரத்தி லுறக்கமில்லை, தரித்திரம்போ லன்னத்தைப் பொசிக்கொட்டாது சஞ்சலமாய் மனதுதான் றரிக்கொட்டாது, விரித்திரம்போ லுடம்பெல்லா முளைச்சலுண்டாம் விகிமூத்திரக் கிரிச்சரப் பிரமியந்தானே. (உக)

### காப்பான்பிரமியம்.

உளைஞ்சுமே வயிறுதான் சிதங்காணு மூஷ்ணமாய் மூத்திரந்தா னுருக்கிவீழும், அளைஞ்சுமேயங்கமெல்லாஞ் சொறியுண்டாகு மழலாக வெதும்பலாய்க் கைகாலோயும், புளைஞ்சுமே லிங்கத்திற் புண்போல்கு ற்றிப் பொடிப்பொடியாய் சுண்ணும்புக் கற்போல்வீழுங், களைஞ்சுமே நீரோடு மலமுஞ்சிக்குங் கசியுமே காப்பானும் பிரமியந்தானே. (உஉ)

### கற்பிரமியம்.

கசியுமே லிங்கத்திற் கள்ளைப்போலக் கற்றாழை நாற்றந்தா னு டம்பில்வீசுந், தசியுமே சாந்தரைத்துப் படுத்தகற்போல் தயங்கியே நீர்ச்சிக்கி வயிறுவிம்மும், விசியுமே விறுவிறுப்பாய் வயிறெல்லாந்தா ன் மீறுன நாபிதொட்டுப் பிசமுமாகும், பசியுமே யில்லாமற் பாரமா குஞ் பளிங்குநிற மாகுங்கற் பிரமியந்தானே. (உங)

### தந்துப்பிரமியம்.

கல்லான சிலந்தியதி னூலைப்போலக் கனமான லிங்கத்திற் கலந் துவீழும், வல்லான வண்மையோ டுதிரங்காணும் வலியெடுக்கு மடித் தண்டு விம்மும்போது, சல்லான கல்மிஷந்தா னடியிற்றங்குஞ் சமத்தா ன விலாப்பக்கந் தனிலேகுற்றும், துல்லான மூத்திரந்தான் றுளியாய் வீழுந் தந்துபிர மியத்தினிடச் சுருக்குத்தானே. (உச)

### நீச்சுப்பிரமியம்.

சுருக்காகக் கள்ளுபோ னீரிறங்குஞ் சூக்ஷமாய் வெள்ளையொடு சியுங்காணு, மருக்காக லிங்கமுச்ச மாகும்போது வருத்தமா யடித்த ண்டு குடத்தோடொக்க, விருக்காக விறுவிறுப்பாய் வலியுண்டாகும் விசையான நாம்பெல்லாஞ் சுருக்கமாகுங், குருக்காக வடிவயிறு தனி லே குற்றும் குளிருமே நீச்சுப்பிர மியத்தின்கூறே. (உரு)

### மலினப்பிரமியம்.

கூறுக வடிநரம்பு குதங்குய்யந்தான் குற்றியே யடிக்கடிக்கு வலி யுண்டாகும், வாறுக வடிவெல்லா மிகவழற்றி மயக்கமாய் நாவோடு கைத்தலாகும், பாறுகப் புறங்காலிற் றிமிருண்டாகும் பருத்துமே லிங் கத்தில் வெள்ளைவீழுந், தூறுகத் துன்மாங்கிசஞ் சுருண்டுகாணுந் தூசி மிகப்படியும்வலிப் பிரமியந்தானே. (உசா)

### மதுப்பிரமியம்.

வலியாகி லிங்கமெலாம் வருத்தமாகி வண்டலாய்த் தேன்போல நீரிறங்கும், எலியாகி யெறும்பரிக்குஞ் சிறுநீர்தன்னில் இறைச்சிபோ லுள்ளுக்குள் விரணமாகும், நலியாகி நாற்றமா முடம்பெங்குந்தான் நாவிலே யுணர்ச்சியிலா துரிசைபோகும், மலியாகி நாவறண்டு மயக்க மாகும் வருத்தமா மதுப்பிரமிய மார்க்கமாமே. (உஎ)

விரணப்பிரமியம்.

மார்க்கமா யுடம்பெங்கும் விரணமாகி மகாவருத்த மாகியே மயக்கமாகி, தேர்க்கமாய் லிங்கமது பருத்துவீங்கிச் சீயோ டிரத்தந்தான் மிகவேகாணும், கார்க்கமாய் கறடோடு கணுக்களெல்லாங் கட்டியே நோவாகிக் கடுப்புமுண்டாம், வேர்க்கமாய் மேனியெல்லாம் வெதும்பலாகும் விறுவிறுக்கும் விரணபிர மியந்தானுமே. (உஅ)

தானான பிரமியந்தா னிருபத்தொன்றுஞ் சதாசிவன்றான் றுய்தனக்கு வருளிச்செய்ய, பானான தாய்தானுநந் திக்குச்சொல்லப் பராபரமா நந்திதன்வந் திரிக்குச்சொல்ல, ஆனானதன்வந்திரி அசுவினிதேவர்க்கு வருள்செய்ய அசுவனியும் அகஸ்தி யர்க்குச்சொல்ல, கோனானஅகஸ்தியரும் புலஸ்தியர்க்குச்சொல்ல குருவான புலஸ்தியருங் குறித்திட்டாரே. (உகூ)

குறித்திட்டார் தேரையமா முனிவனுக்குக் கூறான தேரையமா முனிவர்தாமும், உறைத்திட்ட யூகியென்ற வெனக்குச்சொன்னார் யூகியென்ற முனிநானே உளமுவந்து, மறைத்திட்ட வாயுருவேதத்திலுள்ள மறைப்பான பொருளெல்லா மாய்ந்துபார்த்து, தெறித்திட்டு திரட்டியெல்லா மொன்றாய்ச்சேர்த்து சிவன்சொன்ன படிசொன்னேன் தெளிவாய்த்தானே. (ஙய)

பதினோராவது, பிரமியரோகநிதானம் முற்றிற்று. ஆகவிருத்தம்-சஙு௦.

—(*)—

## பனிரண்டாவது,

# மேகரோக நிதானம்.

தெளிவாகத் தேவிதான் சிவனைநோக்கித் தெண்டனிட்டு வாயுருவேதத்தைமுன்னே, அளிவாக அநுக்கிரகம் பண்ணவல்லோ ஆத்மகோ டிகளிடத்திற் கிருபைவைத்து, நளிவாகத்தேவருக்குந் தேவரான நடேசரே சகலபே ரிடத்திற்றானும், எளிவாக விதயகம லத்திற்றானே இருந்தவரே சலத்தைநீர் சொல்லுமென்றாள். (க)

சொல்லுமென்று கேட்டவுடன் சிவனுமப்போ தேவியைத்தான் முகம்பார்த்து வாராய்தேவி, அல்லுமென்ற மேகமது விரண்டுபத்து அதிதுலப மாயிருக்கும் லோகத்துள்ளே, உல்லுமென்ற உன்னுடைய சிநேகந்தன்னா லுரைக்கரிது யுறைக்கின்றே னூற்றுக்கேளாய், மல்லுமென்ற மாதேவி பராக்கில்லாமல் மகிழ்ந்துநீ கேளுமென்று வசனித்தாரே. (உ)

வசனித்த மேகமது விரண்டுபத்து வாதத்திற் பிறந்தசலம் நாலேயாகும், பிசனித்த பித்தத்தி லுற்பவித்த பேரான சலந்தானு மாறுமாகுந், தெசனித்த சேட்டுமத்தி லுற்பவித்த சீரான சலந்தானும் பத்தேயாகும், இசனித்த திதினுடைய குணகுணங்க ளெழிலான உற்பத்தி யியம்பக்கேளே. (ந)

இயம்பவே ஆறுகுளம் பின்னஞ்செய்தல் ஏற்றமாய்ப் பிராமணஸ்திரீ சங்கம்பண்ணல், பயம்பவே பாலர்களுக் கொளித்துத்தின்னல் பழமைசலம் போறவழி தனைத்தடுத்தல், அயம்பவே ஆலயத்திற் சலம் விட்டோர்க்கு மாதியாம் வேதத்தைத் தூஷித்தோர்க்குந், துயம்பவே சூரியனை வணங்காதார்க்குஞ் சுருக்காக மேகம்வந்துற் பவிக்குந்தானே.()

உற்பவிக்கும் பால்நெய்யா விறைச்சிகள்ளா லுரிசையாம் மீன்றன்னு லருவிருத்த, மற்பவிக்கும் பதார்த்தத்தால் மதுரவஸ்தால் மந்தங்கள் தனைப்பொசித்தல் வேகாப்பண்டங், குற்பவிக்குங் குளுந்தவன்ன மங்கைகோஷ்டி குறித்தநித் திரைதவிர்த லக்கினிமந்தம், தற்பவிக்குஞ் சரீரந்தான் மிகப்பருத்தற் சஞ்சலத்தான் மிகப்பயத்தால் தரிக்கும்நோயே. (ரு)

வாதசலம்-கூ.

தரித்திட்ட வாதத்தின் சலந்தானுனு தனியான நாலுக்கும் பேரேதென்னில், அரித்திட்ட ஆச்சியகந்தி மேகத்தோடு அதன்பிறகு சுத்தமா மேகமொன்று, பிரித்திட்ட பிரமியமா மேகமொன்று பேரான மாங்கிசசிராவி மேகமொன்று, குறித்திட்ட விதுவாத சலந்தானுனு குணுகுணத்தி னுட்பமெல்லாங் குறிப்பாய்க்கேளே. (சு)

ஆச்சியகந்திமேகம்.

குறிப்பாக ஆச்சியகந்திசல மிறங்கும்போது குணமான நெய்போலத் தானிறங்கும், நெறிப்பாகச் சீலேதோய்த் துக்கொளுத்தில் நேரான விளக்குப்போ லெரியும்பாரு, தெறிப்பாகத் தினமொன்றிற் குருணிதானுஞ் சீக்கிரமா யிறங்கிவிடுந் தேகம்வாடும், எறிப்பாக மேகங்கண் டேழுநாட்கு ளெய்துவா ரெமபுரத்தி லெய்துவாரே. (எ)

சுத்தமேகம்.

எய்துவார் சுத்தமா மேகந்தானு'மிறங்குமே கோசலம்போல் வன்னமாக, நைதுவார் நாற்றமுமப் படியேயாகும் நாழுழி தானிறங்குமொருவேளைக்குக், கைதுவார் காய்ச்சினல் விளச்குத்தானுங் கடுந்துலக்க மாயெரியுங் களைமெத்தாகும், பைதுவார் பதினைந்து நாளிற்கொல்லும் பாலன்போ விருந்தமுகங் கிழமுமாமே. (அ)

பிரமியமேகம்.

கிழமாகப் பிரமியந்தா னிறங்கும்போது கேவலமாங்கொழுப்பான மாமிசநாற்றம், பழமாக வேளைக்கு நாழுழிதானும் பருத்துதா னிறங்குமே யடிக்கடிக்கு, அழமாக அந்தநீர் காய்ச்சினக்கா லதின்வாடை தேன்போலத் தானிருக்கும், இழமாக விப்படித்தான் கண்டமேக மெமபுரத்துக் கறுமாதத் தினிற்றுனேகும். (கூ)

மாங்கிசசிராவிமேகம்.

ஏகுமே மாங்கிசசிராவி இறங்கும்போது இளவாட்டின் கொழுப் புபோற் றனிறங்கும், ஆகுமே காய்ச்சின லாட்டினெய்போ லட வாக வேளைக்குக் குருணிகாணும், காகுமே கருப்பஞ்சார் போலநாறுங் கனத்துத்தான் மூன்றுநா ளெட்டுநாளில், சாகுமே யைந்தாமா தத்திற் றனுஞ் சதுர்விதமாம் வாதசலந் தானுமாச்சே. (ய)

வாதம்நாலுக்கும் சமுதாயகுணம்.

ஆச்சென்ற நாலுக்குங் குணத்தைக்கேளா யழகான கைகால்க ண் ணுடலழற்றும், நாச்சென்ற நாவறளும் பல்லுநாக்கு நடுத்தொண் டை கறுப்பேறு முதலெட்டாந்தான், பேச்சென்ற பிலகூடியமாங் கண் மேல்நோக்கும் பெருகவன்னந் தண்ணீரு மிகவேவாங்குந், தாச்சென்ற சரீரந்தான் கத்திவெட்டுத் தான்போலக் கடுத்துமே தழலுண்டாமே.()

தழலாக வெதும்பியே மயக்கமாகுஞ் சஞ்சலமா யிடைகொடா தே புரட்டும், அழலாக வடிக்கடிக்கு வாயுதானு மாகாத நாற்றமாய்ப் பிரியுமெத்த, குழலாக நாடியே குடிலமாகக் குணபேத மாய்நடக்கும் வேகமெத்த, வழலாக வாதமே கந்தனக்கு வகுத்தமுறை பாடுதா னு லுமாச்சே (கஉ)

பித்தசலம்-சு.

முறையான பித்தசல மாறுமாகு முதிர்ந்தஅப் பியமென்றும் பிர மியமென்றும், தறையானசவ் விரணமது மேகமென்றுந் தக்கசாந் திர மேகம் ஆர்க்கமேகம், மறையான விந்தாறு மேகந்தன்னை மகதேவர் சொல்லிடவே தேவிகேட்கத், துறையான குணகுணத்தை விரித்துச் சொல்ல சுத்தமா யப்பியத்தின் சுரூபங்கேளே. (கந)

அப்பியமேகம்.

சுருவமா யப்பியந்தா னிறங்கும்போது துடியானை மதம்போலத் தானிறங்கும், வெருவமாய் வேளைக்குநா ழிதானும் விரிசாகத் தா னிறங்குங் காய்ச்சினக்கால், உருவமா யுவர்மண்போற் படியும்பாரு உ க்கிரமாக் கண்டவெட்டா மாதந்தன்னில், இருவமா யெமபுரத்துக் கெ ய்துவார்க ளேற்றமா மப்பியத்தின் மேகந்தானே. (கச)

பித்தப்பிரமியமேகம்.

தானென்ற கற்றூழஞ் சாறுபோலுந் தன்னூற்றம் போலவே மிக வேநாறுங், கானென்ற காய்ச்சினூற் கடிதாநாற்றங் கடிகைக்கு ளிருநாழி தானிறங்கும், ஏனென்ற விக்குணமா மேகந்தானு மிறங்கினதோர் மூ ன்றுகு மாண்டுதன்னில், பானென்ற பரமபத மெய்துமென்று பரமனு ரை பித்தப்பிரமியப் பண்புதானே. (கரு)

### சவிரணமேகம்.

பண்பாகச் சுண்ணும்பு வழலேநாறும் படியுமே யடிதனிலே நீறு போல, நண்பாக வேளைக்கு நாழிதானும் நாறியே விறங்குமிக வெரும்பரிக்கும், கண்பார்க்கக் காய்ச்சினுற் சுன்னநீறுங் கனமாகப் படியுமே யடியிற்ருனுந், தண்பாகக் கண்டசல மிரண்டாமாண்டிற் சாகுவரே சவிரணத் தாண்மைதானே. (கசு)

### மதுமேகம்.

தண்மையாய்ச் சலந்தானும் பசுப்புமஞ்சள் தானிறங்கும் பீசமுங்கோ சமுங்கடுக்கும், அண்மையா யடிக்கடிக்கு நீரிறங்கு மடிக்கடிக்கு அரைநாழி தனிலேகாணும், வெண்மையா யடியதனிற் ருன்பிடிக்கும் மிக்கான சடம்வெளுத்து மேனிகன்றும், பண்மையாய்ப் பஞ்சவாண்டதனிற்கொல்லும் பகர்கின்ற மதுமேகத்தின் பாங்குதானே. (கஎ)

### சாந்திரமேகம்.

பாங்கான பளிங்குநிறம் போவிறங்கும் பரிபீச கோசமுமே கடுத்துக்கூசுந், தாங்கான தாழையொடு விழுதுசாறு தனைப்போலத் தானிறங்குங்காய்ச்சிக்காணில், தேங்கான சீப்போல மிகவேநாறுஞ்சீக்கிரமாய் வேளைக்கோர் படிதானுகும், ஏங்கான விப்படித்தான் கண்டசாந்திர மெய்திடுமே ஐந்தாண்டி லசாத்தியந்தானே. (கஅ)

### ஆர்க்கமேகம்.

சாத்தியமாய் முயல்ரத்தம் போலவீழுஞ் சாதகமா யிருநாழி தானிறங்குங், காத்தியமாய்க் காய்ச்சினுற் புலாலேநாறுங கனமான பீசகோசங்கடுக்கும், ஊத்தியமா யிப்படிதான் கண்டமேக மொன்பதா மாதத்தி லொடுங்குஞ்சீவன், ஆத்தியமா மார்க்கமா மேகமென்றே அவனியுள்ளோர் தங்களுக்கு அறியச்சொல்லே. (சகூ)

அறியவே பித்தசல மாறுமேதா னங்கமதிற் செய்கின்ற குணத்தைக்கேளாய், தறியவே சரீரம்வற்றி யெரிவுண்டாகுஞ் சடத்திலுந்தா னீரிலுந்தான் கவிச்சுண்டாகுந், தெறியவே சீப்போலுங்கற் ருழைபோலுஞ் சேல்போலுந் தேன்போலு நாற்றமுண்டாம், வெறியவே பீசத்திற் கோசத்திற்குத்தல் மிகுமீரல் நாபியிலும் வேக்காடாமே. ()

வேக்காடாய் விரணமுண்டாய் வாய்தானூறும் விக்கலொடு அருதியாய்ச் சுரமுண்டாகுந், திக்காடாய் தேசந்தான் கிடக்கொட்டாது தியக்கமொடு மூர்ச்சையுண்டா மயக்கமாகுஞ், சாக்காடாய் நாவறளுங் கண்ணீர்தாகஞ் சர்த்தியொடுசரீரமெல்லாந் தளர்ச்சியாகுந், தாக்காடாய் மலசலந்தான் மிகவுண்டாகுஞ் சபகுணந்தான் பித்தசல மாறுமாச்சே. (உக)

## சிலேட்டுமசலம்-கo.

ஆமுன சிலேட்டுமசலம் பத்துதன்னை அரன்சொல்ல ஆத்தாள் தான் கேட்கும்போது, வாமுன வசாமேகம் உத்தமமேகம் மச்சை மேகத்தோ டாதிக்கமேகம், தாமுன சுராசுக்கில முதகமேகஞ்சுற்றமா ம் பிரசமொடு சாரமேகம், தேமுன தைத்தியமா மேகமென்று செப்பி னூர் சிலேட்டுமத்தின் சலத்தைத்தானே. (உஉ)

## வசாமேகம்.

தானென்ற வசாமேக மிறங்கும்போது சலத்தின்மேல் நிணம் போலு மாடையுண்டாம், வேனென்ற வேளைக்குக் குருணிதானும் வி டுபட்டுத் தானிறங்குங் காய்ச்சினக்கால், நேனென்ற நிணமுருக்குப் போலநாறும்நிலையாக விப்படிதா னிறங்குமேகம், ஏனென்ற வேழாண் டு தன்னிற்மூனு மெமபுரத்துக் கேகுமென்றே வியம்பிடாயே. (உங)

## உத்தமமேகம்.

இயம்பவே நல்லதண்ணீர் போலிறங்கு மெடுத்ததனைக் காய்ச்சி னல் நல்லதண்ணீர், நயம்பவே நாற்றமது நல்லதண்ணீர் நல்வேளை த னக்குமொரு குருணியாகும், அயம்பவே அப்படிதான் கண்டமேக மையிரண்டு வருஷத்தி லறியக்கேளாய், மயம்பவே மறலியிட வூர்புக் காகு மகத்தான வுத்தமமா மேகந்தானே. (உச)

## மச்சைமேகம்.

உத்தமமா யெலும்புக்குட் சதையைப்போல வுருகியே தானிறங் குங் காய்ச்சினக்கால், நித்தமமாய் நிணநாற்ற மாயிருக்கும் நிசமாக வே ளைமுந் நாழியாகும், பத்தமமா யப்படிதான் கண்டமேகம் பரமசிவ னடியாரைச் சாராதாகும், இத்தமமா யேமனிட வூர்புக்காகு மிசைந்த வைந்து வருஷத்தில் மச்சைமேகம். (உரு)

## ஆதிக்கமேகம்.

மேகந்தா னிளநீர்போற் மூனிருக்கு மிகக்காய்ச்சி விளநீர்போற் மூனிருக்கும், வாகந்தான் வாடையது இளநீர்வீசும் வகையான வேளை க்கு நாழியாகுந், தாகந்தான் மிகவுண்டா யுடம்பிளைக்குஞ் சஞ்சலந்தா ன் மிகவுண்டாங் கண்டஎழு, பாகந்தான் வருஷத்திற் சாவுமாகும் பாங் கான ஆதிக்கமே கத்தின்பண்பே. (உசு)

## சுராமேகம்.

பண்பாக நுரையோடே வெளுப்புபோலப் பனங்கள்ளு போல வே தானிறங்குங், கண்பாக வேளைக்கு நாழியாகுங் காய்ச்சினூற் கள் மணந்தான் மிகவேவீசும், மண்பாக மாப்போல மணந்தானுண்டா மயக்கமா மிப்படித்தான் கண்டமேகம், எண்பாக எழுஆண் டதனிற் கொல்லு மேற்றமாஞ் சுராவென்ற மேகந்தானே. (உஎ)

சுக்கிலமேகம்.

என்றதோர் மேகந்தா னிறங்கும்போது ஏற்றமாஞ் சுக்கிலத்தி னிறமேபோலுந், தன்றதோர் தாளியிடச் சாறுபோலுந் தரித்துமே மெழுகூர்ந்து சிறுகிவீழுங், கன்றதோ ரிதைக்காய்ச்சிற் கட்டிபோலக் கனமான ஈரல்போற் றேய்ந்துபோகும், முன்றதோர் கண்டசலம் மூன்றுமாண்டில் முயற்சியாய்க் கொலுஞ்சுக்கில மேகந்தானே. (உஅ)

உதகமேகம்.

மேகமாய்க் கழுநீர்போற் சிக்கிச்சிக்கி மிகுதியாய்த் தானிறங்குங் காய்ச்சினக்கால், சாகமாய்ச் சங்குசுண் ணாம்புபோலத் தாழவே மண்டி மிகப் பாயும்பாரு, பாகமா யிப்படித்தான் கண்டமேகம் பாங்கமா யோ ராண்டு தனிலேகொல்லும், வேகமாய் மிகநாறுஞ் சரீரந்தானு மிகஉதக மேகமென்றே விளம்புவாயே. (உகூ)

பிரசமேகம்.

விளம்பவே தேன்போலமிகவிறங்குமிக்கான தேன்போன்ற நாற்றமாகும், அளம்பவே மெழுகுபோ லடியினிற்கு மதிகமா யீயெறும்பு மிகவேமொய்க்குங், குளம்பவே வேளைக்குக் குருணியாகுங் குறிகண்ட வைந்துமா தத்திற்கொல்லுங், தளம்பவே சரீரத்தில் மதுத்தானுகுந் தனித்ததோர் பிரசமென்ற மேகந்தானே. (௩0)

சாரமேகம்.

தனித்ததோர் மேகந்தா னிறங்கும்போது தழலான சுண்ணாம்பு கார்நீர்போல, மினித்ததோர் மிகுதியாய்த் தானிறங்கும் வேளைக்கு நாழி தானுமாகும், கனித்ததைக் காய்ச்சினாற் படியுமுப்புக் கண்டசலம் பதினைந்து வருஷத்திற்றான், வனித்ததோர் மறலியிட லூர்புக்காகும் வசனித்த சாரமேகத்தின் வண்மைதானே. (௩க)

தைத்தியமேகம்.

வண்மையாய் மேகந்தா னிறங்கும்போது மகாவிறைச்சி கழுவினதோர் தண்ணீர்போலாம், கண்மையாய்க் காய்ச்சினாற் கவிச்சடிக்குங் கனமான நீர்த்தாரை முறுக்கிவீழும், வெண்மையாய் வேளைக்குமுந் நாழியாகு மிக்கான குறிகண்ட மூன்றுமாண்டு, தண்மையா யேமனிடப் புரத்துக்கேகுந் தைத்தியமே கந்தானுந் தசமுமாமே. (௩உ)

சிலேட்டுமசலத்தின்குணம்.

தசமான பத்துக்குங் குணத்தைக்கேளாய் சரீரந்தான் பருத்துமே வெளுப்புண்டாகும், அசமான தினவுண்டா மடிக்கடிக்கு அன்னமுமே தண்ணீரு மிகவேதேடுங், கசமான விருமலுடன் கோழையுண்டாங் கனவெரிவா யாயாச முழலையாகுங், குசமான குணங்களெல்லாஞ் சிலேட்டுமந்தன்னில் கொடியசலக் குணமென்றே கூறினாரே. (௩௩)

மேகம் இருபதுக்கும் அவத்தை.

கூறுன மேகமது விருபதுக்குங் குணந்தன்னைச் சிவன்சொல்லத் தேவிகேட்கத், தாறுன தாகமொடு சோகமேக்கர் தரியாமல்நீரிழித லி ருமல்மூச்சு, ஆறுன அருசிசர்த்தி சித்தப்பிரமை யடிக்கடிக்குத் தண் ணீர்தா னன்னங்கேட்டல், ஈறுன விடுப்புக்குள் கடுப்புகாண லெலும்பு முற்ற லழற்றலோ டெரிவுண்டாமே. (ஈசு)

எரிவோடு சரீரமெல்லா மறைபட்டாற்போ லெழிலுடம்பு நோத ல்நித் திரையில்லாமை, வரிவோடு வாயுமெத் தவும்பரித்தல் மனது சஞ் சலப்படுதல் காற்றுவேண்டல், மெரிவோடு மேல்மூச்சு மிகவுண் டாதல் விக்கலொடு மயக்கந்தான் மெத்தக்காணல், தெரிவோடு தேக மெங்கும் வெளிறுண்டாதல் தேகமெத்த வாலோபப் படுதல்காணே.()

காணவே முதலவத்தை சரீரந்தானுங் கனமாகப் பருத்திறுகி நீர் த்துவாரம், வேணவே வேண்டாக்கி யகலம்பண்ணு மிக்கவிரண் டாம வத்தை விளம்பக்கேளாய், மூணவே மூத்திரப்பீ டையுமாச்சுக்கில முக முழுகித் தேஜசுதான் மிகவேகுன்றும், நாணவே மூன்ருகு மவத்தை க்குந்தான் நாவறளும் வாயுவது மீறுந்தானே. (ஈரு)

தானுன நாலவத்தை யங்கதாகஞ் சன்னியது பாதமுண்டா மைந் தவத்தை, தேனுன நீர்ப்பெருகுந் தாதுநஷ்டம் நிலையாறு மவத்தை யு டற் கிடைகொள்ளாது, மூனுன மூர்ச்சைவரு மேழவத்தை மிக்கவ ரோ சிகஞ்சுவாசந் தேகசாட்டியம், ஏனுன எட்டாவ தவத்தைதானே ஏழுகிரந்தி பிளவையுந்தான் மிகவுண்டாமே. (ஈஎ)

சாத்தியவசாத்தியம்

உண்டாகு மொன்பதா மவத்தைகேளா யொழுக்கான வாசாரங் கிருமியுண்டாம், பண்டான பத்தாந்தா னவத்தைகேளாய் பாரமாம் க்ஷ யங்கண்டு பாத்துக்கேகும், வெண்டாகு மேகந்தா னிருபதுக்கும் விள ங்கியதோர் தசவவத்தை விவரஞ்சொன்னேம், அண்டாகுஞ் சாத்திய வசாத் தியமிரண்டு மறிந்துகொண்டு வடவாக வவிழ்தஞ்செய்யே. ()

செய்யவே வச்சிரமாந் தண்டமான செயமான முதுகுதண்டைப் பற்றிநிற்கும், பெய்யவே பெருநாம்பில் மேகந்தானும் பிறக்குமென் றே தானறிந்து வாதந்தன்னுல், பிய்யவே பிறந்தசலம் நாலசாத்தியம் பித்தத்திற் பிறந்தசல மாறும் யாப்பியம், பையவே சேட்டுமத்திற் பிறந் தசலம்பத்தும் பரமனுரைத் தார்சாத்தியம் பாரபரிக்கே. (ஈகூ)

மேகம் இருபதுக்கும் பத்தியம்.

பரிமேக மிருபத்துக்கும் பத்தியந்தான் பாங்காக வுரைத்திடவே பசுவின்வெண்ணெய், பொரிவாக வெருமைமோர் பொன்னுங்காணி பே ர்பெற்ற சிறுகீரை முசுட்டையாகும், அரிவாக அவரையொடு வடல் முருங்கை அதிரசமாங் கண்டுசருக் கரையுமாகும், மரிவாக மாதளையா ம் பேரீந்தாகு மகாவிளம் பழமுந்திரிப் பழமுமாமே. (சய)

ஆமேபே யன்வாழைப் பழமுங்கச்சல் அத்திபிடப்பிஞ்சு சிறு பயறு பழஞ்சோறு, பாமேபழஞ் சோற்றுநீர் வெந்தயஞ்சீரகமாம் பாகல்பீர்க்கங் காய்கருவேப் பிலேகொத்தமல்லி, நேமேநெற் பொறிஎள்ளு முசு முசுக்கையாகும் நேரான நல்லெண்ணெய் புண்ணுக்குளுந்து, தாமேக மிருபதுக்கும் பத்தியவர்க்கஞ் சாற்றினர் சிவன்றனுந் தாய்க்குத்தானே. (சுக)

தாயான பராபரிக்குச் சிவன்றன்சொல்லத் தாய்கேட்டு நந்திதனக்கருளாற்சொல்லத், தூயான நந்திதன்வந் திரிக்குச்சொல்ல சுற்றமாய்த் தன்வந்திரிஅசுவினிக்குச்சொல்ல, ஆயானவசுவினிஅகத்தியர்க்குச்சொல்ல அகத்தியரும் புலத்தியருக்குபதேசிக்கப், பூயான புலத்தியருந்தேரையமா முனிக்குப் புகன்றிட்டா ரெந்தனுக்குத் தேரையமுனிவர்தானே. (சுஉ)

தானன யான்தானே மனமுவந்து சகலசனத் துபசாரச் சாங்கமாகக், கோனன சிவன்சொன்ன வாதிநூலின் குறிப்பெல்லாம் பார்த்துணர்ந்து மொழியைத்திரட்டித், தேனன சாத்திரமாய்த் தமிழினலே தெளிவாக வெல்லோரு மறியவென்று, ஆனன வாயுருவே தத்தையெல்லா மடக்கியே சுருக்கினேன் மேகமுற்றே. (சுங)

பனிரண்டாவது, மேகரோகநிதானம் முற்றிற்று. ஆகவிருத்தம்-சுகூங.

—(*)—

## பதின்மூன்றுவது
# குட்டரோக நிதானம்.

முத்தாகுங் குஷ்டந்தான் பதினெட்டுக்கும் முனியான யூகியான் சொல்லக்கேளாய், புத்தாகும் புண்டரீகக் குஷ்டத்தோடு பொருகின்ற விஸ்போடக் குஷ்டமாகும், பத்தாகும் பாமாகுஷ்டம் ஏகசர்மகுஷ்டம் பரிவான கர்னகுஷ்டம் சர்மகுஷ்டங், கித்தாகுங் கிருஷ்ணகுஷ்டம் அதுவும்பரகுஷ்டங் கெடியானமண் டலகுஷ்ட மாகுமென்னே. (க)

குஷ்டமா மபரிச குஷ்டமோடு குடிலமாம் விசர்ச்சிகாக் குஷ்டமாகும், வட்டமாம் விபாதிகாக் குஷ்டமோடு மருவலாங் கிடீபகுஷ்டஞ் சர்மதலகுஷ்டங், திட்டமாந் தத்துருக் குஷ்டமோடு தாக்கானசித் மாகுஷ்டஞ் சதாருகுஷ்டங், திட்டமாஞ் சுவேதகுஷ்டங் தன்னேடொக்கச் சுயம்பான பதினெட்டுக் குஷ்டமாச்சே. (உ)

ஆச்சென்ற பதினெட்டுக் குஷ்டந்தானு மவரவர்கள் செய்கின்ற வதர்மத்தாலாம், தேச்சென்ற சிவாலயத்தி லுச்சிஷ்டங்கள் செய்தவர்கள் சிவநிந்தை பண்ணினேர்கள், மூச்சென்ற பெரியோரைத் தூஷித்தோர்கள் மூர்க்கமா யடைக்கலத்தை யெடுக்கின்றோர்கள், கூச்சென்ற தினையளவுங் குறைந்தகூலி கொடுக்கின்றோர் குஷ்டத்திற் கூடுவாரே. (ங)

## புண்டரீகக்குஷ்டம்.

கூடுமே தாமரையின் பூவிதழ்ப்போல் குவிந்துமே கறுப்போடு வெளுப்புமாகுந், தேடுமே சிவப்புபல வன்னமாகுந் தினவுமிக வாகியே சொறியும் செந்நீர், வாடுமேஐயத்தினுற் பத்தியாகி வருத்தமிகவுண்டாகி நோவுமாகும், போடுமே சரீரங்கள் முகங்கள்கால்கள் புண்டரீகக் குஷ்டத்தின் புதுமைதானே. (ச)

## விஸ்போடக்குஷ்டம்.

புதுமையாய்ச் சரீரமெங்குந் தினவுண்டாகும் பெருவெடியாய்த் திக்கெனத்திக் கொழுந்துபோல, மெதுமையாய் விட்டெரியும் நல்லபாம்பின் விஷப்படம்போ லேதடித்து வெளுப்புமாகுஞ், சுதுமையாய் மிகச்சொறியுஞ் சிவப்புமாகுந் துக்கமொடு சஞ்சலமு மிகவுண்டாகுங், கதுமையாய்த் தோலெல்லாந் தடிப்புண்டாகுங் கனத்தவிஸ்போ டகமான குஷ்டந்தானே. (ரு)

## பாமாகுஷ்டம்.

தானுன தினவுண்டாய் வெளுத்திருக்குந் தங்கியே சீப்பாயுந் தேகங்குன்றுங், கானுன சரீரமெல்லா மெரிவுண்டாகுங் கனமான தாமரையின் குடைபோலுண்டாம், பானுன சொறியோடு தினவுண்டாகும் பாம்பினிடத் தோல்போலே வுரிந்துவீங்குங், கானுன கால்கையுங் குறைந்துகாணுங் கனமான பாமாகுஷ்ட மாகுந்தானே. (சு)

## ஏகசருமகுஷ்டம். (கஜசருமகுஷ்டம்.)

தானுகச் சடந்தானு மிகக்கறுப்பாஞ் சடமெங்குந் தோலுரியுஞ் சிவப்புமாகும், வேனுன வறவறெனத் தானிழுக்கும் வெடிக்குமே சொறிதலாய்த் தினவுண்டாகுங், கானுகச் சர்மகுஷ்ட மிதிலுண்டாகுங் கடினமாய்க் கால்விரல்கள் கனப்புண்டாகுங், கூனுகத் தேகமெங்கும் வலியெடுக்குங் குறியான ஏகசர்ம குஷ்டந்தானே. (எ)

## கர்னகுஷ்டம்.

சர்மந்தான் மிகவெடிக்கும் பொரிபோற்றுனுஞ் சடமெல்லாம் வேதனைபச் சென்றிருக்குந், தெர்மந்தான் றிரிதோஷ குணமுண்டாகுந் தேகமெங்கும் பாரிக்குந் திமிருண்டாகுங், கர்மந்தான் காக்கணம்பூ நிறமதாகுங் கண்டிப்பு வீக்கமாய்த் தானிருக்கும், வர்மந்தான் மனக்கிலேச மிகவுண்டாகு மாகர்ன குஷ்டத்தின் மார்க்கந்தானே. (அ)

## சர்மகுஷ்டம்.

மார்க்கந்தான் பசுமையாய் வெளுப்புண்டாகு மாசிவப்புக் கறுப்புமாய்த் தினவுண்டாகுந், தார்க்கமாய்த் தடிப்புச்சீப் பாய்ச்சலாகுந் தசைவயிறு கடிதடத்திற் சொறியுமாகுந், தேர்க்கமாய்த் திமிரோடு தசையும் பாயும் தேக்கான எரிச்சலா யூஷ்ணமாகுஞ், சீர்த்தமாய் வயிறுதனிற் கண்டிப்பாகுஞ் சர்மகுஷ்டந் தன்னுடைய சேதிகேளே. (கூ)

### கிருஷ்ணகுஷ்டம்.

சேதியாய்த் தேகமெங்குந் தான்கறுக்குஞ் சிவப்புடனே சிலேட் டுமெத்தி லுற்பவித்துக், காதியாய்த் தோல்திமிர்த்தே கதித்து நாறுங் கனமான தாதுவிலு மூஷ்ணந்தாக்கும், நாதியா யுடம்பெங்கும் நோவுண்டாகும் நுட்பமாம் புறங்காலி லரையிற்காணும், தாதியாய்த் தலை தன்னில் மிகுதியாகுஞ் சஞ்சலிக்குங் கிருஷ்ணகுஷ்டத் தாண்மை தானே. (௰)

### அவுதும்பாகுஷ்டம்.

ஆண்மையா யத்திக்காய்ப் போலரும்பி வடுக்கடுக்காய் முளைத்து மே பெருத்துமெத்தக், காண்மையாய்க் காய்ந்துமே உடம்பெங்குந்தான் கறுகியே உடம்புதோல் திரைந்துதொங்குந், தோண்மையாய்த் தேகமெங்குந் திமிருண்டாகுஞ் சொறியுமே சரீரத்திற் செந்நீர்பாயும், வாண்மையாய் மயக்கந்தான் மிகவுண்டாகும் வகுத்ததோ ரவுதும்பா குஷ்டந்தானே. (கக)

### மண்டலகுஷ்டம்.

வகுத்ததோர் பச்சைவன்ன மிரத்தவன்ன மாயிருச்கு முடம்பெல்லாஞ் சிரசெல்லாந்தான், விகுத்ததோர் தலையிலே வெளுப்புமாகும் மேனியெல்லா மிகத்தடித்துக் கறுப்புண்டாகுந், திகுத்ததோர் தினவாகுஞ் சொறியுமாகுஞ் சிகப்பான சலம்வீழுஞ் சடமெங்குந்தான், வகுத்ததோர் மண்டலகுஷ் டத்தின்செய்தி மார்க்கமெல்லாம் பார்த்துணர்ந்து மருவுவீரே. (கஉ)

### அபரிசகுஷ்டம்.

மருவவே தேகமெல்லா மிகவேநொந்து மாசற்ற ரத்தமெல்லா மிகக்கறுக்குஞ், செருவவே சிந்தையெல்லா நோவுண்டாகுந் தேகமெங்குந் துடிபடா நோவுண்டாகும், அருவவே வாயுமிஞ்சி யதிகநோவாம் அதிரல்வே தனையாகு மிகநீர்தொட்டால், பருவவே வீங்கியே வெடிப்புண்டாகும் பரந்தவப ரிசகுஷ்டப் பண்புமாமே. (கஙு)

### விசர்ச்சிகாகுஷ்டம்.

பரிசமாய் வாதபித்தத் துற்பவித்துப் பரிந்துதொட்டா லெண்ணெய்போல் வெளுப்புமாகும், விரிசமாய்த் தினவெரிப்பு வேதனையுமாகும் மிகச்சிவப்புத் தடிப்புத்தோ லுறப்புமாகும், மரிசமாய் காலெரிப்புஞ் சலிப்புமாகு மகத்தான வெட்கிப்பு வயிறுயர்ப்பு, துரிசமாய்க் கோபிப்புச் சாசரப்பு துரிசானசுறுசுறுப்பு விசர்ச்சிகாக் குஷ்டமாமே.()

### விபாதிகாகுஷ்டம்.

சுறுப்பாகச் சிலேட்டுமபித் தந்தன்னிற்றான் துனித்துடம்பிலே வெடித்தங் காற்றவொண்ணு, அறுப்பாக அண்டவொண்ணுத் தணலதாகி அழுன்றுகைகால் கண்காது கண்டந்தானும், வெறுப்பாக வெடித்துமே வீங்கிப்புண்ணும் மேனியெல்லா நற்பாம்பு மின்னலாகும், கறுப்பாகச் சந்தெல்லாம் பரவிநிற்குங் காரணமாம் விபாதிகா குஷ்டமாமே.()

### கிடிபகுஷ்டம்.

காரணமாய் சீரமெங்கும் பச்சையாகுங் கனத்து யானைத்தோலி ன் தடிப்புமாகும், மாரணமாய் மகாதினவு சொறியுமாகு மகத்தான மூத்திரந்தா னடிக்கடிக்கு, நாரணமாய் சின்னீர தாகுமேனி நலக்கமாய் நாற்றந்தான் மிகவுண்டாகுஞ், சேரணமாய்ச் சிவப்பட்சி வாதமாகுஞ் ச டந்தானு மூதுமே கிடிபகுஷ்டம். (கசு)

### சர்மதலகுஷ்டம்.

கிடிபமா யுடம்புவலி யதிகமாகுங் கீற்றுகவெடித்துவே தனையுமா கும், தடிபமாய்த் தடிப்பாகிச் செம்மையாகுந் தனைத்தொட்டால் நோ க்காடாய்த் தினவெழுப்பும், வடிபமாய் மயக்கோடு அசதிகாணும் மா ருத நோக்காடு மிகவேயுண்டாம், திடிபமா யுதாரத்தில் வலியுமாகுஞ் செப்புகின்ற சர்மதல குஷ்டமாமே. (கஎ)

### தத்துருகுஷ்டம்.

சர்மந்தான் சிவப்பாக வட்டணித்துச் சலவைபோல் வெளுக்கு மே தினவுண்டாகும், வர்மந்தான் ரோகமது மிகவுண்டாகும் மயிரெல் லாஞ் சுருண்டுமேஉண்டையாகும், கர்மந்தான் பித்தசிலேட் டுமமிகுக் குங் காயந்தான் கதித்துமே திமிருண்டாகுந், தர்மந்தான் சடமெல்லா மூதலாகுந் தாக்கான தத்துருக் குஷ்டந்தானே. (கஅ)

### சித்மாகுஷ்டம்.

தாக்கான வாதபித்தத் துற்பவித்துத் தளிரான சுரைப்பூவின் வ ண்ணமாகி, வாக்கான வடிவமெல்லாந் திமிருண்டாகி வட்டணித்துப் பசுமஞ்சள் வன்னமாகுந், தேக்கான திமிரோடு செந்நீருண்டாய்த்தேக மெங்கு மசைக்கொணுச் செழுமையாகும், நீக்கான நினைவோடு மறதி யாகும் நிலவரமாஞ் சித்மாவென்னுங் குஷ்டந்தானே, (ககூ)

### சதாருகுஷ்டம்.

சித்தான தண்டிப்பாய் ரத்தவன்னம் செழும்பைச்சை வெள்ளை யாய்ச் சிவப்புமாகும், எத்தான வெரிப்போடு தினவுமாரு மெளிதான சிலேட்டுமவா தத்துற்பத்தி, பத்தான கரடுகட்டிப் புண்ணுமாகும் பா ம்புதோல் போற்றிரைந்து பருத்துக்காணும், வித்தான மூக்கோடு கா துகன்னம் மிகத்துடிப்பாஞ் சாதாரு குஷ்டந்தானே. (உ0)

### சுவேதகுஷ்டம்.

தடிப்பாகத் தவளநிறம் போல்வெளுத்துச் சர்வாங்கமும் வெ ளுத்தாற் றுன்றிரும்பும், மடிப்பாக மயிர்வெளுத்தா லசாத்தியமாகும் வரிவுதடு வுள்ளங்கைக் குதங்குப்பந்தான், நெடிப்பாக நெருப்புப்பட் டதுபோற் புண்ணுப் நிறமிருந்தா லசாத்தியமென்றே யுரைக்கலாகும், வெடிப்பாக மேனியெல்லாம் வெளுத்துவிங்கில் வெண்சுவேத குஷ் டமென்றே விளம்பலாமே. (உக)

துஷ்டம்வரலாறு.

விளம்பவே மிகுந்தஊஷ் ணந்தன்னாலு மிகுந்த சீதளத்தாலு மழற்சியாலும், வளம்பவே மந்தத்தால் வாந்தியாலும் மகத்தான பெண்ணோடு மருவலாலும், இளம்பவே கிலேசங்கள் மிகுதலாலும் கெடியான வுறக்கங்க ளடைதலாலுந், தளம்பவே மயிருகிர்கள் தவிடு மண்கள் சாதத்திற் பருகலால் மிகுக்குங்குஷ்டம். (உஉ)

குஷ்டந்தான் பதினெட்டு வரவேதென்னிற் குருநிந்தை சிவநிந்தை மறையோர்நிந்தை, திஷ்டந்தான் தேவதைதூ ஷணைக்குரோதம் செப்பலாற் றிருடலாற் பரதாரத்தை, அஷ்டந்தா னாசையா லடைக்கலத்தை யபகரித்த லகதிபர தேசிதன்னை, வஷ்டந்தான் வைதலாற் கற்பழிப்பால் வந்திடுமே பதினெட்டுக் குஷ்டந்தானே. (உங)

சாத்தியம்.

குஷ்டந்தான் பதினெட்டில் சாத்தியந்தான் கூறக்கேள் விஸ்போடம் பாமாக்குஷ்டம், கிஷ்டந்தான் கஜசருமகுஷ்டமோடு கிருஷ்ணகுஷ்ட மவுதும்பர குஷ்டந்தானும், திட்டமாந் தத்துருக் குஷ்டமோடு செயசித்மா குஷ்டங்கி டிபகுஷ்டந், தட்டந்தான் மிகுந்தசா தாருகுஷ்டம் சமகிருஷ்ண குஷ்டம்சாத் தியமாமென்னே. (உச)

அசாத்தியம்.

ஆமென்ற பத்துந்தான் சாத்தியமாகு மசாத்தியமது தானெட்டு அறிந்துபாரு, போமென்ற பூர்வத்தின் கன்மத்தாலும் புவிதனக்கும் மிகுகன்மஞ் செய்தபாவம், பாமென்ற பெரியோர்கள் சாபத்தாலும் பாதகங்கள் மனதறியப் பண்ணும்பேர்க்கும், கோமென்ற குஷ்டமாம் ரோகம்வந்து கூடுமென்று யூகிமுனி கூறினேனே. (உரு)

பதின்மூன்றவது, குஷ்டரோகநிதானம் முற்றிற்று. ஆகவிருத்தம்-ருகஅ.

—(*)—

## பதிநான்காவது

# பாண்டுரோக நிதானம்.

கூறவே பாண்டுவிடப் பெயரைக்கேளாய் குறிப்பாக வைந்துவித மாகும்பாரு, வாறவே வாதமாம் பாண்டுவோடு மார்க்கமாம் பித்தத்தின் பாண்டுவாகும், தேறவே சிலேட்டுமமாம் பாண்டுதானும் திரிதோஷப் பாண்டோடு விஷப்பாண்டாகும், ஆறவே பாண்டுவிடவாண்மையெல்லாம் ஆராய்ந்து சொல்லவே யறிந்துகொள்ளே. (க)

உற்பத்தி.

அறிந்துமே உற்பத்தி சொல்லக்கேளாய் அதிசார மலமிளகியெங்நோந்தான், பிறிந்துமே புளியுப்பு பெருத்தலாலும் பெத்தமா மக்கினியி லிருத்தலாலும், மிறிந்துதாம் பூலமிக அருந்தலாலும் மீறியே மதுக்களைத்தான் புசித்தலாலும், பறிந்துமே பகல்நித்திரை செய்தலாலும் பாண்டுவந்து பாரிலுள்ளோர் படும்பாடாமே. (உ)

பாடான பஞ்சுதனைத் திருடினேர்க்கும் பாங்கான சிவதுகிலைப் பற்றினேர்க்கும், மாடான பசுவதைப்பட் டினியதாக வைக்கின்றோ ர் மறைவழியே நடந்திடாதார், காடான வாரணியந் தனிற்பறித்துக் கடுவதைகள் செய்கின்றோர் கண்காணுத, கோடான பழிசொல்லிக் கு டிகெடுக்குங் கொடும்பாவி பாண்டுவினுற் குதிகொள்வாரே. (௩)

வாதபாண்டுரோகம்.

கொள்ளவே வாதபாண்டு ரோகங்கேளாய் குடல்புரட்டி யடிவ யிறுதான்வலிக்குந், தள்ளவே தாகமொடு பசியுமில்லை தழலான சர சரப் பாகத்தானும், நள்ளவே நரம்பெல்லாங் கறுப்புமாகும் நடுக்க கலொடு கண்சிவப்பு மலபந்தந்தான், விள்ளவே தலைவலிக்கு மேனி வீங்கும் வெளுப்பாகும் வாதத்தின் பாண்டுவாமே. (௪)

பித்தபாண்டுரோகம்.

வாமென்ற மேனியெல்லா மஞ்சளித்து மகாவெளுப்பு உண்டா கி மந்தக்கண்ணுந், தாமென்ற தாகமொடு மூர்ச்சையாகுந் தனிவாயி ல் மிளகுபோற் றுனுறைக்கும், நேமென்ற நெஞ்சுமுள் தானுமுண் டாய் நெருக்கியே மூச்சுமுட் டதுவேயாகுங், கோமென்ற கிறுகிறுத்து வாய்கைப்பாகுங் கிளர்பித்த பாண்டுவெனக் கூறலாமே. (௫)

சிலேட்டுமபாண்டுரோகம்.

கூறியதோர் நரம்புதோல் மிகவெளுப்பு கிளர்நாவு உப்புறைக்கு மயிர்கூச்சாகும், வாறியதோர் வாந்தியாங் குரலுங்கம்மும் மகத்தான தும்மலுடன் கோழையாகும், ஈறியதோ ரிருமலொடு மயக்கமுண்டா மிடுப்பசதி யிந்திரிய நஷ்டமாகுஞ், சிறியதோர் சோபமொடு தாப மாகுஞ் சிலேட்டுமத்தின் பாண்டென்னச் செப்பலாமே. (௬)

திரிதோஷபாண்டுரோகம்.

செப்பவே அருசியொடு சோபதாகஞ் செயலான சுவாசமொடு இளைப்புமாகும், வெப்பவே மேகனத்தில்சிறு நீர்தான்வீழும் மிடுக் கான பெலஈன மார்பிடித்தல், துப்பவே சூட்டோடு தியக்கமாகுந் து ம்மலா யுடம்பெங்கு மூதிக்காணுந், திப்பவே தேகமெங்கு மசதியா யாகுந் திரிதோஷப் பாண்டென்னச் செப்புநூலே. (௭)

விஷபாண்டு.

நூலாக நலத்தோடே யுடல்வெளுக்கும் நோய்நரம்பு சூடாகுந் தாகமாகும், ஆலாக அருசியொடு சர்த்திவிக்கல் அதட்டியே இரும லுட னதிசுவாசம், வாலாக வயிற்றிரைச்ச லதிசாரதோஷம் மாசுரமு முண்டாதல் மார்கனத்தல், வேலாக மேனியெங்கு மிகவேஊதல் வி ஷபாண்டு அசாத்தியமென்றே விளம்பலாமே. (௮)

விளம்பவே பாண்டுமுற்றி இருக்கும்போது மீறியே பித்தவஸ்து தனைப்புசித்தால், புளம்பவே மங்கையுடன் புணர்ச்சிசெய்தால் பூண்டிடுமே காமாலை யென்னும்ரோகம், தளம்பவே காமாலை பதின்மூன்றுகுஞ்சார்வான பேரோடு குணகுணத்தை, உளம்பவே அசாத்தியங்க ளதனையெல்லாமுரைக்கரிது யுரைக்கின்றே னுற்றுக்கேளே. ()

பதிநான்காவது, பாண்டுரோகநிதானம் முற்றிற்று. ஆகவிருத்தம்-டுஉஎ.

—(*)—

பதினைந்தாவது

# காமாலைரோக நிதானம்.

உரைக்கவே ஊதுகாமாலையோடு உயர்ந்தவறட் காமாலை வாதக்காமாலை,புரைக்கவே பித்தகா மாலையோடு பேரானசிலேட்டும காமாலையாகும், வரைக்கவே வாதசிலேட் டுமகாமாலை வகையான பித்தசிலேட் டுமக்காமாலை, துரைக்கவே தொந்தகா மாலையோடு சூக்ஷமமா மஞ்சட்கா மாலையாமே. (க)

மஞ்சளா மழுகுகா மாலையோடு மருவுகின்ற செங்கமலக் காமாலையாகும், குஞ்சலாங் கும்பகா மாலையோடு கொடியகுன்மக் காமாலை பதின்மூன்றுகுந், தஞ்சமாங் காமாலை முன்சன்மத்தில் தயையில்லாக் கோபத்தாற் சண்டைதன்னால், பஞ்சலாம் பரமசிவன் றன்னைத்தானும் பணியாத மூடருக்குப் பாவுந்தானே. (உ)

காமாலைஉற்பத்தி.

பருகவே உள்ளங்கா லுள்ளங்கைகள் பகர்முகங்கண் ணுடம்புமிக வெளுப்புகாணுங், சருகவே கால்கைக ளோச்சலாகுங் கனமாக நடுக்கியே இளைப்புண்டாக்குஞ், சருகவே மலந்தானும் வறண்டுகட்டுந் தூயமுக மஞ்சளிட நிறமதாகும், வெருகவே வீக்கமாய்க் களைப்புண்டாகு மிகக்காதுமந்த மோடுதலை கனப்புண்டாமே. (ங)

ஊதுகாமாலை.

கனப்பாகக் கண்ணுமுகங் கசிவுண்டாகுங் கனவீக்க முடலெங்கு முளைவுண்டாகும், அனப்பாக வழற்றலாய்த் தேகமுணர்வில்லை யதிகமாய்ச் சீதவெப்பு தலைதிருப்புந், தினப்பாகத் தியக்கமொடு சிறுநீர்மஞ்சள் தேகமெங்கும் வாடியே திமிருண்டாகும், உனப்பாக உள்ளூதலாயிருக்கும் ஊதுகா மாலையென உரைக்கலாமே. (ச)

வறட்காமாலை.

உரைக்கவே கால்கைகள் மிகவும்வற்றும் ஊணவே கால்தவறுமசதியாகும், நிரைக்கவே நீலம்போல் மலமிறங்கும் நீர்தானுஞ் சிவந்துமே நெருப்பாய்க்காணுந், துரைக்கவே சூலைநோ வென்னக்குத்துஞ் சோறுருசி யில்லாது மாலைக்கண்ணும், வரைக்கவே வடிவெல்லாங் கறுகிக்காணும் மயங்குவறட் காமாலை வருத்தவாறே. (ரு)

### வாதகாமாலை.

வாரான வயிறுதனைப் பொருமிவிக்கும் மலந்தானுங் கழியாது உடம்புவீங்கும், பூரான புறங்காலு முகமதைக்கும் புகழ்கரும மொன்றையுந்தான் செய்யவொட்டா, ஊரான வுடல்கடுக்கு மிகவிளைக்கும் உறுக்காது மிகவீங்குங் கண்பருக்கும், பாரான பசியில்லா துறக்கமாகும் பண்பான வாதகா மாலையாமே. (சு)

### பித்தகாமாலை.

மாலையா யுடம்புலர்த்து முறக்கமில்லை மகத்தான படுக்கைவிட்டு எதுஞ்செய்யா, சேலையாய்ச் சோறுமே செரியாமற்றான் சடமெங்கும் வாயுவாய்த் தியக்கமாகும், பாலையா மூச்சதுவு மிகவுண்டாகும் பருக்கையாய்க்கழியுமே வயிறுதானும், ஆலையாய் வயிற்றிரைச்சலதிகமாகு மசதியாம் பித்தகா மாலையாமே. (எ)

### சிலேட்டுமகாமாலை.

தாமென்ற சடத்தையே யறிவழிக்குந் தாக்கான இருமலே மிகவுண்டாகும், வேமென்ற தலைமுகமும் வியர்வையாகு மிடுக்கான நடைகுறையு மூச்சுமாகும், பாமென்ற பாக்கருந்தில் மிகச்செருக்கும் பண்பான விழிசிவக்கு முடல்நடுக்கும், நேமென்ற நெஞ்சுதான் மிகக்கனக்கும் நெடிதுயிர்க்குஞ் சிலேட்டும காமாலையாமே. (அ)

### வாதசிலேட்டுமகாமாலை.

துயிர்க்கு மன்னந் தனைத்தானுஞ் சீர்ணமாக்கா செரிக்கசுக மாகவொட்டாச் செருமலாகும், முபிர்க்குமுக மூக்குக்கண் மிகவேவேர்க்கும் முடிகியே வயிறிரைந்து பொருமிக்கொள்ளுங், கயர்க்குநாக் குக்கண்ணு மிகவெளுக்குங் கனமான நடையினில்மூச் செறியவைக்கும், வியர்க்குமே நகமெல்லாம் வீக்கமாகு மிடுக்கான இருமலுண்டாம் வாதசிலேட்டுமம். (கூ)

### பித்தசிலேட்டுமகாமாலை.

உண்டாகி வாந்திபண்ணுஞ் செருமலாகு மோயாமற் றலைவலிக்கு மனமறுக்கும், வண்டாகி வயிர்கழியுந் தாகமுண்டா மனமெல்லாம் புண்ணாகி மயக்கமாகுந், துண்டாகிச் சாதமுப்பிச் சீர்ணியாது தூய்முகமுங் காலோடு கைவெளுக்கும், வெண்டாகி மேனியுமே யூதிக்காணு மிகப்பித்த சிலேட்டுமகா மாலையாமே. (ய)

### தொந்தகாமாலை.

ஆமென்ற வங்கமழன் றேயெரிக்கு மசதிவரு மடிக்கடிக்கு இருமலுண்டாந், தாமென்ற தண்ணீர்தான் மிகத்தவிக்குஞ் சடமெங்குங் கடுப்பெடுக்கும் புளித்தேப்பமாகும், போமென்ற நாவதுதான் மிகப்புளிக்கும் புரையான பசியெடுக்குங் குளிருண்டாகும், வேமென்ற அடிவயிறு வீங்கும்வேர்க்கும் மிக்கதொந்த காமாலை விவரந்தானே. (கக)

மஞ்சட்காமாலை.

விபரமாய் மூத்திரந்தான் மஞ்சளாகும் வீங்குமே சரீரமெங்கு மெலிவுண்டாகும், முபரமாய் முகங்கால்கண் கையுண்ணாக்கு மொழி மஞ்ச ணிறமாகும் முகமினுக்கும், அபரமா யன்னத்தை யிறங்கொட் டாது அழுகையாய் மனஞ்சலிக்கு மூச்சுண்டாகுந், தபரமாய்த் தாது நஷ்ட மலமும்பந்தஞ் சார்ந்தமஞ்சட் காமாலைத் தன்பேராமே. (கஉ)

அழகுகாமாலை.

பேரான கால்கையு மசதியாகும் பேர்புருவங் கண்கள்கழற் கொ டிக்காய்போலப், பாரான பச்சென்று தானிருக்கும் பருகுநீர் மஞ்சணி ற மாய்விடக்குந், தீரான விங்கத்து ளெரிப்புமாகுஞ் செரிக்கவொட்டா தன்னத்தைச் சிதறியுப்பும், ஆரான வழல்போல வெதும்புமேனி அழ குகா மாலையிட வாண்மைதானே. (கங)

செங்கமலக்காமாலை.

ஆண்மையில்லாத் தமரகத்தின் குணமுமாகு மங்கமெலா மழற்சி யுமாய்ச் சோம்புமாகுந், திண்மை சிறுநீர்சிவந்து மஞ்சளித்துச் சிறுகி யே சிறுநீர்தானறுக்கிவீழும், நாண்மையாய் நகங்களுடல் மிகவெளுத் து நற்காயம் வற்றியே சுரமுண்டாகும், ஊண்மையா யுண்ணாக்கு உமி நீர்நாக்கு முறுமஞ்சள் செங்கமலக்கா மாலையாமே. (கச)

கும்பகாமாலை.

காமாலை யடிக்கடிக் களையேபோடுங் கனமாகு முடம்புசிறு நீரேம ஞ்சள், வேமாலை நேரத்தில் வியர்வையாகும் மேனேக்கும் வாதந்தான் கண்சிவக்கும், பூமாலை போலவே துவண்டுபோகும் புகழான மயிலுற க்கம் போலே யாகுங், கோமாலை மலந்தானுங் குதுக்கென்ருகுங் கொ டியகும்ப காமாலைக் குணமிதாமே. (கரு)

குன்மக்காமாலை.

குணமான வாய்வெளுப்பு கண்தான் பச்சைக் கொடுமூத்திர மஞ் சளித்துக் குழம்புமாகும், அணமான வன்னந்தான் செரிக்கும்போது அடிவயிற்றில் வலியுண்டாம் வாந்தியாகும், மணமான தொன்றுமே ய றிந்திடாது மயிலுறக்க மிசைப்பிருமல் மூச்சுமாகும், பிணமான தது போலக் கிடைகிடக்கும் புாளுமேகுன்மகா மாலைதானே. (கசு)

சாத்தியம்.

தானன காமாலைப் பதின்மூன்ருகுஞ் சாத்தியந்தா னேழாகும் பேரேதென்னில், பானன பித்தக்கா மாலையோடு பரவுமஞ்சட் காமா லை சிலேட்டுமமாகும், ஊனன ஊதுகா மாலையோடு உணர்த்தும் வறட் காமாலை வாதசிலேட்டுமம், கோனனபித்தசிலேட்டுமக்காமாலைகுணமா கவேமுந்தான் கூர்ந்துகேளே. (கஎ)

அசாத்தியம்.

கேளென்ற கும்பகா மாலையோடு கெடிகொள்குன்மக் காமாலை தொந்தகாமாலை, வாளென்ற வாதகா மாலையோடு மருவுகின்ற செங்க மலக்கா மாலையாகும், ஆளென்ற வழலுகா மாலையோடு ஆறுந்தா னசாத் தியமா மறிந்துகொள்ளு, கோளென்று சொல்லிமகா கொடுமைசெய்த குணங்கெட்ட மானிடரைக் கூடுந்தானே. (கஅ)

பதினைந்தாவது, காமாலைரோககிதானம் முற்றிற்று. ஆகவிருத்தம்-டுசரு.

—(*)—

## பதினாறாவது
# சோபைரோக நிதானம்.

தானான சோபையது நாலுவிதமாகுஞ் சாற்றிடவே வாதத்தின் சோபையோடு, தேனான பித்தத்தின் சோபையாகுஞ் சிலேட்டுமத்தி ன் சோபைதிரி தோஷசோபை, நானான நாலுவிதச் சோபைதன்னில் நாட்டமெல்லாஞ் சொல்லிடநீ நயந்துகேளாய், பானான உமைதனக்குச் சிவன்றான்சொன்ன பாங்கதனைப் பகருவன்யான் பரிந்துகேளே. (க)

பாங்கான சன்னிபா தச்சுரங்கள் பகர்சித்தப் பிரமைசன்னி பரவ லாலும், தேங்கான பன்னகந்தான் றீண்டலாலும் சில்விஷங்கள் தே கத்தி லூறலாலும், ஆங்கான சிறையிருத்தலடி படுதலாலும் அநேகவ ழி நடக்கைமலை யிருக்கையாலுந், தாங்கான சலக்கரைகள் தனிவிருத் தல் சாம்பல்மண்மா தவிடுதன்னுற் சோபையாமே. (உ)

வாதசோபை.

சோபைதான் வருமுன்னே உடல்தான்வற்றும் சகநரம்பு தான் வெளுக்கு மசீர்ணமாகுந், தூபைதான் பெலக்ஷயமாய் நடுக்கலாகுஞ் சு ரமோடு மிகவெளுப்பு மிளைப்புமாகும், மாபைதான் மயிர்முனைகள் சிவ ந்துபோகு மகத்தான நித்திரையு மந்தமாகுஞ், சோபைதான் அங்குலி லே சடமெங்குந்தான் கொடுவலியாம் வாதத்தின் சோபையாமே. ()

பித்தசோபை.

வலியாக மயிர்மஞ்ச ளித்திருக்கு மகத்தான சர்த்தியுமே மிகவி ரும்பும், தலியாகத் தாபமொடு விளைப்புகாணுஞ் சரீரந்தான் மிகச்சிவ ப்பாந் தலைவலிக்கும், புலியாக விருந்ததுபோய் பெலஹீனத்தால் புகல ரிய மயக்கமொடு வியர்வையாகும், நலியாகக் கண்புருவ மூக்குத்தண்டு நலங்குமே பித்தத்தின் சோபைதானே. (ச)

சிலேட்டுமசோபை.

நலங்குமே வடிவெல்லாந் தினவுண்டாகு நல்லமயிர்க் கால்வெளு க்குமுடல்வெளுக்குந், திலங்குமே தேகமெங்குஞ் சுறசுறப்புத் திடுக்கி டுமே மிகக்குளிரும் நித்திரையில்லை, விலங்குமே விழியனலாங் குரல்நெ றிவதாகும் விஷஉசியாய்ப் பேதிதலைகிறுகிறுப்பு, சிலங்குமே ரத்தங்க ள் சுரந்துவீங்குஞ் சிலேட்டுமத்தின் சோபையென்றே செப்பலாமே.()

திரிதோஷசோபை

செப்பவே மெல்லியர்மேல் மிகுந்தகோபஞ் சடம்விக்க முபாதியு மாய்ச் சுரமுண்டாகும், அப்பவே அதிசாரம் வயிற்கடுப்பு ஆசனத்தில் மிகக்கடுப்பு அசனஞ்செல்லா, நப்பவே கால்கையுந் துவண்டுகாணும் நடக்கவே பெருமூச்சாய்க் கிறுகிறுக்குந், திப்பவே உமிநீர்தான் மிக வேஊறும் திரிதோஷ சோபைசாத் தியமாச்சொல்லே. (கூ)

சொல்லவே பாண்டுகா மாலேசோபை தொகுப்பாக மூன்றினிடச் சொரூபஞ்சொன்னேன், மல்லவே வடமொழியின் வகுப்பைப்பார்த்து மகத்தான நாதாக்கள் வசனங்கேட்டு, வல்லவே மானிடர்கள் பிழைக்கவென்று மனோன்மணிக்குச் சிவன்சொன்ன வசனந்தன்னை, எல்லவே யூகியென்ற முனியாம்யானே எழுதினே னாயுருவே தத்தைத் தானே. (எ)

தானான ஆயுருவே தத்தையெல்லாஞ் சாங்கமாய்ச் சோதித்துச் சாரந்தன்னை, தேனான தமிழினல் விரித்துச்சொன்னேன் சிறுபிள்ளை பார்த்தாலுந் தெரியவென்று, ஏனான ஏழுலக்ஷங் கிரந்தப்போக்கை எடுத்துமே சோதித்து எழுதினேன்யான், ஊனான யூகியென்ற முனியா யாம்யானும் உலகத்தோர்க் காகவென்று உரைசெய்தேனே. (அ)

பதினறாவது, சோபைரோகநிதானம் முற்றிற்று. ஆகவிருத்தம்-ருருடு.

—(*)—

பதினேழாவது

# மகோதரரோக நிதானம்.

செய்ததோர் மகோதரந்தான் முப்பத்திரண்டு சிறப்பான பெயரையெல்லாஞ் சொல்லக்கேளாய், வைத்ததோர் வாதமகோ தரத்தினோடு வகையான பித்தமகோ தாஞ்சிலேட்டுமம், கொய்ததோர் வாதசிலேட்டுமத்தினோடு கொடும்பித்தசிலேட்டுமமகோ தரமுமாகும், தொய்ததோர் தொந்தமகோ தரத்தினோடு துரிதமாங் கல்மகோ தரமுங் காணே. (க)

காணவே வில்மகோ தரத்தினோடு கடியதோர் வழுவைமகோ தரமுந்தானும், நாணவே நழுவைமகோ தாநீராம்பல் நலத்தஊ ராம்பலொடு வெப்புப்பாவை, கோணவே குலேமுட்டி மகோதரந்தான் கொடியசிழ்க் கவிசைமேற் கவிசையாகும், பாணவே பக்கமாங் கவிசையோடு பழுக்கவிசை பெருவயிறு மகோதாந்தானே. (உ)

வயமான சூல்மகோ தரமும்வல்லே மகோதரமும் விஷமகோதரத்தினோடு, கொயமான ஆயுருவே தத்திற்சொல்லுங் கொடிதான சோபைமகோ தரங்காமாலே, புயமான கூர்மமுடன் பீலிகையுமாகும் புரமசுர மகோதரமும் குன்மமகோதரமாம், வெபமான பாண்டுவோ டுதரமகோ தரந்தான் வீசுகின்ற மகோதரமுஞ் சலமுமாமே. (ங)

சலமானமகோ தரமாங்கிச மகோதரமதாகும் தாக்கான மகோதரந்தான் முப்பத்திரண்டு, உலமான உற்பத்தி யுரைக்கக்கேளாய் உமியினுல் கல்லினுல் ரோமமுள்ளால், சுலமான சுனேயினுல் தோஷநீரால் தும்பியநீர் தேரைநீர் அலர்ந்தசோற்ருல், மலமான மங்கையர்கள் மருந்தினீட்டால் மகோதரமாய் நோய்வந்து மருவுங்காலே. (ச)

காலான மேகந்தான் வயிற்றிற்கட்டிக் கடிசான சிச்சீதம் வயிற்றிற்றங்கில், தாலானசதையுதிரம் வயிறுதன்னில் தயங்கினுற் பாஷாணந் தரிக்கிற்சூதம், சேலான செம்பினிட வூறல்தங்கில் சீரணத்தில் மேலன்னஞ் செலுத்தலாலும், மாலான மங்கையர்கள் மருந்தினுலும் மகோதரங்கள் வந்துவுற் பத்தியாமே. (ரு)

உற்பத்தி யொருவருட னுண்மைபேசி உயர்சபையிற் பலவிதமாயுரைக்கின்ருேர்க்கும், அற்பத்தி லனியாயஞ் செய்கின்ருேர்க்கும் ஆலயத்தி லனியாயம் பண்ணினேர்க்கும், பற்பத்தி யொருவரிடப் பிரயோசனத்தைப் பறிக்கின்ருேர் கெடுக்கின்ருேர் பந்திதன்னில், துற்பத்தி லோரவஞ் சனேயேசெய்த துரோகிக்கு மகோதரங்கள் தொடர்ச்சியாமே. (சா)

வாதமகோதரம்.

துடர்ச்சியாங் காயமது வெளுப்புமாகும் சூக்ஷமாய்ச் சடம்வற்றித் துற்பலந்தான், அடர்ச்சியா மன்னமது வேண்டதாகு மடிவயிற்றிவிரைச்சலுமா யுப்பசமுமாகும், புடர்ச்சியாய்ப் பிணமுகமாய்ச் சாயலாகும் புளிப்பான வசிரணத்திற் பசியுமுண்டாம், தடர்ச்சியா யடிவயிறு தன்னில்வீங்குஞ் சஞ்சலிக்கும் வாதமகோ தரந்தானென்னே. (எ)

பித்தமகோதரம்.

என்றகண்ணிற் காசவன் னமுமாய்த்தோன்றி ஏற்றசுர மோகமாய்த் தாகமாகும், அன்றவதி சாரமுமாய் வயிறுபோகு மழற்சியொடு வியர்வைமேல் மஞ்சளிப்பு,துன்றதோல் சுறசுறப்புத் தரட்டிபோலாஞ் சுயநரம்பு பலவிதமாய் வன்னமாகும், பன்றசனஞ் செரியாமல் மலமும்போகும் பயித்தியமகோ தரத்தினிடப் பண்புதானே. (அ)

சிலேட்டுமமகோதரம்.

பண்பான வுடல்நடுக்கி யருசியாகும் படுக்கைதனி லுறமில்லாதுப்புறைக்கும், குண்பான குளிர்காய்ச்சல் சுவாசகாசங் கோபமொடு வயிறுஉப் பசமுமாகும், வெண்பான பஞ்சுபோல் மிகவெளுக்கு மிடுக்கான நீர்மலமுங் கடுகடுக்கும், திண்பான விருமலொடு கோழை மிஞ்சுஞ் சிலேட்டுமமா மகோதரத்தின் செயலிதாமே. (கூ)

வாதசிலேட்டுமமகோதரம்.

செயலான சடம்வெளுத்தாற் போற்கடுத்தல் துனிவயிற்று மடிப்புத்தான் மறையவீங்கல், நயலான நரம்புவயிற் றினிற்புடைத்தல் நலமான துற்கந்த வாயுமீறல், அயலான வண்டங்கள் திடுக்கிட்டாற்போல் அடிவயிற்றில் முழக்கமா மலம்விடாது, பியலான பீசந்தான் மிகுதிவீங்கும் பிரிவாத சிலேட்டுமமகோ தாந்தானென்னே. (ய)

### பித்தசிலேட்டுமமகோதரம்.

பிரிவாக நாபிமா ரளவுமட்டும் பிதுங்கலாய் வயிறுமெத்தப் புடைக்கிடைக்கும், வரிவாக வாயுதான் மிகத்தப்பிக்கும் மலங்கட்டும் நீர்குறையும் மார்பில்நோவாம், எரிவாக எலும்பின்மூ ளையிலே தாக்கி வற்றமாம் நயனவொளி மிகக்கிடைக்கும், அரிவாக வங்கங்கள் கால்கை வீங்கும் அதிர்பித்த சிலேட்டுமத்தின் மகோதரமதாமே. (கக)

### தொந்தமகோதரம்.

அதிராக மஞ்சணீ ராக்கையாகும் அதட்டியாய் வாதத்தின் நாடியாகும், பதிராகப் பஞ்சுபோற் கண்ணீருகுக்கும் பங்கமா யங்கமெலாம் பருக்கவீங்கும், வதிராக வஞ்சகமாக் காலகைவற்றும் வற்றியே யுடம்பெல்லாம் வயிறுவிம்மும், சுதிராகத் தலைசுற்றல் தியக்கமாகும் தொந்தமா மகோதரத்தின் சூக்ஷம்பாரே. (கஉ)

### கல்மகோதரம்.

சூட்சமா யிருமலொடு விளைப்புமாகுஞ் சுரூபந்தான் மஞ்சணிறமாகவீங்கும், மோட்சமாய் மேல்வயிறு கருங்கல்போல முரண்டியே மிகவீங்கு மசனஞ்செல்லா, காட்சமாய் முகங்கருகிக் கண்டிப்பாகுங் கசடற்று நரம்பெல்லாம் பசுமையாகுந், தீட்சமாய்ச் சலமலங்கள் சுருக்கிக்கொள்ளுஞ் சடம்வெளுக்குங் கல்மகோ தரமாமென்னே. (கங)

### வில்மகோதரம்.

ஆமென்ற வருணனிட வில்லுபோல அதட்டியே வளைந்தாற்போல் பிருவுமுண்டாய், வேமென்ற மேல்வயிறு தனில்வலித்து மிடுக்காக உப்பசமாய் விரையும்வீங்கி, வாமென்ற மலசலமுஞ் சுருக்கிக்கொண்டு வாதையாய்க் கிடைகொடா மயக்கமாகித், தாமென்ற தண்ணீர்தான் மிகவும் வேண்டுஞ் சஞ்சலிக்கும் வில்மகோ தரந்தானென்னே. (கச)

### வழலைமகோதரம்.

தரமான தண்ணீரிற் சொறியைப்போலத் தளதளத்து வயிறுதனில் வளர்ந்தேயேறும், மரமான ததுபோலத் திமிருண்டாகி மாமிசந்தான் சோறுபோல் வயிற்றிற்றுன்னி, பரமான தசைநினைந்து பசியில்லாமல் படுக்கைக்கு இடமின்றிப் பரதவிக்கும், அரமான வன்னத்தைக் கிட்டொட்டாது ஆகாத வழுலைமகோ தரந்தானுமே. (கரு)

### நழலைமகோதரம்.

ஆமேதா னடிவயிற்றிற் கட்டியாகு மழுத்தியே பார்த்தக்கால் நழுவிப்போகும், வேமேதான் மேல்வயிற்றில் வன்னிபோல மிடுக்கான பெலங்குறைந்து மேல்மூச்சாகும், சாமேதான் பிணம்போல நடக்கொட்டாது தரிக்கொண்ணுத் தாபமுமாந் தளர்ச்சியாகும், நாமேதா னுவரண்டு நெஞ்சுபுண்ணும் நழுலைமகோ தரமென்றே நாட்டலாமே. (கசு)

### நீராம்பல்மகோதரம்.

நாட்டமாய் நாவறண்டு இருமலுண்டாய் நளிசாகி யடிவயிறு கதித்துவிம்மிக், காட்டமாய்ச் சடைக்கண்தான் மிகவெளுத்துக் கதும்பலொடு புறங்கால்க ளதைத்துவீங்கி, வாட்டமாய் மூச்சோடு மயக்கமாகி மலந்தானு மிகத்தளர்ந்து வடிவம்வேறாய், நீட்டமாய்க் கால்கையு முடக்கொணுது நீராம்பல் மகோதரத்தி னேர்மைதானே. (௧௭)

### ஊராம்பல்மகோதரம்.

நேர்மையாய் மேல்வயிறு பொருமிக்கொண்டு நெடிதுதகந் தேடியே மேனிகண்ணும், வார்மையாய் மனத்துயர மிகுந்திருக்கும் மயக்கமொடு தியக்கமாய் மாழ்கித்துஞ்சும், கார்மையாய் முகம்வியர்த்து வெளுத்துநொந்து கனகனத்து உடம்பெல்லாம் கடிதுவற்றி, சீர்மையாய்ச் சிரசதனிற் பாரங்காணுஞ் சினத்தஊ ராம்பல்மகோ தரமுமாமே. (௧அ)

### வெப்புப்பாவைமகோதரம்.

சினத்தவுப்பங் காற்றுமே மிகவுமுண்டாய்த் தேக்கியே உடலதிர்ந்து மிகவும்பற்றி, கனத்தகைப்புப் புளிப்புமிகத் தெகிட்டலாகுங் கல்போலச் சரீரமெங்குங் கனத்துக்காணும், வினத்தவயிர் தனிற்புரண்டு வெதும்பல்செய்யும் விலாப்பக்கந் தனில்வந்து கட்டிச்சேரும், நனத்தவுப்பு நாவிலே மிகுதியாகும் நவியுவெப்புப் பாவைமகோ தரமாய்நாட்டே. (௧௯)

### சூலைமுட்டிமகோதரம்.

நாட்டவே குழவிபோல் சூலையிற்சேர்ந்து நலமாகக் கிழ்மூடிப் பக்கம்வந்து, ஆட்டவே அன்னத்தை யருந்தொட்டாமல் அபானத்தை இறுக்கியே மலம்விடாது, தேட்டவே தேகமெங்குங் கருகிவற்றி சிரசோடு முகங்கால்கை வீக்கமுண்டாம், கூட்டவே மலமூச்சுக் குாலுங்கம்மும் சூலைமுட்டி மகோதரத்தைக் கூறிடாயே. (௨0)

### கீழ்க்கவிசைமகோதரம்.

கூறிடவே அடிவயிற்றில் வில்லைபோலக் குறிப்பாகக் கட்டிகட்டிவயிற்றையுப்பும், ஈறிடவே மேல்வயிற்றில் வில்லுபோல இசிவாகிச் சந்தெங்குங் குடைச்சலாகும், பீறிடவே மனசுநொந்து பெருமூச்சாகும் பிதற்றலாய் மனதில்வந்த படியேபேசும், மாறிடவே மலசலமுஞ் சுருக்கிக்கொள்ளும் மருவுகீழ்க் கவிசைமகோ தரமுமாமே. (௨௧)

### மேற்கவிசைமகோதரம்.

விசையான மேல்வயிற்றில் வில்லைபோல விளையுமே ஊனெல்லாந் திரட்டிக்கொண்டு, கசையான நரம்புதோல் சுருங்கிக்காணும் கூஷணத்திலே படபடப்பு மூச்சுமாகும், குசையான மாரடைப்புக் குற்றலுண்டாங் குமட்டியே வாய்நீருங் குதிகொண்டோடும், அசையான அன்னந்தான் வேண்டாதாகும் அளுச்குமே மேற்கவிசை மகோதரந்தானே. (௨௨)

### பக்கக்கவிசைமகோதரம்.

கவிசைபோல் பக்கத்திற் பற்றிக்கொண்டு கனமாக வயிறுகல் லமுந்தலாகும், அவிசையாய் அடிவயிற்றிற் குமுறல்காணும் அங்கதா கத்தோடு எரிவுண்டாகும், புவிசைபோற் பொருமிவயி றுப்பிக்கொள்ளும் புளித்தேங்காய் நெஞ்சிலே யெரிச்சலுண்டாம், பவிசையாய் மலசலமுஞ் சுருக்கமாகும் பக்கமகோ தரத்தினிடப் பரிசுதானே. (உரு)

### பழக்கவிசைமகோதரம்.

பரிசாகப் பழுவெலும்பின் முளையைப்போலப் பற்றியே வயிறெல்லாங் கனத்து விம்மும், உரிசாக உப்பசமு மேல்மூச்சாகும் உழலையொடு தாபமுமா யுறக்கமாகும், அரிசாக அன்னந்தா னிறங்கொட்டாது வடிக்கடிக்கு வாயுத்தா னதட்டியாகும், செரிசாக வீங்கியே வற்றியூதும் திணறுமே பழுக்கவிசை மகோதரந்தானே. (உசு)

### பெருவயிற்றுமகோதரம்.

திணறுமே காயந்தான் மிகவும்வற்றிச் சீரணமாய் மந்தமுமா முதரந்தானும், உணறுமே கல்லழுத்த மாகவீங்கி யுறுதியாய் நரம்புமே புடைத்துக்காணும், மணறுமே மலத்தையே மிகமறிக்கும் வாடாமலூதியே மயக்குவிக்கும், கிணறுமே தூறெடுக்க ஊறுமாப்போல் கெட்டிக்கும் பெருவயிற்று மகோதரந்தானே. (உரு)

### சூல்மகோதரம்.

மகோதரம்போற் சூலான மங்கையர்க்கு மாவருத்தமுண்டாகி மயக்கமாகும், அகோதரமா யங்கமெல்லா மழற்சியாகு மன்னந்தான் செல்லாது தண்ணீர்வேண்டும், சகோதரமாங் கால்கையுஞ் சந்துவீங்கும் கழலான காய்ச்சலொடு அருசியாகும், உகோதரமா யுடம்பெல்லா முளைச்சலாகு முற்றசூல் மகோதரத்தி னுண்மைதானே. (உசு)

### வல்லைமகோதரம்.

உண்மையா யுந்தியின்றன் நடுமையத்தி லுள்ளங்கை யகலந்தான் கட்டியாகத், தண்மயாய்த் தமர்கொண்டு அடைத்தாற்போலச் சாங்கமாய்க் கருங்கல்லாய்த் தானிருக்கும், பண்மையா யசனமது முண்டாற் செல்லாப் பருகிடுமே சுடுதண்ணீர் தன்மேலிச்சை, வெண்மையாய்க் கால்கையு மசதியாகும் மிடுக்கான வல்லைமகோ தரமுமாமே. (உஎ)

### விஷமகோதரம்.

மிடுக்காக மேனியொடு பொத்திபீசம் வீங்கியே வெளுப்பாக மெலிவுமாகும், அடுக்காகச் சிறுத்துமே பருத்துக்காணு மாண்மையாய் பீசமது தளர்ந்திருக்குந், துடுக்காக மனிதருடன் வார்த்தைபேசுந் துக்கமாய் மனக்கிலேச மெப்போதுந்தான், நடுக்காக உடம்பெங்குந் திமிருமாகும் நலியும்விஷ மகோதரந்தான் நாடிப்பாரே. (உஅ)

### பாண்டுமகோதரம்.

நாடிப்பார் வாடியே யூதிக்கொள்ளும் நன்னடிச் செம்மையிலு நட க்கொட்டாது, வாடிப்பார் வகுத்தடியும் புறங்கால்வீங்கும் வன்னமுகம் வேறுபட்டு மயிலுறக்கம், தேடிப்பா ரோமமெங்குஞ் செம்மையாகும் செயலான ரத்தமில்லா தெலும்புமாகுங், கூடிப்பார் மூச்சோடு குளுப் பையாகுங் குணக்கேடாம் பாண்டுமகோ தரத்தின்கூறே. (உகூ)

### சோபைமகோதரம்.

கூறுனஅடிவயிறு குழைந்து உப்பிக் கூப்பிட்டு மேல்வயிற்றில்பி குவுமாகும், தேறுன வண்டமொடு கால்கள்கைகள் சிதைந்துமெத்த வீங்கியே செழும்பலாகும், வீறுன மேல்மூச்சு இருமல்தாகம் விக்கி யே சரீரமெல்லாங் குளிர்ச்சியாகும், தூறுன மூத்திரமலஞ் சுருங்கிக் காணும் சோபைமகோ தரமென்று செப்பலாமே. (௩௰)

### காமாலைமகோதரம்.

செப்பவே நடுக்கலொடு குளிர்ச்சியாகும் சிறியதோர் மூக்குமுக ம் மார்புவேர்க்கும், உப்பவே உடம்புலரும் புறங்கால் வீங்கும் உளைந் துமே அடிவயிறு மிகச்சுருங்கும், துப்பவே கோழையொடு சுரமுமு ண்டாம் சுகமில்லா நித்திரைதான் றலைவலிக்குந், தப்பவே மிகத்தாக ஞ் சலிக்குஞ்சிந்தை தளருங்கா மாலைமகோ தாந்தானுமே. (௩௧)

### குன்மமகோதரம்.

தானகக் குலைதனையே மிகவலிக்குஞ் சாப்பாடு செரியாமல் வயி றுகுற்றும், வேனக மேனெக்கிச் சர்த்தியாகு மிடுக்கான வசீரணமாய் ப் பேதியாகும், பானகப் பக்கவிலா விடுப்புகுஷி பணைத்துமே வீங் கியே கல்லுபோலாம், கோனகக் கோமயம்போ னீரிறங்குங் குன்மம கோ தரத்தினிடக் குணங்கள்தானே. (௩௨)

### உதரமகோதரம்.

குணமாக நாவறண்டுகண் சிவந்துக்கொள்ளுங் கொடிதான வாயு வது திரட்சியாகும், பணமாகப் பகர்ந்துநீர் போதவாங்கும் பசியின்றிக் கனத்திருக்கும் மலம்விடாது, வணமாகவயிறெல்லாம் மெத்தவூதி மார் பளவுங் கழுத்தளவு மறையவீங்கும், மணமாக வயிறுதான் மிகவேபீ றும் மகாஉதர ரோகத்தின் வளப்பந்தானே. (௩௩)

### கூர்மமகோதரம்.

வளப்பந்தான் வறண்டுமே கண்சிவந்து வயிறுவிம்மி வாயுவுந்தா ன் திரட்சியாகும், இளப்பந்தா னிருகண்ணுஞ் சுருங்கிக்கொள்ளு மிரும லோ டிளைப்புநீர் போதவாங்கும், அளப்பந்தா னுமைபோல் வயிற்றிற் கட்டி அசனந்தான் செல்லாது பெலனுங்குன்றும், குளப்பந்தா னிரை ச்சலொடு குமுறலாகுங் கூர்மமா மகோதாத்தின் குறிப்பிதாமே. (௩௪)

### பீலிகை மகோதரம்.

குறிப்பாகப் பரிசத்திற் கூர்மையாகுங் குணமாக மலமோடு சல முமுண்டாந், தெறிப்பாக வாயுவது கீழோநோக்குஞ் சடமெல்லாம் வீங்காமற் கொஞ்சம்வீங்கும்,முறிப்பாக அசனந்தான் மிகவேவேண்டும் மூத்திரந்தான் மிகுதியாம் மூர்ச்சையில்லை, பிறிப்பாகக் கண்களிலே ர த்தமாகும் பீலிகை மகோதரமாய்ப் பேசலாமே. (௬௫)

### சுரமகோதரம்.

பேசவே காலோடு வயிறுபொத்திப் பெருங்கணைக்காற் புறங்கா லு மெத்தவீங்கி, வாசவே மார்பிடரி நரம்புதோன்றிவயிறுதான் மிகப் பொருமி மெத்தவீங்கும், கூசவே சுரமோடு அசதியாகும் கொடிய தோர் தாபமுண்டா மெரிச்சலாகும், வீசவே மிகவேண்டு மெரிச்சல் தன்னால் வீங்குங்கண் சுரமகோ தரம்விளம்பே. (௬௬)

### சலமகோதரம்.

விளம்பவே யங்கமெல்லாஞ் சலந்தான் கோக்கும் மேனியுமோ ம ஞ்சணிற மாகும்பாரு, உளம்பவே வுப்பசமு முழலையாகு முயர்கின்ற விங்கந்தான் தளர்ந்துபோகும், முளம்பவே முதுகோடு வயிறுவீங்கும் மூலமாந் தாதுக்கள் திகைத்தேநிற்கும், புளம்பவே பொறியைந்துங் கலங்கிப்போகும் பொருமுமெத்த சலமகோ தாத்தின்போக்கே. ()

### மாமிசமகோதரம்.

போக்கான மாமிசந்தான் வளர்ந்துமீறிப் பொருமியே அடிவயிற் றிற் கல்லைப்போலத், தாக்கான சடந்தானு முலர்ந்துவற்றித் தவிக் குமே யடிக்கடிதான் தண்ணீர்தேடி, வாக்கான மதுரமொழி குளறிப் பேசி வாயுத்தா னடிக்கடிக்கு மேலேநோக்கும், நீக்கான மலசலத்தில் மாமிசங்காணும் நேரான மாமிசமகோ தாத்தினேரே. (௬அ)

### சாத்தியம்.

தேரான சாத்தியத்தைச் சொல்லக்கேளாய் நேர்பான வாதமகோ தரமும்பித்தம், வாரான வழுவையொடு நழுவைநீராம்பல் மகத்தான ஊராம்பல் வெப்புப்பாவை, வேறான மேற்கவிசை சூல்மகோதரமும் விஷமகோ தரம்வல்லைப் பாண்டுவாகும், தூரான சோபைமகோ தரங் காமாலை துடிஉதர மகோதரமாங் கூர்மந்தானே. (௬௯)

### அசாத்தியம்.

கூர்மமொடு பதினாறுஞ் சாத்தியமாகும் குணமில்லா வசாத்தியத் தைக் கூறக்கேளாய், தீர்மமொடு சிலேட்டுமமாம் வாதசிலேட்டு மம் சீறியபித் தச்சிலேட்டுமந் தொந்தமாகும், கார்மமொடு கல்மகோ தரங்குலையின்முட்டி கடியவில் மகோதரஞ்சீழ்க் கவிசையாகும், பார் பக்கக் கவிசையொடு பழுக்கவிசையாகும் பாரமாம் பெருவயிறு குன் மந்தானே. (௭௰)

குன்மமொடு சுரமகோ தரம்பீலிகையுங் கொடியசல மகோதாரந் தான் மாமிசமாகும், பன்மமொடு பதினாறு மசாத்தியமாகும் பாடின தோர் முப்பத் திரண்டுமாச்சு, வன்மமொடு வடமொழியி னூல்சோ தித்து மகேசுரன்தான் சொன்னபடி யுமையாள்கேட்டுத், தன்மமொடு சகலருந்தா னறியவென்று சாற்றினேன் யூகியென்ற முனியான்றானே.()

பதினேழாவது, மகோதாரோகநிதானம் முற்றிற்று. ஆகவிருத்தம்-ருகூசு.

—(*)—

## பதினெட்டாவது

# விஷபாக ரோகநிதானம்.

தானுமே விஷபாக மெட்டதாகுஞ் சரசமாய்ப் பேரைத்தான் சாற்றக்கேளாய், வானுமே வாதவிஷ பாகமோடு மார்க்கமாம் பித்தவி ஷ பாகமாகுந், தேனுமே சிலேட்டுமவிஷ பாகமோடு திரிதோஷ விஷ பாகஞ் சேர்ந்துநின்ற, ஆனுமே அக்கினிவிஷ பாகமாகு மடங்காத எரி வுவிஷ பாகந்தானுங், கானுமே கந்தவிஷ பாகஞ்சன்னி கடியவிஷ பா கந்தா னெட்டுமாச்சே. (க)

ஆச்சென்ற மீன்முள்ளு நெல்லின்வாலு மருந்தலா லாகாயத் தே றல்நீர்தான், போச்சென்றகாடியால் புணர்ச்சிதன்னால் புழுக்களால் பூர் வத்திற் சமைபதார்த்தம், தீச்சென்ற கருகலாற் செம்பினூறல் சேர்ந் தத்திற் சமைத்தவன்னங் கறிபொசித்தல், வாச்சென்ற அழுகலாய் வெ தும்பலான மாமிசங்கள் புசித்தலால் மருவுந்தானே. (உ)

மருவவே நல்மடந்தை கற்பழித்தல் வழக்கோரம் வஞ்சனைகள் வாதுதர்க்கம், தருவவே உடன்படிக்கை தப்பினோர்கள் தந்தைதாய் கு ருவின்மொழி தனைமறந்தோர், அருவவே அன்னமிடை யூறுசெய்தோ ர் ஆஸ்தானந் தன்னிற்போ யாண்மைசொன்னோர், பருவவே பலபே ருக் குபகாரத்தைப் பறிக்கின்றோர் விஷபாகம் படுபாடாமே. (ரு)

வாதவிஷபாகம்.

படுகுமே ஒருபக்கம் வீங்கிவற்றும் பக்கமா மேனியெங்கும் வா ண்டுகாணும், கடுகுமே கண்தூங்குஞ் சடம்வெளுக்குங் கனத்துமே தலைதானுந் துயர்மிகுக்கும், மிடுகுமே மிகவீங்கும் பொசிக்கொட்டா து மேனியுமோ மிடுக்கெல்லாந் தளர்ச்சியாகும், விடுகுமே மூத்திரச் சலமேவற்றும் மேனிகன்றும் வாதவிஷ பாகமாமே. (ச)

பித்தவிஷபாகம்.

பாகமா யுடம்பெங்குந் தினவுண்டாகும் பாரமாந் தாபமொடு சுர முண்டாகும், வேகமா யுடம்பெங்கும் வெடிப்புமாகும் வெடிநெருப் புப் பட்டாற்போற் பொரியும்பாரு, ஊக்கமா யுடம்புவலி சவக்கேடாகும் உறுநித்திரை வாராமல் மேல்மூச்சாகும், காகமாய் மயிலுறக்கங் கடிய சித்தங் கடும்பித்த விஷபாகக் கணக்குத்தானே. (ரு)

### சிலேட்டுமேவிஷபாகம்.

தானுமே தேகமெங்குந் தினவுண்டாகிச் சற்றிரும லாய்க்காய மிகவெளுக்கும், கோனுமே கோழையொடு மூச்சுமாகுங் கொடியதா பச்சுரமாய்க் குளிருண்டாகும், வேனுமே மிகவீங்கி வெடிப்புண்டாகும் மேனியெல்லாம் வெவ்வனல்போ லழன்றுகாணும், தேனுமேபோலவே சிறுநீராகும் சிலேட்டுமவிஷ பாகமென்றே செப்பினரே. (௬)

### திரிதோஷவிஷபாகம்.

செப்பவே சர்த்தியொடு மூர்ச்சைதாகம் சிறுநீர்தா னடிக்கடிக்குமேற்சுவாசம், வெப்பவே விக்கல்நித் திரைமயக்கம் வீக்கமொடுமேல் வெளுப்பு மேனிகன்றல், அப்பவே அருசியொடு அதிசாரந்தான் அடிக்கடிக்குப் பிரமைபோ லலைவுண்டாதல், திப்பவே வாய்நீரு மிகவே யூறல் திரிதோஷ விஷபாகஞ் செப்பினோமே. (எ)

### அக்கினிவிஷபாகம்.

ஓமென்ற வாதபித் தங்கள்மிஞ்சல் உறுதியாங் கோழையொடு சர்த்திமூர்ச்சை, வேமென்ற வாய்தனிலே நீர்தான்வீழ்தல் வீக்கமாய்க் கிடைகொடா தேபுரட்டல், வாமென்ற உடம்புவற்றி வயிறுவூதல் மலசலமுஞ் சிக்கிசிக்கி சிவந்துவீழ்தல், பாமென்ற பக்கத்தில் வலியுண்டாதல் பாரமா மக்கினிவிஷ பாகந்தானே. (அ)

### எரிவுவிஷபாகம்.

பாரமாய்க் குறித்தவிட மிரத்தம்வீழ்தல் பழுப்பான கோழையொடு சுவாசங்காணல், மாரமாய் மார்புகுறுக் கிட்டடைத்தல் மகாவிரணங் கண்டுமே மாமிசந்தோற்றும், கோரமாய்ச் சடத்திலே குற்றமுண்டாம் குணக்கேடாங் குன்மம்போற் குடல்புரட்டும், ஆரமா யதிசாரம் வீக்கமாகும் அழலுமே யெரிவுவிஷ பாகந்தானே. (கூ)

### கந்தவிஷபாகம்.

எரிவுண்டாய்ச் சுரமோடு மயக்கஞ்சோம்பல் எழிலுடம்பு தான்கனத்தல் மூர்ச்சையாதல், தரிவுண்டாய்த் தலைவலியுஞ் சிலேட்டுமந்தான் தாகமே மிகுதியுமாய்ப் பலமாம்வார்த்தை, தெரிவுண்டாய்த் தேகத்திற் குளிருண்டாதல் சீதமாம் வயிறுவிட்டுக் கடுப்புகாணல், சரிவுண்டாய்ச் சவம்போலநாற்றமாகுந் தனித்ததோர் கந்தவிஷ பாகந்தானே.()

### சன்னிவிஷபாகம்.

கத்தமாய்ச் சேறுபோல் வயிறுபோகுங் கனவிரணந் தனில்ரத்த மிகவேகாணும், சுத்தமாய்ச் சுவாசமொடு சுரமயக்கஞ் சூட்டில்வெந்த கொள்ளெனவே மேனிநாறும், அத்தமா யந்தமுக வீங்கங்காணு மதிகமாம் வியர்வையொடு வசதியாகும், பித்தமாய் மயக்கமொடு பிதற்றலாகும் பெருகுசன்னி விஷபாகம் பேசலாமே. (கக)

சாத்தியாசாத்தியம்.

பேசவே சாத்தியமாம் விஷபாகந்தான் போான வாதபித்த சிலேட்டுமமாகும், ஏசவே யெரிவுவிஷ பாகத்தோடு இதுநாலுஞ் சாத்திய மா மசாத்தியந்தான், தேசவே திரிதோஷ சன்னிவாதம் திகழற்ற விஷபாக மக்கினிதானும், நாசவே நாலுந்தா னசாத்தியமாகும் நாதாக்கள் சொன்னபடி நாட்டினேமே. (கஉ)

பதினேட்டாவது, விஷபாகரோகநிதானம் முற்றிற்று. ஆகவிருத்தம்-கூ0கூ.

—(*)—

பத்தொன்பதாவது

# கிராணிரோக நிதானம்.

நாட்டவே கிராணிதா னிருபத்தைந்தாம் நலமாகு முற்பத்திப் பெயரைக்கேளாய், வாட்டவே வாதமாம் பித்தக்கிராணி வகையான சிலேட்டுமமொடு தொந்தக்கிராணி, ஊட்டவே ஊஷ்ணவா யுக்கிராணி உயர்கின்ற அந்தரமாம்வா யுக்கிராணி, மூட்டவே மூலவா யுக்கிராணி முதிர்குன்மக் கிராணிகெற்பக் கிராணியாமே. (க)

ஆமொட்டுக் கிராணியொடு சங்கிரகக்கிராணி அசதியாம் வாதாதி சாரமாகும், போம்பித்த வதிசாரஞ் சிலேட்டுமாதிசாரம் புணர்ச்சியாம் திரிதோஷ வதிசாரந்தான், தாமே சுராதிசாரம் சன்னிபாதாதிசாரம் தாக்கான தோஷாதி சாரமாகும், வேமே விஷூசிதூம மசீரணத்தூமம் விஸ்பட்ட மொடுமிரத சேடந்தானே. (உ)

தானென்ற வாதமாம் விஷூசியாகுந் தனிப்பித்த விஷூசியொடு சிலேட்டுமமாகும், ஏனென்ற பேதியது இருபத்தைந்து எழிலான உற்பத்தி இயம்பக்கேளாய், மானென்ற வயிற்றின்மந்த மிருக்கும்போது மாப்பண்ட மதுரங்கள் மங்கைகோஷ்டி, ஊனென்ற மாமிசங்கள் வேகாப்பண்ட முண்டதாற் கிராணிவந்துற் பவிக்குங்கண்டாய். (ங)

கண்டாயோ நார்செய்த பாவத்தாலுங் கடூரமாஞ் சிவனடியார் தங்கள்வேள்வி, திண்டாயோ சிவனேடு சுப்பிரமண்ணியர் தேவியொடு மால்சாத்தன் சிங்கவாகி, விண்டாயோ இவர்பூசை விடுத்தலாலும் மித்துருவாம் பந்துஜன உறவின்பேரை, பண்டாயோ பசிக்கவைத்துப் பொசிக்கையாலும் பருகுமே கிராணியென்ற பாழானேயே. (ச)

வாதக்கிராணி.

நோவாகும் நடுவயிறுஉப் பசமதாகும் நுட்பமாம் பசியெடுக்கு முடம்புலர்த்துந், தீவாகுஞ் சீதமாய் வயிறுபோகும் சிதறுமே மலந்தானும் வாயுதன்னல், காவாகுங் கட்டியாய் வயிற்றிற்காணுங் காற்றுமே மிகக்கழியுங் கறுப்புமாகும், பாவாகும் பழவெல்லம் போலேவீழும் படுவாதக் கிராணியிடப் பண்பிதாமே. (ரு)

பித்தக்கிராணி.

பண்பாக நடுவயிறு நோக்காடாகும் பலிநாறு விதமாக வயிறு போகும், மண்பாக வயிர்கழியு முறக்கமுண்டா மாசற்ற நரம்பெல் லாந் தளர்ந்துதொங்கும், உண்பாக வூனெல்லாங் கழிந்துபோகும் உள் கடுக்கும் மருந்தழியு முணர்ச்சிகேடாம், பெண்பாகப் பேன்தலைவி ட் டோந்துபோகும் பித்தத்தின் கிராணியெனப் பேசலாமே. (சு)

சிலேட்டுமக்கிராணி. (மாமிசக்கிராணி.)

பேசியே யழல்போல நாற்றமாகும் பெருகவே வெளுப்பாக மல ந்தான்போகும், காசியே கைகாலுந் தளர்ச்சிகேடாம் கள்ளமாய்க் காய்ச் சல்வருங் கண்சிவக்கும், நாசியே நாவோடு வறட்சிகாணும் நயந்துமே பாளையாய்க் குடல்போல் வீழும், ஆசியே யறிவில்லா தசதியாகும் அ தட்டியே விக்கல்வருஞ் சிலேட்டுமந்தானே. (எ)

தொந்தக்கிராணி.

வருகுமே தாபமுடன் காய்ச்சல்தானும் மகத்தான வேலைபோல் வயிறிரைச்சல், தருகுமே தலைவலியுங் குளிர்நடுக்கல் தனிப்பால்போல் மிகக்கழியு மடிக்கடிக்கு, பருக்குமே பகழியெனப் பாயும்வாயு பரிதாப முழலையொடு எரிவுமாகும், கருகுமே கால்கையும் புறங்கால்வீங்கும் கசிதொந்தக் கிராணியெனக் கண்டுகொள்ளே. (அ)

ஊஷ்ணவாயுக்கிராணி.

கண்டுகொள்ளு மலந்தனையே யிறுக்கிக்கொண்டு கனமாக வயிறி றைந்து உப்பசமதாகும், பண்டுகொண்ட அசனந்தான் செரித்திடாது பாங்கான புளித்தேக்கும் வாய்நீரூறும், விண்டுகொண்ட கால்கையு மச தியாகும் மேனியுமோ மிகக்கருகி மெலிவுமாகும், உண்டுகொண்ட நா ண்மூன்றிற் பேதியாகும் உணரூஷ்ண வாயுவென்றே யுரைக்கலாமே.()

அந்தாவாயுக்கிராணி.

உரைக்கவே பத்தியந்தான் கொண்டபோது உறுதியாய் மலந்தள ளிப் புளித்தேக்கிட்டுத், தரைக்கவே சர்த்தியொடு அருசியாகுந் தாக முண்டாய்த் தானிருக்குந் தளர்ச்சியாகும், விரைக்கவே விலாப்பக்க மிசிவுமாகும் மேனியெல்லாம் வெளுப்பாகும் விக்கலுண்டாம், அரைக் கவே யசனந்தான் செரித்திடாது அந்தரமாம் வாயுவிட வாண்மைதா னே. (ங)

மூலவாயுக்கிராணி.

ஆண்மையாய் வாயுதனில் மிகப்புரண்டும் அடிவயிற்றைப் பொ ருமியே மலம்வறண்டு, தாண்மையாய் சடம்வற்றி மந்திப்புண்டாய்ச் சத்தமாய்த் தணியாத இரைச்சலாகும், சேண்மையா யடித்துடையிற் குற்றலுண்டாம் கெட்டியாஞ் சரீரமது கிழமுமாகும், மூண்மையாங் குதந்தன்னின் முளைப்போல்தோன்று மூலவாயுக் கிராணியென மொழி யலாமே. (கக)

### குன்மக்கிராணி.

மொழியவே தலைதானுங் கனத்திருக்கு மொழிவுறக்க முண்டாகும் பீளைசாரும், கழியவே வயிறெல்லா முலாவிக்குற்றும் சமாசமாய்த் தான்வியர்க்குந் தலைநடிக்கும், உழியவே யுடம்பெரிப்பு முழலையாகு முப்பியே வயிறதுவு மிறைஞ்சிப்போகும், வழியவே வயிற்றிலொருபுறத்திற்றுனும் வளைச்சுரெகைஷ போடுகுன்மக்கிராணியாமே ()

### கெற்பக்கிராணி.

வளைச்சுமே வயிர்கழியுங் கடுப்புமுண்டாம் வாடியே கால்கையும் வெச்சென்றுகும், களைச்சுமே கண்தானு மஞ்சளாகுங் கழியுமே பலவிதமாய்க் கடினதாகம், உளைச்சுமே கெற்பந்தா னுயருங்காலம் உறுவன்னம் வாந்தியா யுழலையாகும், முளைச்சுமே கெற்பந்தான் கிழேவீழில் முடுகாது கெற்பமாங் கிராணிதானே. (௧௩)

### ஒட்டுக்கிராணி.

தானான படுக்கையே இதமாய்க்காணும் வலிப்புமே யிளைப்பாகத் தானிருக்கும், வானான வயிறுவலி பெத்தவாகும் மார்போடு விலாமுதுகு வலியுண்டாகும், ஓனான திட்டிடையாய் வயிறுபோகும் ஒருமித்துப் போகாமல் மலமுஞ்சிக்கும், தோனான தொப்புள்தனில் வளையம்போலச் சுட்டிடவே சுருக்கமா மொட்டுக்கிராணி. (௧௪)

### சங்கிரகக்கிராணி.

சுருக்கமா யுதரமது பொருமலாகிச் சோறுசெரியாக் கழிச்ச லபானச்சூடாய், குருக்கமாய்க் குதந்தனிலே நனைதலாகிக் குறுவியர்வைச் சுரமோடு அனலாய்க்காணும், மருக்கமாய் வாந்தியாய் மனமறுக்கும் மார்பிலே கோழைகட்டு மயக்கமாகும், சருக்கமாய்க் கண்கள்ரண்டுஞ் சுழற்சியாகுஞ் சங்கிரகக் கிராணியென்றே சாற்றலாமே. (௧௫)

### வாதாதிசாரம்.

சாற்றவே வயிறுதனைப் பொருமிநொந்து தனிச்சூலை போலவே வாயுதோன்றும், ஆற்றவே நீரிறங்கா அசனந்தானும் அரைவாகி சீரணமாய்ப் பேதியாகும், மாற்றவே மஞ்சளித்துக் கருச்கும்பேதி மகத்தான திற்கந்தம் வெளுப்புமாகும், நீற்றவே நெஞ்சுதனிற் புளித்தேக்காகும் நோரான வாதாதி சாரமாமே. (௧௬)

### பித்தாதிசாரம்.

ஆமென்ற மலந்தானு மஞ்சளித்து அதிகமாய் வறண்டுமே நுரைதான்பாயும், வாமென்ற வாயுதான் மிகவுண்டாகும் வற்றியே உடம்பெங்குங் கால்கைவீங்கும், காமென்ற கலங்காய்ச்சல் போலக்காயுங் குருதியே யுடம்பெங்கும் வெண்மையாகும், தாமென்ற தலைவலித்து வாந்தியாகுஞ் சமாசமாம் பித்தாதி சாரமாமே. (௧௭)

### சிலேட்டுமாதிசாரம்.

சாரமாய் நாற்றந்தான் மிகவுண்டாகித் தவளம்போ லேவெளுத்து நுரையுமாகி, வாரமாய் வயிர்வலித்துப் பேதியாகும் மாமிசந்தான் சத்துசத் தாய்விடுக்கும், ஆரமா யருசியொடு இருமல்சுவாசம் அழுந்தி மயிர்க் கூச்செறிந் தாசனங்கடுத்தல், தீரமாய்த் தேகமெங்குந் தினவுண்டாகுஞ் சிலேட்டுமாதி சாரமென்றே செப்பலாமே. (க௮)

### திரிதோஷஅதிசாரம்.

செப்பவே உள்ளெரிவாய்ப் புறங்குளிர்ச்சி செழுமைவிக்கல் வாந்தியோ டிருமல்சுவாசம், துப்பவே வயிறிரைந்து பொருமலாகிச் சுருட்டியே வயிறதுவும் வலித்துக்காணும், இப்பவே இரத்தசீ தக்சழிச்சல் எழிலான நித்திரையு முடல்நடுக்கும், உப்பவே உடற்குத்து முணர்ச்சிஇன்மை உருகு திரிதோஷவதி சாரமாமே. (க௯)

### சுராதிசாரம்.

அதிசார மூர்ச்சையொடு பிரலாபந்தான் அடித்துடையு மயர்ந்து மிகக் கடுப்புண்டாகும், கதிசாரக் காய்ச்சலொடு சர்த்திதாகங் கடுப்புண்டாஞ் சரீரமெங்குங் காந்தலாகும், ஒதிசாரஞ் சிறுநீர்தன் னுடுசுழிச்சலூஷ்ணமாய் ஓயாத விருமலாகும், அதிசாரம் பலவன்ன மாகும்பேதி சூட்சமாஞ் சுராதியெனு மதிசாரமாமே. (உ௦)

### சன்னிபாதாதிசாரம்.

சுரமாகி யுடம்பெல்லா மிகவேகாயும் சுவாசமா யிருமலொடு விக்கலாகும், அரமாகி நாவறண்டு அழற்சியாகி யதிசார மாய்க்கழிந்து ஆலோபிக்கும், மரமாகி யுடம்பெல்லாந் திமிருண்டாகும் வயிறுவலி யடிக்கடிக்கு மயக்கமாகும், உரமாகி யுடம்பெங்குங் குளுமையாகும் உறுதிசன்னி வாதாதி சாரமாமே. (உக)

### தோஷாதிசாரம்.

உறுகின்ற நீருந்தி வழிதான்புக்கில்உண்ணீர்தா னரம்புபுரை தனிவிழிந்து, அறுகின்ற வந்நரம்பை யமுகப்பண்ணி அபானவாய் வொடுகூடி மலப்பைக்குள்ளே, புறுகின்ற தான்விருத்து மூலாக்கினிக்கீழ் பொருந்தியதோ ரசனத்தைச் செரிக்கொட்டாது, மறுகின்ற வயிறிரைந்து கழிச்சலாகு மகாநாற்ற முண்டாந்தோ ஷாதிசாரம். (உஉ)

### விதூமஅசீரணம்.

உண்டதோ ரன்னமெல்லாம் வாந்தியாகு முறுதியா யமுகலாய்ப் புளித்தேக்காகும், வண்டதோர் வயிறுப்பும் பேதியாகு மகத்தான இரைச்சலொடு புளிப்புப்பேதி, முண்டதோர் முகங்கறுக்கு முடலம்வாடும் முதிர்மயக்காம் புத்தியது முன்பின்றோணு, விண்டதோர் மிகவாதை கிடைப்புரட்டும் மிகத்தண்ணீர் தவிப்பெய்தும் விதூமஅசீரணமதாமே. (உ௩)

### தூமஅசீரணம்.

எய்தியதோர் பதார்த்தமது வேதுந்தக்கா தெடுக்குமே யடிக்கடிக்கு வாந்திதானும், பெய்தியதோர் புளித்தேக்காம் வாயெரிக்கும் பேரான வுதடோடு புரட்டும்நாக்கு, கைதியதோர் கால்கையு முடலெரிக்கும் கண்டத்தில் வியர்வையுமாய்க் காயம்வற்றும், சைதியதோ ரல்லிபோற் றளர்ச்சியாகும் சயித்தியமாந் தூமமென்ற அசீர்ணந்தானே. ()

### விஸ்பட்டஅசீரணம்.

சயித்தியமாம் மிகவுழற்றுங் கோழையாகுஞ் சடமெங்கும் வெண்மையாய்க் கண்ணுந்தாழும், பயித்தியமாம் வாந்தியது வெளுப்புமாகும் பசிக்குமே யடிக்கடிக்கு நுரையாம்பேதி, உயித்தியமா யிருமலுடன் சுவாசந்தோன்று முறுகின்ற துயரமாய்த் தலைபுரட்டும், வயித்தியந்தான் செய்தாலும் வசப்படாமல் மறுக்குமே விஸ்பட்டவசீரணந்தானுமே.()

### இரதசேடஅசீரணம்.

மறுக்குமே மனமறுத்து வாந்தியாகும் மயக்கமாய் மூர்ச்சையாய் வசக்கேடாகும், கறுக்குமே நாக்கோடு கண்கள்மூக்கு காயந்தா னுலர்ந்துமே கறுத்துப்போகும், வெறுக்குமே யன்னத்தைத் தண்ணீர்தேடும் வெளுப்போடு கறுப்புமாய் பேதியாகும், உறுக்குமே கண்கள்தனை யுருட்டிப்பார்க்கும் உதறுமே இரதசேட வசீர்ணந்தானே (௨௬)

### வாதவிஷூசி.

தானுன விஷூசியது பிராதக்காலம் தனிலுதித்து வாதநாடியு மிக்காகும், வானுன வயிறிரைந்து ஊதிக்கொள்ளும் மாசிலா மேனியது கறுப்புமாகும், கானுன கண்விழிதான் திறந்தேநிற்கும் கருத்தெல்லாங் கலங்கியே காய்ச்சலாகும், கோனுன குடல்குமுறிப் புரட்டலாகும் கொடும்வாத விஷூசியிட குணமிதாமே. (௨௭)

### பித்தவிஷூசி.

குணமாகப் பகற்போது குதிகொண்டோங்கிக் கோபித்துப் பித்தநாடியுமேமீறி, நிணமான நேருந்தன் னுடலழுந்தும் நேரான மூர்ச்சைவிக்கல் நிறங்குன்றுது, வணமான வாய்பிதற்றி வாந்தியாகி மயங்கியே கிடைகொடாதேபுரட்டும், பிணமான ததுபோலப் பிரலாபிக்கும் பித்தமாம் விஷூசியென்றே பேசலாமே. (௨அ)

### சிலேட்டுமவிஷூசி.

பேசவே நாடியது அடங்கிக்காணும் பிரிந்திடுமே கங்குல்தனி விரண்டாஞ்சாமம், நாசவே உயிரதுவும் நாபிக்குள்ளாம் நடைகொடா தேபுரட்டும் கொறுக்கைவாங்கு, மேசவே கண்விழிமே லாகித்தாழும் மிடைவிடாப் பேதிதண்ணீர் மோர்போற்சாய்க்கும், தேசவே தேகமெங்கு மிகவெளுக்குஞ் சிலேட்டுமமாம் விஷூசியென்றே செப்புவீரே. ()

செப்பவே கிராணிதா னிருபத்தைந்தின் செய்தியெலாந் தெளிவாகத் திறந்திட்டேன்யான், ஒப்பவே சதாசிவன்றான் சொல்லக்கேட்டு உகப்பான நாதாக்க ளுரைகள்கேட்டு, தப்பிலா தன்வந்திரி சொல்லக்கேட்டுத் தாயான பராபரையாள் சொல்லக்கேட்டு, உப்பவே யூகியென்ற முனியாம்யானே உலகத்தோர் தாம்பிழைக்க உரைசெய்தேனே. (௩௰)

சாத்தியம்.

செய்திட்ட சாத்தியத்தைச் செப்பக்கேளாய் சீரான வாதமொடு பித்தக்கிராணி, உய்திட்ட ஊஷ்ணவாயுக் கிராணியோடு உயர்ந்தவந் தரவாயு மூலக்கிராணி, செய்திட்ட கெற்பமாங் கிராணியோடு கெடிவொட்டுக் கிராணிபித் தாதிசாரம், வெய்திட்ட சுராதிசா ரத்திறேடு விதூமமொடு தூமவசீ ரணமுஞ்சாத்தியம். (௩௧)

அசாத்தியம்.

அசாத்தியமாங் கிராணிவகை யறியக்கேளாய் அயசிலேட்டுமங் குன்மமொடு தொந்தக்கிராணி, தாத்தியமாஞ் சங்கிரகக் கிராணியோடு தனித்தவா தாதிசிலேட் டுமாதிசாரம், துசாத்தியமாந் திரிதோஷம் சன்னிபாதாதிசாரம் தோஷாதிசாரம் விஸ்பட்ட வசீர்ணம்,மிசாத்தியமா மிரதசேடம் வாதபித்தவிஷூசி மெலிசிலேட்டும விஷூசியுமே அசாத்தியந்தானே. (௩௨)

பத்தோன்பதாவது, கிராணிரோகநிதானம் முற்றிற்று. ஆகவிருத்தம்-௬௩.அ

—(*)—

## இருபதாவது

# மூலரோக நிதானம்.

தானென மூலமது இருபத்தொன்றும் சதாசிவன்றான் பராபரையாட்கருளிச்செய்ய, பானென பராபரையாள் நந்திதேவர்க்குப் பாஷிக்க நந்திதன்வந் திரிக்குச்சொல்ல, கோனென தன்வந்திரி அசுவினிக்குச்சொல்லக் குணமான அசுவினியும் அகஸ்தியர்க்குச்சொல்ல, ஆனென அகஸ்தியரும் புலஸ்தியர்க்குச்சொல்ல அவர்தானே தேரையருக் கருள்செய்தாரே. (க)

அருள்செய்தார் புலஸ்தியர்தான் தேரையர்க்கு ஆண்மையாந் தேரையமா முனிவன்றானும், பொருள்செய்தார் யூகிமுனி யாமெனக்குப் போக்கெல்லாம் வகைவகையாய்ப் பிரித்துச்சேர்த்து, தெருள்செய்த உலகத்தோர் பிழைக்கவென்று சிவமான சித்தர்களைத் தொழுதுகேட்டு, நருள்செய்து நலியாமற் பிழைக்கவென்று நாட்டினேனுயுருவே தத்தைத்தானே. (உ)

தத்தையா மதிகமாங் குளிரினாலுந் தரியாத வழற்சியாற் கிரந்தியாலும், புத்தையாம் பொருந்தாத ஊஷ்ணத்தாலும் புணர்ச்சியாற் கோபத்தாற் சலிப்பினாலும், கத்தையாம் வெகுகாமம் வேண்டலாலுங் கடினமா முப்பாலுங் காரத்தாலும், மொத்தையாம் வெகுதனங்கள் போனதாலும் மூலம்வந் துற்பத்தி முனையுந்தானே. (ங)

முனையாக மூத்தோரை வைதலாலும் மோசங்கள் பண்ணியே கற்பழித்தும், நினையாக நினைவிலொன்று வாக்கிலொன்றும் நேர்ந்தபடி சொல்கின்ற நிட்டூரர்க்கும், பனையாகப் பரதேசி பந்திவானோர் பசித்திருக்க வுண்டதோர் பாதகர்க்கும், தனையாகச் சமாதானந் தவிர்க்கின்றோர்க்கும் சண்டாள மூலம்வந்து சனிக்குந்தானே. (ச)

மூலப்பெயர்கள்.

சனிப்பான மூலத்தின் பெயரேதென்னில் சமரசமாம் நீர்மூலஞ் செண்டுமூலம், முனிப்பான முளைமூலஞ் சிற்றுமூலம் மூர்க்கமாம் வறண்மூலம் ரத்தமூலம், தினிப்பான சீமூல மாழிமூலம் திணியான தமரகமா மூலத்தோடு, வனிப்பான வாதமொடு பித்தமூலம் வகையான சிலேட்டுமத்தின் மூலமாமே. (ரு)

வகையாகுந் தொந்தமா மூலத்தோடு வளர்கின்ற வினைமூல மேகமூலம், பகையாகும் பவுத்திரமா மூலத்தோடு படர்கிரந்தி மூலமொடு குதமாமூலம், புகையாகும் புறமூலஞ் சுருக்குமூலம் பொருகின்ற சவ்வாகு மூலத்தோடு, தகையாகு மூலமது இருபத்தொன்று தண்மையாய்ச் சாற்றியதின் சுரூபந்தானே. (சு)

நீர்மூலம்.

சுருபங்கேள் தொப்புளிலே மிகவலித்துச் சுருண்டுமே கீழ்வயிற்றைப் பொருமிக்கொண்டு, வருபங்கேள் மலம்வறண்டு வாய்நீரூறும் வாயுதான் பரிகையிலே நுரைபோற்காணும், துருபங்கேள் புடவைதனிற் றேய்வுமாகும் சுருக்காக மலம்வருதல் போலிருக்கும், நிருபங்கேளடிக்கடிக்கு நீராய்ப்போகும் நிலையான நீர்மூலம் நினைவாய்ப்பாரே. (எ)

செண்டுமூலம்.

நினைவாகக் கருணையிட முளையைப்போல நிமிர்ந்தெழுந்து நாள் மூன்று நிற்பமாகி, கனவாகக் கன்றியே மிகவலிக்கும் காரந்தான் போட்டவுடன் களையாய்வீழும், இனவாக இரத்தமொடு தண்ணீர்காணும் இறுகியே மலந்தியு மிரைச்சலாகுந், தினவாக வாசனத்தைச் சுருக்கிக்கொள்ளும் செயசெண்டு மூலத்தின் றிறமைதானே. (அ)

முளைமூலம்.

திறமாக வாசனத்திற் கடுப்புமுண்டாம் திரட்சியாய்த் தடித்தெரிவு செயலுங்காணும், அறமாக வடிவயிறு கல்லுபோலாம் ஆசனந்தான் மிகச்சுருங்கித் தினவுமுண்டாம், குறமாகக் குதிகொள்ரத்தப் பீறிறங்கும் கூசாத இரைச்சல்மிக வேப்பமுண்டாம், மறமாக மஞ்சள் முளை போலெழும்பும் மலந்தியு முளைமூல வாண்மைதானே. (கூ)

### சிற்றுமூலம்.

வண்மையா யுடம்பெரியும் மயக்கமாகும் வயிறுதான் பளபளெ ன்னும் வலிவாய்க்குற்றும், இண்மையாய்க் குறுகுறென்றே இரைச்ச லாகும் இசிவுடனே பொருமலா யிளைப்புமாகுந், திண்மையாய்ச் சிற்று முளை பலவுண்டாகுந் தேகமெங்கும் வெளுப்பாகுஞ் செயலுங்காணும், வெண்மையாய் வெளுத்துமே பசியிராது மேனிகன்றுஞ் சிற்றுமுளை மிடுக்குத்தானே. (ய)

### வறண்மூலம்.

மிடுக்காக மலத்தையே யிறுக்கிக்கொள்ளும் மிருவாக ரத்தமது துளியாம்வீழும், அடுக்காகச் சடமுலர்த்தி யழல்கழிக்கும் ஆண்மை தான் மிகப்பேசிச் சண்டைகொள்ளும், உடுக்காக வுள்ளிருக்கு முளை கள்தானும் ஒருவருக்குந் தெரியாது ஒடுக்கிவைக்குந், திடுக்காக நாள்த னிலே பெலன்குறைக்குஞ் செயலழிக்கும் வறண்மூலச் சேதிதானே.()

### இரத்தமூலம்.

சேதியாய்த் தொப்புள்தனில் வலித்துநொந்து சிறுகதிர்போற் பீறிட்டு ரத்தம்வீழும், மேதியாய் மேனிவற்றி வெளுத்துப்போகும் மிகக்கைகா லயர்ந்துமே சோபையாகும், மாதியாய் மார்பிளக்குந் தலை நோயுண்டா மயக்கந்தான் மிகுதியாய்த் தள்ளிப்போடும், நாதியாய்க் கண்ணிரண்டு மஞ்சள்போலாம் நலியும்ரத்த மூலத்தி னண்புதானே.()

### சீமூலம்.

நண்பாகக் குதங்கடுத்து எரிப்புதோன்றும் நாற்றியே சீயோடு தண்ணீர்காணும், மண்பாக மாமிசங்கள் கரைந்துக்கொண்டு வடிவமெ ல்லாம் வெளுத்துமே மஞ்சளாகும், மெண்பாக மேவும்வாய் நீரதாகும் மிடுக்கான நடைகுறையு மெலிவுமாகும், திண்பாகச் சிறுநீர்தான் மஞ் சளிக்குஞ் சீமூலந் தன்னுடைய சேதியாமே. (க௩)

### ஆழிமூலம்.

சேதியாய் நீண்டவள்ளிக் கிழங்குபோலத் திமிர்த்துமே யேக முளை யாகக்காணும், நீதியாய் நீரோடுஞ் சீயுமிரத்தம் நிரைனிரையா ய்த் தோன்றியே மலமுஞ்சிக்கும், காதியாய்க் காரங்கள் எற்றிடாது கடியபல ஹீனமாந் தேகந்தானும், ஆதியாம் அயர்ந்ததனை யொறுத்துக் கொல்லும் ஆழிமூலத்தினிட ஆண்மைதானே, (க௪)

### தமரகமூலம்.

மூலமாம் பவனத்தி லுலக்கைப்பூண்போல் முதிர்ந்ததாமரைபூப் போ லலர்ந்திருக்கும், நூலமாம் நொறுக்காக மலமுங்காணும் நுணுக் கேறி யிரத்தமொடு தினவுமுண்டாம், வாலமாய் வயிறிரைந்து நீராய்ப் போகும் வயிறாதிப் பசியில்லா மந்தங்காணும், தாலமா மேல்மூச்சாய் அசதியுண்டாம் தமரகமா மூலத்தின் றண்மைதானே. (க௫)

### வாதமூலம்.

தண்மைகோ வைப்பழம்போற் குதஞ்சிவப்புற் றதனிலடப் பம்பூப்போல் முளைவளர்ந்து, கண்மைகறுப் பாய்மிருது வாயிருக்கும் கடுப்போடு தினவுகுற்றல் திமிர்த்தலாகும், வண்மைமயிர் தான்முளைத்து மலஞ்சிக்கென்று மகத்தாகக் கறுத்துமெத்தத் திரண்டுகாணும், வெண்மைவயிர் விட்டுமே குடலுள்வலிக்கும் மிக்கதலை வலிவாத மூலமாமே. ()

### பித்தமூலம்.

தலைவலிதான் மிகவுண்டாம் பருத்திக்கொட்டைத் தான்போலு நெற்போலு முளையுண்டாகும், மலைவலியாய் மலஞ்சிக்கி உருண்டுருண்டு மாவுண்டைத் திரித்திரியாய் ரத்தஞ்சீயாய்க், குலைவலியாய்க் குதங்கடுத்து எரிவுமாகிக் கூச்சமாய்த் தாகமொடு வியர்வையாகும், துலைவலியாய்த் தியக்கமுமாய்க் கோபமாகும் சொற்பலவீ னமும்பித்த மூலமாமே. (கஎ)

### சிலேட்டுமமூலம்.

ஈனமாங் குதத்தில்முளை வெள்ளையாகும் எந்நேரந் தினவதிக மெரிவுமாகும், கானமாங் கடுப்புடனே சீயுந்தண்ணீர் கனமான வலியாகி மலந்தானேங்குந், தூனமா மூத்திரந்தான் சூடுண்டாகும் சொற்குணபே தகமாகுந் தாதுநஷ்டம், பானமாம் பாண்டுவொடு அருசியாகும் பாவுசிலேட் டுமமூலப் பாங்குதானே. (கஅ)

### தொந்தமூலம்.

பாங்கான குதமிறுகிக் கோழிச்சூடு பதித்ததுபோற் றுணிருக்கும் நடக்கவொட்டா, வாங்கான வயிறுமெத்தப் பொருமலாகும் வருத்தமொடு வியர்த்துமே மிகநடுக்கும், தாங்கான தவித்துமே தாகமாகும் தரியாமல் வயிறதுவும் பேதியாகும், தீங்கான சடமட்டை போற்சுருங்கும் திடுக்குமே தொந்தமென்ற மூலந்தானே. (கசு)

### வினைமூலம்.

திடுக்கிட்டுச் சோறுசெரி யாமையாகுந் தீபனந்தா னில்லாமற் புளித்தேக்காகும், அடுக்கிட்ட அடிவயிற்றிற் குற்றலுண்டாம் ஆங்காரக் கோபமொடு மலமுங்கட்டுங், கடுக்கிட்ட கைகாலு மோச்சலாகுங் கனமாக வயிறிரைந்து காந்தலுண்டாம், வெடுக்கிட்டு நரம்பெல்லா மிசிவுமாகு மிகக்கடுக்கும் வினைமூல விவரந்தானே. (உ௦)

### மேகமூலம்.

வினையாக லிங்கத்தில் வெள்ளையூற்றும் மெத்தவாய்க் குதந்தன்னிலுதிரஞ்சாய்க்குஞ், சனையாகச் சத்தமதாய்க் கழிச்சலாகுந் தாக்கான சிறுநீரு மெரிச்சலாகும், பனையாகப் பருக்குங்கால் தலைவலிக்கும் பாராமாயுடம்பெங்குந் திமிருண்டாகும், முனையாக மூத்திரந்தான் மதுரமாகும் மூர்க்கமா மேகமென்ற மூலந்தானே. (உக)

பவுத்திரமூலம்.

மூர்க்கமாய்ப் பவுத்திரத்திற் கட்டியாகி மூத்திரந்தா னடிக்கடிக்கு அருவலாகும், கார்த்தமாங் கால்கையுங் கனப்புமாகும் கனகனக்குங் குதங்குய்யஞ் சாவற்சூடு, பூர்க்கமாம் பூப்போல முளைகள்காணும் பெருங்கோவைப் பழம்போலச் சிவப்புமாகும், பார்க்கமாங் காரந்தான் போடத்தீரும் பவுத்திரமா மூலத்தின் பண்புதானே. (உஉ)

கிரந்திமூலம்.

பண்புதான் லிங்கத்திற் புண்ணுமாகும் பாரமாய்க் கால்கையுங் கடுப்புமுண்டாம், குண்பாகக் குதத்துக்குள் விரணமாகிக் கொடிக்கொடியாய் முளையுண்டாய்ச் சீயும்ரத்தம், தண்புதான் தண்ணீரும் பெருகவுண்டாந் தணல்போல எரிவோடு கடுப்புமாகுங், கெண்புதான் கெட்டியாய் மலம்வறண்டு சிற்றூக வெடித்திறங்கும் கிரந்திமூலம். ()

குதமூலம்.

இறங்குமே மூங்கிலிடக் குருத்துபோல இழுத்துமே தள்ளிடிலோ வுள்ளேபோகும், பிறங்குமே சீயோடு ரத்தம்பாயும் பெருகியே வயிறுமெத்தக் கனத்துக்கொள்ளும், அறங்குமே கால்கையு மசைப்புமாகும் அடிக்கடிக்கு நாவறண்டு தண்ணீர்தேடுங், குறங்குமே மிகவலிக்குங் கோபமுண்டாங் கொடியகுத மூலத்தின் குணமதாமே. (உச)

புறமூலம்.

குணமதா யெண்ணெய்போற் றண்ணீர்போலுங் கூற்றுன கடுப்போடு சீயுமுண்டாந், திணமதாய்த் தினவெடுக்குந் திமிர்ப்புண்டாகுஞ் சிறுசிரங்காய் மேலெல்லாஞ் சொறியுமாகும், பணமதா யாசனத்திற் பகுப்புபோலப் பாங்காக விதனமாய்ப் படுக்கைகூடா, பிணமதாய் முகமெல்லாம் வாட்டமுண்டாம் போான புறமூலப் புதுமைதானே. ()

சுருக்குமூலம்.

புதுமையா யாசனத்தைச் சுருக்கிக்கொண்டு பெருங்குடலில் வலியோடு பொருமலாகும், கதுமையாய்க் குதந்தன்னிற் றடிப்புண்டாகுங் கழலுமே தண்ணீரும் ரத்தந்தானும், வெதுமையாய் வெவ்வனல்போ லழன்றுகாணும் வேற்றுடம்பாய்த் தான்வெளுத்து வெறிப்புண்டாகும், பதுமைபோல் தேகமெங்கு மசைவுகூடாப் பண்பான சுருக்கென்ற மூலந்தானே. (உரு)

சவ்வுமூலம்.

சுருக்கியே முதுகுதண்டி லுறப்பவித்துத் தொப்புளிலே தாமரைப்பூப் போல்மலர்ந்து, அருக்கியே குதத்திலே காரமாக்கி அடிவயிற்றிலோங்குமே மூலரோகம், சொருக்கியே சவ்வுபோ லாசனத்தில் சுற்றியே நின்றுதான் சீயுந்தண்ணீர், பருக்கியே கசிவாகு மெந்நேரந்தான் பண்பான சவ்வாகு மூலந்தானே. (உஎ)

சாத்தியம்.

தானென்ற மூலத்தில் சாத்தியந்தான் சாதகமாய் நீர்மூல முளை மூலந்தான், வானென்ற வறண்மூலம் ரத்தமூலம் வாதமா மூலந்தான் பித்தமூலம், வேனென்ற மேகமா மூலத்தோடு விளைபவுத்திர மூலமாங் கிரந்திமூலம், பேனென்ற புறமூலஞ் சுருக்குமூலம் பெருகுசவ்வு மூலமது சாத்தியமாமே. (உஅ)

அசாத்தியம்.

ஆமென்ற வசாத்தியத்தைச் சொல்லக்கேளாய் அழிவுசெண்டு மூலமாஞ் சிற்றுமூலம், தேமென்ற சீமூல மாழிமூலம் திணிவான தமரகமா மூலத்தோடு, வேமென்ற வினைமூலஞ் சிலேட்டுமமூலம் மிளிர்கின்ற குதமூலந் தொந்தமூலம், ஓமென்ற ஒன்பதுவு மசாத்தியந்தான் உறுதியாய் மூலத்தி னுண்மைதானே. (உகூ)

உண்மையா மூலத்தி னுறுதிதன்னை உகந்துமே சிவனுமையாட் குபதேசிக்கத், தண்மையாய் உமைநந்தி தனக்குச்சொல்லத் தயாநிதியாம் நந்திதன்வந் திரிக்குச்சொல்ல, விண்மையாய்த் தன்வந்திரி அசுவினிக்குச்சொல்ல அசுவனியு மகத்தியர்க்கு விவரங்கூற, அண்மையாய்க் குணக்கடலாம் குறுமுனிவர்தாமும் அடக்கினர் ஆயுருவே தத்தைதையெல்லாம். (௩ம)

அடக்கியே புலஸ்தியருக் கனுக்ரகிக்க அன்புடனே புலஸ்தியருந் தேரையமாமுனிக்கு, மடக்கியே போதிக்கத் தேரையமாமுனியும் மகத்தான யூகியாம் எனக்குரைக்க, உடக்கியே உள்ளபடி முழுதுமாய்ந்து உபகாரமாகவே உலகத்தோர்க்கு, வடக்கியே வடமொழியி னுரையைத்தேர்ந்து மகத்தான கவிதைசெய்தேன் தமிழிற்றானே. ()

இருபதாவது, மூலரோகநிதானம் முற்றிற்று. ஆகவிருத்தம்-௩௬௩.

—(*)—

# இருபத்தோராவது
# க்ஷயரோக நிதானம்.

தானான க்ஷயமதுதான் பனிர ண்டாகும் தாக்கான பிரமமாம் க்ஷயந்தானென்றும், வானான ராஜக்ஷயம் வைசியக்ஷய்ந்தான் மருவுசூத் திரக்ஷயந்தான் வாதக்ஷயமாகும், பூனான பித்தக்ஷயம் சிலேட்டுமத்தோடு புரண்டதோர் வாதபித்த க்ஷயமுமாகும், கானான வாத சிலேட் டுமக்ஷயந்தான் கரும்பித்த சிலேட்டுமத்தின் க்ஷயமுமாமே.()

ஆகின்ற விகாரக்ஷயந் தொந்தக்ஷயந்தான் அடங்கலுமே பனிரண்டு விதமுமாகும், வேகின்ற கஞ்சாவால் மிகுந்தவுப்பால் மீறியதோர் காரத்தால் மிகமயக்கால், தோகின்ற மருந்திட்டாற் சுனையினீரால் சுசியில்லாப் பதார்த்தங்கள் சுக்கான்றண்ணீர், வாகின்ற வக்கினியால் மிகுந்தவெய்யில் வருத்தத்தில் க்ஷயரோக மருவுங்காணே. (உ)

காணவே கற்பழித்தல் பொய்யேசொல்லல் களவாடல் பிறர்பொருளைக்கண்டார்ச்சித்தல், ஆணவே யடுத்தோரைக் கெடநினைத்தல் அகதிபர தேசியரை யகந்தைசொல்லல், ஊணவே பந்துவைவஞ் சித்தேயுண்ணல் உதாசினமா இழிந்தோரை இகழ்ச்சிபேசல், வேணவே காதினிற்கே ளாதசொல்லை மிகச்சொன்னோர் க்ஷயத்தில்வந்து மெலிகுவாரே. (௩)

பிரமக்ஷயம்.

மெலிவாகி இருமலொடு புண்கலங்கல் மிகத்தண்ணீர் போலவே சிலேட்டுமங்காணல், நலிவாகிக் கோழையொடு இரத்தமுண்டாய் நலமான அக்கினிதான் மிகவேதாழும், கலிவாகிக் கண்ணினொடு உதிரமாழ்கிக் காய்ச்சலது எந்நேரங் கலக்கமாகும், மலிவாகி யருசியொடு சர்த்தியாகல் மறையவனும் க்ஷயமென்று மதித்திடாயே. (௪)

இராஜக்ஷயம்.

மதித்திட்ட வெதுப்பினொடு தலைநோவுண்டாய் மார்நெஞ்சில் நோவுண்டாய்ச் சிலேட்டுமந் தோன்றும், குதித்திட்ட மஞ்சள்போற் கோழைகாணும் கொடிதான மிணறழன் றெரிந்துநோவாம், அதித்திட்ட வரிகுரலாய்த் திரிகைசெய்தல் அங்கமெல்லா மிகநொந்து அனலாய்க்காணல், சதித்திட்ட இருமலொடு சர்த்தியுண்டாம் க்ஷத்திரிய க்ஷயமென்று சாற்றலாமே. (௫)

வைசியக்ஷயம்.

சாற்றவே கையோடு காலுமோய்ந்து தாக்கான வெயில்காணிற் கடுவிஷம்போல், வேர்த்துமே வெதும்பலாய்க் காய்ச்சல்காணும் மிக்கான இருமலொடு கோழையுண்டாம், பாத்தவே பருத்திபோ லுடல்வெளுத்துப் பருகியதோ ரசனமிகத் தானுஞ்செல்லா, ஆற்றவே யாரூண்டி லதிகமாகும் அறிந்துரைத்த வைசியனும் க்ஷயந்தானாமே. (௬)

சூத்திரக்ஷயம்.

ஆமேதான் கண்ணழன்றுநீர் குளிர்ந்துபாய்ந்து அடிக்கடிதா னிருமியே மிடறுபுண்ணும், வேமேதான் மிகவழன்று வெதுப்புண்டாகும் விடிகிறநே ரந்தன்னில் நளிருஞ்சற்றே, வாமேதான் மயிர்க்கூச்ச மயக்கமாகு மகத்தான வலியுண்டா யுடல்தான்வேர்க்கும், தாமேநல் லோராண்டி லீராண்டிற்கொல்லும் வலிசூத்திர க்ஷயமென்றே நாட்டலாமே. (௭)

வாதக்ஷயம்.

நாட்டமாய்த் தலைவலியும் விலாவுஞ்சந்தும் நடுமுதுகுங் கடுத்துமே சர்த்தியுண்டாம், தூட்டமாய்ச் சுரமோடு தாகங்காணும் துடிப்பாகுந் தோளோடு கைகாலெல்லாம், காட்டமாய்க் கழித்ததுவு நீண்டுகாணும் கனமான அதிசார மிருமல்கோழை, தேட்டமாய்ச் சிறிதிடங்கள் குளிர்ந்துகாணும் சீறுமே வாதத்தின் க்ஷயந்தானென்றே. (அ)

### பித்தக்ஷயம்.

என்றதோர் விலாமுதுகு மிகச்சுருங்கி இரைக்குமே இருமலொடு கோழையுண்டாம், குன்றதோர் குளுமையுண்டா யிரத்தவாந்தி கொடிதான மூர்ச்சைகுரல் கம்மலாகும், தின்றதோர் தீபனந்தான் செரிகொடாது தேகமெங்கும் வெளுத்துமே மஞ்சளாகும், மென்றதோர் மூத்திரமு மஞ்சள்காணும் மீறுபித்த க்ஷயமென்றே மொழியலாமே. (௯)

### சிலேட்டுமக்ஷயம்.

மொழியவே யிருமலொடு கோழைசர்த்தி மூச்சோடு அருசியாமதிசாரந்தான், அழியவே தொனிபேத முடல்வெளுப்பு அசதியொடு சந்தாப மாலோபந்தான், துழியவே மூக்குநீர் பாய்தல்சோம்பு சொற்றவறல் சுரமோடு தூயதாபம், தெழியவே தேகமெங்குஞ் சொறியுண்டாதல் சிலேட்டுமத்தின் க்ஷயரோகச் செயலிதாமே. (ய)

### வாதபித்தக்ஷயம்.

செயலாகத் தேகமெங்கும் மிகக்கடுப்பு தீதான சுரதாகங் கோழை சர்த்தி, அயலாக அருசியொடு இருமல் சுவாசம் மதிகமா யுடம்பெரிவு ஆலோபந்தான், மயலாக மயக்கமொடு வாய்நீரூறல் மார்க்கமாய் மலம் விடுத்தல் நீரருக்கல், நயலாக நாக்குதடு மிகக்கறுத்தல் நாகமாம் வாத பித்த க்ஷயந்தானுமே. (கக)

### வாதசிலேட்டுமக்ஷயம்.

தானான தொனிபேதந் தொண்டைக்கம்மல் சாங்கமாஞ் சுரமோடு சுவாசஞ்சர்த்தி, கானான இருமல்சரீ ரங்கடுப்புக் கடுங்கோழை வெகுபலவீ னமுமேயாகும், ஆனான அக்கினிமந் தத்திேைனாடு அரோசிகமாஞ் சரீரமது வெளுப்புண்டாகும், வானான கால்கையும் வற்றலாகும் வாதசிலேட் டுமக்ஷயத்தின் வாறதாமே. (கஉ)

### பித்தசிலேட்டுமக்ஷயம்.

வாறான நித்திரையுஞ் சோம்பலோடு வடிவெல்லா நிறைந்துசுரம் வாந்திகோழை, ஏறான இருமலொடு வயிறுபேதி எடுக்கின்ற ரத்தம் வெகு நாற்றமாகும், தாறான தலைசுற்றல் பிரமைதாகம் சாறுசத் தாயிருமல் சாருந்தண்ணீர், பேறான நீரதுவும் ரத்தம்போலாம் பித்தசிலேட்டுமக்ஷயத்தின் பேரதாமே. (கங)

### விகாரக்ஷயம்.

ஆமென்ற காதிலே தொனியுண்டாகும் அழகானக் கண்ணிரண்டும் வெளுப்புமாகும், வாமென்ற வடிவுபெலன் றுனிளைத்தல் மகாவிரணம் பிரமேகம் மூச்சுண்டாதல், வேமென்ற விலாப்பக்கம் வலியுண்டாதல் மிகவிரத்தம் சர்த்தியுமே வெருவிக்காணல், மூமென்ற மூச்சோடு வாய்தானூறும் மூர்க்கனும் விகாரத்தின் க்ஷயமுமாமே. (கச)

தொந்தக்ஷயம்.

விகாரமாந் தொனிபேதஞ் சுரமுண்டாதல் மிடுக்கான விரும லொடு இரத்தக்கோழை, நகாரமாம் நாற்றமுட னடுக்கல்பேதி நவியாகி மயக்கநடு நாக்குக்குள்ளே, வகாரமாம் வட்டம்போல் கறுப்புண்டா தல் வடிவமெல்லாங் கற்றுழை நாற்றங்காணல், துகாரமாம் பேச்சுத் தான் மிகவுண்டாகுந் தொந்தமாம் க்ஷயத்தினிட சூக்ஷந்தானே. (௧௫)

சாத்தியம்.

சூக்ஷியாய்ச் சாத்தியத்தைச் சொல்லக்கேளாய் சுற்றமாம் பிரம மென்ற க்ஷயத்தினோடு, சாட்சியாய் க்ஷத்திரிய க்ஷயத்தோடொக்கச் சார்ந்தவை சியக்ஷயமாம் பித்தத்தோடு, திட்சிசிலேட் டுமக்ஷயந்தா னைந்துசாத்தியம் திட்டமா மருந்துதன்னிற் றீர்க்கலாகுங், காட்சி யாய்க் கனமான செந்தூரத்தில் காரணமாம் வயித்தியர்முன் றீருந் தானே. (௧௬)

அசாத்தியம்.

தீராத வசாத்தியத்தைச் செப்பக்கேளாய் சீர்கேடாஞ் சூத்திர க்ஷயம் வாதக்ஷயந்தான், வாராத வாதசிலேட் டுமக்ஷயந்தான் மன்னிய தோர் பித்தசிலேட் டுமக்ஷயந்தான், வேராத விகாரக்ஷயம் வாதபித்தம் மிடுக்கான தொந்தமாம் க்ஷயத்தினோடு, ஏராத திதுவேழு மசாத்தியந் தான் எந்தமருந் திட்டாலு மிசைவாகாதே. (௧௭)

இசைவாக க்ஷயத்தினிட குணங்கள்தன்னை என்தாயார் நந்திக்கு எளிதிற்சொல்ல, நசைவாக நந்திதன்வந் திரிக்குச்சொல்ல நன்மையாந் தன்வந்திரியசு வினிக்குச்சொல்ல, அசைவாக ஆயுர்வே தத்தின்கருத் தை அடக்கபா யசுவினியு மகஸ்தியர்க்குரைக்க, பிசைவாக வகஸ்தியரு ம் புலத்தியர்க்குரைக்கப் புலத்தியருந் தேரையர்க்குச் சாற்றினரே. ()

சாற்றினர் தேரையமா முனிவன்றானும் சாங்கமா யூகிமுனி யாம் எனக்கு, போற்றினர் மானிடர்கள் பிழைக்கவென்று பொறுக்கியே யாயுருவே தத்தையெல்லாம், வீற்றினர் முத்துப்போல் பொறுக்கிக் கோத்து விரிதமிழைச் சுருக்கியே வெளியாய்த்தானும், தேற்றி னர் சிவசெந்திக் குபகாரமாகச் செப்பினர் செகமெல்லாந் தெரியத் தானே. (௧௯)

இருபத்தோராவது, க்ஷயரோகநிதான முற்றிற்று. ஆகவிருத்தம்-௬அஅ.

—(*)—

# இருபத்திரண்டாவது
# காசரோக நிதானம்.

தானான காசமது பனிரண்டாகுந் தாக்கான மந்தார காசத்தோடு, பானான பக்கமந் தாரகாசம் பாங்கான சுடர்காசம் வாதகாசம், பேனான பித்தமாங் காசத்தோடு பேர்பெரிய சுவாசகா சத்தோடொக்க, ஏனான இரத்தமாங் காசத்தோடு இரைப்பான சிலேட்டுமகா சந்தானுமே. (௧)

ஆகின்ற காசத்தில் சுவாசகாசம் அழிவாத பித்தத்தின் காசமாகும், போகின்ற பித்தசிலேட் டுமகாசந்தான் புகழ்பெரிய தொந்தமாங் காசத்தோடு, தேகின்ற காசமது பனிரண்டாகுந் தெளிவாக யிதினுடைய செயலைக்கேளாய், வேகின்ற வதிகமாம் புகையினாலும் மீறுகின்ற பாணத்தால் மிருக்குந்தானே. (உ)

பாணத்தால் பரமாக்கினி மிருக்கையாலும் பாரமா மாமிசங்கள் புசிக்கையாலுந், நாணத்தாற் சஞ்சாரந் தவிர்க்கையாலுஞ் சரிப்படாப் பதார்த்தங்கள் புசித்தலாலுந், தீணத்தாற் பொசியாம விருக்கையாலுஞ் சேயிழையார் மேலின்பஞ் சிதைவதாலும், மாணத்தால் மாதுக்கமடைதலாலும் மதத்தாலுஞ் சுவாசமது மருவுங்காணே. (ங)

காணவே தேவதைக்குப் பிரித்தபண்டம் களவாடித் தின்றாலுங் கணவன்றன்னைத், தோணவே நிந்தையே சொன்னதாலுஞ் சுசியான பதார்த்தமெச்சில் பண்ணினாலும், வேணவே ஒருவர்செய்த நன்றிதன்னை மிகமறந்து கொடுமைகடான் விளம்புவோர்க்கும், பேணவே சபைதனிலே சொன்னபேச்சுப் புரண்டோர்க்குங் காசம்வந்து பிறக்குந்தானே. (ச)

மந்தாரகாசம்.

தானான தூயதோர் நாசிதன்னில் சலநோய்நீர் தான்விழுந்து தும்மலுண்டாம், மானான மார்புநெஞ் சடைத்துமூச்சு வலுவாகப் பாம்புபோல் சீறலாகுங், கானான கண்டமொடு முகமுங்காதுங் காயமதுங் கசிவாகி வியர்வையாகும், ஏனான இருமலொடு கோழைகம்மல் இரைப்பாகு மந்தாரக் காசமாமே. (ரு)

பக்கமந்தாரகாசம்.

காசமா யிருமலொடு இளைப்புமுண்டாய்க் கட்டியே நெஞ்சதனிற் கம்மலாகும், வாசமாய் வயிறதுவும் பொருமிக்கொள்ளும் மகத்தான மூக்குநீர் பாய்ச்சலாகும், ஆசமா யமாபக்ஷம் பூர்வபக்ஷத் தருகாமையானவுடன் சுவாசமீறும், ஈசமா யிரைப்போடு எரிமூச்சாகும் இக்குணந்தான் பக்கமந் தாரகாசம். (சு)

சுடர்காசம்.

பக்கமாய்ப் பிரசவித்த மாதருக்குட் பாரமாய்த் தலைநோயுஞ் சுரமுண்டாகும், உக்கமா யழலையொடு தவனமுண்டாம் உறுகழிச்சல் பொருமலொடு உப்புசமுமாகும், மிக்கமா யுள்மூச்சு மிடுக்கதாகும் மிராளாமல் விழியிரண்டுந் தெளிவுமாகுந், துக்கமாய்த் துடிதுடிக்கு மகப்பெற்றோர்க்குச் சுடர்காசந் தன்னுடைய சுரூபந்தானே. (எ)

வாதகாசம்.

சுரூபமாய் நெஞ்சுதனிற் றினவுமுண்டாஞ் செவிதனிலே இரைச்சலுமா மரோசகந்தான், மருபமன்னிக் கீழ்மூச்சு மார்பளவதாகி மன்னியே நெஞ்சளவா யுழலுஞ்சுவாசம், நிருமநேர் படும்பிரம ரந்திரந் தன்னில் நெய்த்துதுன் மாமிசங்கள் மிகவளர்ந்து, துருபமாய் மூச்சதிக மிருமல்கோழை தூய்தான வாதகா சத்தின்சீரே. (அ)

பித்தகாசம்.

சீராக இருமல்மிகப் புரட்டலாகித் தித்தித்து உப்புரைக்குஞ் சர்த்தியுண்டாம், தாராகத் தலையுடம்பு தான்வலிக்குந் தாகித்துக் குரல் கம்மும் ரத்தம்வீழும், ஆராக வங்கந்தான் மிகவிளைக்கும் அன்னந்தான் செல்லாமற் புளித்தேக்காகும், மாராக மயிர்க்கூச்சுச் சுரமுமுண்டாம் மதிமயங்கும் பித்தகாசத்தின் வண்மை. (கூ)

சுவாசகாசம்.

வண்மையாய்க் கோழைகட்டி இருமிவீழும் மாநாகம் போலவே வாங்குஞ்சுவாசம், திண்மையாய்ச் செருமலுண்டா மடிக்கடிக்குச் சீரணமில்லாமலே வயிறுஊதும், நண்மையாய் நாசியது தணல்போலாகும் நலிந்துடம்பு வற்றிவருங் குரலுங்கம்மும், உண்மையா யுண்ணுக்கி லூறுங்கேணி யுழற்றுமே சுவாசகா சத்தினெப்பே. (ய)

இரத்தகாசம்.

ஒப்பான குரல்கம்மி உதிரந்தானும் உருட்சியாய்க் கட்டிபோலுருண்டுவீழும், விப்பான விலாவிலே மிகநோவாகி மளமளென வயிர்கடித்து உளைச்சலாகும், கப்பான கால்கையு மோச்சலாகுங் கடுமூத்திர மெரிந்துமெத்த மஞ்சள்போலாம், தப்பான சரீரமது வெளுத்துக் காணுஞ் சமிக்கும்ரத்தக் காசமென்றே சாற்றலாமே. (கக)

சிலேட்டுமகாசம்.

சாற்றவே இருமலொடு இளைப்புமுண்டாய்ச் சார்ந்தபீளையுமூச்சுமிகுந்துவாங்கும், ஆற்றவே அடிவயிறு மந்தம்பற்றி அழகாகு முருவழித்து உடம்புவற்றும், சேற்றவே சுரமோடு தியக்கமுண்டாய்ச் சித்தமே மிகக்கலங்கி வாந்தியாகி, தீற்றவே சிறுகடுப்பாந் தேகமெங்குஞ் சிலேட்டுமத்தின் காசமென்றே செப்பலாமே. (கஉ)

பீனசகாசம்.

செப்பமா யிருமலொடு கோழைவீழுஞ் சிலேட்டுமமா யிளைப்போடு இரைப்புண்டாகும், உப்பமாய் வயிறதுவு மூதிக்கொள்ளும் ஊணுறக்க மில்லாம லுலருந்தேகம், குப்பமாய் மலசலமுங் கறுகிவீழும் கோழையிட குணந்தான்மீன் கவிச்சடிக்குந், துப்பமாய்ச் சுருண்டு வயிர் வலியுமாகுஞ் சுவாசபீ னசமென்றே சூட்டிடாயே. (கங)

வாதபித்தகாசம்.

சூட்டிட்டுக் காறையிலே துளிக்கும்ரத்தஞ் சூட்சமாய்க் காதுதனி விரைச்சலுண்டு, ஆட்டிட்ட இருமலொடு அசதியாகும் அடிக்கடிக்கு வாயுதான் மிகவேமீறும், மூட்டிட்ட முதுகுதண்டு குடைச்சலுண்டாம் மூச்சோடு சந்தாப மொழிமாறுட்டம், வூட்டிட்ட தேகந்தான் ஊதிக்கொள்ளும் வாதபித்த காசத்தின் மார்க்கந்தானே. (கச)

பித்தசிலேட்டுமகாசம்.

மார்க்கமாய் நெஞ்சுதனிற் றினவுண்டாகும் வடிவமெலாந் தான் வலிக்கு மிருமலுண்டாம், தார்க்கமாங் குரல்கம்முஞ் சடமிளைக்குஞ் சஞ்சலிக்கும் பூருவத்திற் சதியைநாடி, பீர்க்கமாய்ப் பூமியெல்லாஞ் சுழற்றல்போலாம் பெண்பார்வை பார்த்தவுடன் புளகமுண்டாம், பீர்க் கம்பூப் போலுடம்பு மஞ்சளிக்கும் பித்தசிலேட் டுமகாசப் புதுமை தானே. (கரு)

தொந்தகாசம்.

புதுமையாய்ப் புரண்டுமே இருமல்குற்றிப் பூங்கமுகி னிறமாக இரத்தம்விழும், வெதுமையாய் வெதும்பலொடு எரிவுதாகம் மிக் கதோ ரருசியொடு வயிறுபேதி, பதுமையாய்ச் சரீரமெங்கும் படுக்கை கூடாப் பருத்துமே உடம்பூதிப் பாண்டுவாகும், கதுமையாய்ச் சரீர மெங்குங் கடுப்புண்டாகுங் கடிதுதொந்த காசத்தின் காட்சிதானே. ()

சாத்தியம்.

காணவே சாத்தியத்தைக் கருதக்கேளாய் கனத்ததோர் மந்தார காசத்தோடு, பூணவே பக்கமந் தாரகாசம் பொலிவான சுடர்காசம் பித் தகாசந், தோணவே சுவாசகா சத்திேனாடு சுழியிரத்தக் காசமாம் பீனி சகாசம், தாணவே இதுவேழுஞ் சாத்தியமாகுஞ் சாதகமாய்ப் பரிகா ரம் பார்த்துச் சாற்றே. (களு)

அசாத்தியம்.

சாத்தியதோ ரசாத்தியந்தான் வாதகாசம் சஞ்சலமாஞ் சிலேட்டு மத்தின் காசத்தோடு, தோத்தியதோர் தொந்தமாங் காசத்தோடு சுரு க்கான வாதபித்தகா சத்தோடொக்க, நேத்தியதோர் பித்தசிலேட்டும காசமெல்லாம் நேரான வசாத்தியமாய் நிகழ்த்தலாகும், போற்றிய தோர் சிவனூலு மிந்தநூலும் போக்கொன்று தப்பாது பொய்யா காதே. (கஅ)

பொய்யாகாச் சாஸ்திரத்தை நித்தம்பூசி புகழாக எவ்வுயிருந் தம் முயிர்போலெண்ணு, மெய்யாகத் தாயோடு சிவனைப்போற்று மிகுந்த வுப சாரத்தால் விருப்பமாக, மைபோக மருத்துவர்கள் அசுவினிதே வர் மாசற்ற குறுமுனிக்கும் வணக்கம்பண்ணு, மெய்யாக என்னூலை விருப்பமாக விநயமெலாஞ் சோதித்து விரித்துச்சாற்றே. (கசு)

இருபத்திரண்டாவது, காசரோகநிதானம் முற்றிற்று. ஆகவிருத்தம்.எ0எ.

—(*)—

## இருபத்துமூன்றுவது,
## உளைமாந்தைரோக நிதானம்.

சாற்றவே தானியத்தைக் குறைத்தபேர்க்குஞ் சடுதியிலே சிவ வதை பண்ணினோர்க்கும், கோற்றவே குலமடந்தை சுற்பழித்துக் கொடுமையாம் புலைகளவு கட்காமந்தான், போற்றவே பூசைக்கு இடறு காணல் புருடனிட ஸ்திரீதனையே பிரிக்கின்றோர்க்கும், ஊற்றவே உளை மாந்தை ரோகம்வந்து உற்பவிக்கு முறுதியென்றே உரைக்கலாமே. (க)

உரைக்கவே ஊழித்திக் கிரைகொடாமல் உட்கார்ந்து அக்கினிதான் மந்தித்தப்போ, பரைக்கவே அசனத்தைப் பருகினோர்க்கும் பகலுற ங்கி இரவுதனில் விழித்தலாலும், புரைக்கவே புலால்தனையே பொசி த்தலாலும் புணர்ச்சியினின் மயக்கத்திற் பொருந்தலாலும், இரைக் கவே கடுவோட்ட மோடினாலும் எய்திடுமென் றுளைமாந்தை யிசைக்க லாமே. (உ)

இசைக்கவே உளைமாந்தை நாலதாகும் இதினுடைய நாமத்தை இயம்பக்கேளாய், வசைக்கவே வாதஉளை மாந்தையோடு மருவுகின்ற பித்தவுளை மாந்தையாகும், திசைக்கவே சிலேட்டுமஉளை மாந்தை யோடு செயலான தொந்தஉளை மாந்தையாகும், அசைக்கவே நாவினிட வாண்மைதன்னை அசாத்தியசாத் தியமென்றே யறிந்துஉன்னே. (ங)

வாதஉளைமாந்தை.

உன்னவே உறுநெஞ்சு பழுக்கள்பக்கம் உறுமிநினை வழிந்திருமி உரக்கநொந்து, சின்னவே பஞ்சுபோற் சுரமுந்தோன்றி சீய்க்கட்டி யாய்ப்பழுத்துச் சிதறிவீழும், தின்னவே சிலேட்டுமந்தான் மீறிக்கா ணும் செரிக்காமல் அசனந்தான் திருப்பிவீழும், கன்னவே காலுகை யில் கசப்புகாணுங் கருகுமே வாதஉளை மாந்தைகாணே. (ச)

பித்தஉளைமாந்தை.

காணவே மிகத்திரண்டு கீழ்வயிற்றிற் கட்டியாய் மிகப்பொருமிப் புண்போல்நொந்து, ஊணவே உடம்பெங்கு முளைச்சலாகி உறப்பான தலைநோயுஞ் சுரமுங்காணும், ஈணவே இருமலொடு சீயுமுண்டாம் இரைப்பாகி மிடறெல்லாம் புண்ணுமாகும், பேணவே மயக்கமொடு புரட்டலாகும் பித்தஉளை மாந்தையென்றே பேசலாமே. (ரு)

சிலேட்டுமஉளைமாந்தை.

பேசலாம் உடலுருகிப் பிழிந்தாற்போல பெலமான மேனியெல் லாம் புண்போனொந்து, வாசலாம் வாயிலே சீயுமுண்டாய் மனமறு கிச் சர்த்தியொடு மயக்கமாகும், நாசலாம் சிலேட்டுமமும் நடுக்கலாகி நலங்கியே பஞ்சுபோல் மிகவெளுக்கும், ஆசலாம் ஐயஉளை மாந்தை யென்று அவனியுள்ளோர் தங்களுக்கு அறியக்கூறே. (சு)

தொந்தஉளைமாந்தை.

கூறுகத் தலைவலியுஞ் சுரமுந்தோன்றிக் குணங்கெட்ட இரும லொடு கோழையுண்டாய், ஆறுக வன்னத்தை இறங்கொட்டாது ஆங் கார மடக்கியே யசதியாகும், ஊறுக உறக்கமது மிகுதியாகும் உறுதி யாய்ச் சீவிழுந்து நாற்றமுண்டாம், தூறுகச் சடமெங்குந் தினவுண் டாகும் தொந்தஉளை மாந்தையென்று செப்பலாமே. (எ)

அசாத்தியாசாத்தியம்.

செப்பியதோ ரசாத்தியத்தைச் சொல்லக்கேளாய் சீறுகின்ற தொந்தஉளை மாந்தைசிலேட்டுமம், வப்பியதோர் வாதஉளை மாந்தை தானும் மாவவிழ்தந் தன்னாலும் வசப்படாது, கப்பியதோர் பித்த உளை மாந்தைதானும் கனவவிழ்தந் தன்னிற்கா ரியமுமாகும், ஒப்பி யதோ ராயுருவே தத்திற்றானும் ஒன்றும்பொய் போகாது உரைத்துப் பாரே. (அ)

பாரென்ற க்ஷயமதுதான் பனிரண்டாகும் பண்பாகக் காசமது பன்னிரண்டு, பாரென்ற உளைமாந்தை நாலுமாச்சு உகப்பாக இருபத்து எட்டுமாச்சு, காரென்ற திதுவெல்லாம் க்ஷயத்திற்கூட்டிக் காரணமாந் தேரையமா முனிவன்சொல்ல, ஊரென்ற யூகிமுனி யாகுநான்தான் உலகத்தோர்க் காகவெண்ணி உரைசெய்தேனே, (கூ)

உங-வது, உளைமாந்தைரோகநிதானம் முற்றிற்று. ஆகவிருத்தம்-எககூ.

---

## இருபத்துநான்காவது,

# பெரும்பாடுரோக நிதானம்.

உரைசெய்த பெரும்பாடு நாலதாகும் உகந்துமே வாதத்தின் சி ராவமொன்று, புரைசெய்த பித்தத்தின் சிராவமொன்று போரான சிலே ட்டுமத்தின் சிராவமொன்று, திரைசெய்த தொந்தமாஞ் சிராவமொன்று தொகையெல்லாம் நாலுவிதச் சிராவமாச்சு, கரைசெய்த விதனுடைய வுற்பத்தியெல்லாம் கண்டபடி சொல்லவே கருதிடாயே. (க)

கருதியே கனமான கொடுமைசெய்து கணவனையே நிந்தனைதான் சொன்னபேரும், பருதியின்முன் மலசலத்தை விட்டபேரும் பரதேசி யேழைகளைப் பழிக்கின்றோர்க்கும், குருதியே யிரைக்கின்ற காலந்தன் னில் கூசாமற் புருஷசங்கை பண்ணினோர்க்கும், சுருதியே பரபோகம் விரும்பினோர்க்கும் சுருக்கிலே பெரும்பாடுற் பவிக்குந்தானே. (உ)

பெரும்பாடு.

தானென்ற காரங்கள் மிகுக்கையாலும் சண்டாளக் கோபத்தின் சலிப்பினாலும், ஊனென்ற மாமிசங்கள் பொசித்தலாலும் உறக்கமின் றி விழித்தலா லூழித்தீயால், பானென்ற பசியின்றிப் பொசிக்கையா லும் பாரமாஞ் சுமைதாங்கல் பகலுறக்கம், கூனென்ற குறுக்கலாய் மு டக்கித்தூங்கல் குரூரமாம் பெரும்பாடு கூடுந்தானே. (ங)

வாதப்பெரும்பாடு.

கூடுமே தலைவலியு மேற்கடுப்பும் கூறான முதுகிடுப்புக் குடைச் சலுண்டாம், வாடுமே தேகமெல்லாங் கருக்கலாகும் மாதவிடாய்த் தரி த்துமே மைந்தன்போலாம், ஊடுமே வயிறாதி உடைச்சலாகி ஊற்று மே செந்நிறமுங் கருகலாகத், தேடுமே துற்கந்தஞ் சேரவொட்டா செ கமறிய வாதத்தின் சிராவமாமே. (ச)

### பித்தப்பெரும்பாடு.

ஆமென்ற வன்னத்தை இறங்கொட்டாது அழுகின்ற மஞ்சள் நிறம் போலவூற்றும், வேமென்ற யோனியிலே வேக்காடுண்டாம் மேனியுமோ வெளுத்துமே மிடுக்குபோகும், காமென்ற கால்கையும் வழற்றலாகும் கருகலாய்க் கட்டிபோ லுதிரம்வீழும், தேமென்ற சிறுகடுப்பாமங்கமெல்லாம் சீறியதோர் பித்தத்தின் சிராவமாமே. (ரு)

### சிலேட்டுமப்பெரும்பாடு.

ஆகுமே வெள்ளைநிற மாகவூற்றும் அலியான நாற்றந்தான் மிகவுண்டாகும், வேகுமே உடம்பெங்கும் விபூதிபூக்கும் வெந்தழலா யுடம்பெங்கும் எரிச்சலாகும், பாகுமே படபடப்பு மூச்சுமுண்டாம் பாரமாங் கோழையொடு இருமலாகும், தேகுமே யடிக்கடிக்கு மயக்கமாகும் சிலேட்டுமத்தின் சிராவமென்றே செப்பலாமே. (சு)

### தொந்தப்பெரும்பாடு.

செப்பவே கருங்கல்லாய்ச் சிவப்புமாகும் சேர்ந்ததிலே கட்டியாய்க் கறுப்பாய்வீழும், உப்பவே வபிறதுவு முளைச்சலாகும் ஊசலா நாற்றமுட னெழுக்கமாகும், நப்பவே மஞ்சள்நிற நயப்புமாகும் நாணியே தலைதானும் நடுக்கலாகும், துப்பவே வாய்நீரு மிகவேவற்றும் தொந்தமாம் பெரும்பாடு சூட்டினேமே. (எ)

### அசாத்தியாசாத்தியம்.

சூட்டியதோ ரசாத்தியத்தைச் சொல்லக்கேளாய் சொலும்சிலேட்டும பெரும்பாடு தொந்தச்சிராவம், பூட்டினதோ ரிரண்டுமே பிழைக்கொட்டாது புகழான சாத்தியத்தைப் புகலக்கேளாய், வாட்டினதோர் வாதத்தின் பெரும்பாடோடு வகையான பித்தத்தின் சிராவந்தானும், தீட்டினதோர் மருந்துக்குள் செயமுமாகும் செப்பினதோர் என்னூலைத் தெளிந்துபாரே. (அ)

உசு-வது. பெரும்பாடுரோகநிதானம் முற்றிற்று. ஆகவிருத்தம்-எஉ.சு.

---

## இருபத்தைந்தாவது

# கல்லடைப்புரோக நிதானம்.

தெளிந்ததோர் கல்லடைப்புற் பத்திகேளாய் சிறிதுநாட் டடங்கியே மேகந்தன்னால், தளிந்ததோர் சலப்பையி லுதிரந்தோய்ந்து சந்தசத்தாவே பருத்துக்கொள்ளும், வளிந்ததோர் வாதபித்தங் கோபித்தக்கால் வந்துபெருங் கல்லாய்நீர் வழியடைத்து, நளிந்ததோர் நாலுவிதக் கல்லடைப்பு நண்பான வரலாறு நாட்டக்கேளே. (க)

நாட்டமாய்க் கற்பழித்துக் கடமைவாங்கி நலிபண்ணிக் கூடாமல் வழக்குப்பேசி, கூட்டமாய்க் குருவுடைய கடமைதன்னைக் கொடாம லே கைக்கொண்ட கொடுமையோர்க்கும், வாட்டமாய் வரம்புதப்பித் திரிந்தபேர்க்கும் மாறுபா டாயெடுத்துப் பொருள்கடன்னைக், காட்டி யே கைக்கொண்டு கபடுபண்ணும் காலாந்தர் கல்லடைப்பிற் கலங்கு வாரே. (உ)

கலங்கினதோர் தண்ணீர்தான் குடித்தபேர்க்கும் கல்லெலும்பு ம யிர்மண்தான் கலந்தன்னத்தில், அலங்கினதோ ரன்னங்க ளருந்தலா லும் அழுகலொடு மூத்தபண்ட மருந்தலாலும், மலங்கினதோர் மாப் பண்ட மருந்தலாலும் மந்தத்தில் வாய்வான பதார்த்தந்தன்னை, துலங் கினதோ ருசிதன்னிற் சுவைத்தலாலும் சுருக்காய்க்கல் லடைப்புவந்து தோன்றுந்தானே. (ந)

தோன்றினதோர் நாவினிட நாமங்கேளாய் சுறுக்கான வாதத்தின் கல்லடைப்பு, பூன்றியதோர் பித்தத்தின் கல்லடைப்பு புரண்டதோர் சிலேட்டுமத்தின் கல்லடைப்பு, தீன்றியதோர் தொந்தமாங் கல்லடை ப்பு தேகத்தைப் பற்றியே சிறிதுகாலம், தான்றியே சலப்பையில் வந்திழிந்து சருவியே லிங்கத்திற் றரிக்குந்தானே. (ச)

வாதக்கல்லடைப்பு.

தரித்துநா பிக்குங்கீழ் சுருக்காய்குற்றிச் சலமலந்தான் வீழாமற் றம்பமாகி, வரித்துமே லிங்கத்தில் வலியுமாகி மருவியதோர் பொத்தி யெலாஞ் சுரந்துகட்டி, திரித்தியே கிடைகொடாப் புரட்டலாகித் தேம் பியே மூச்சுமாய் வயிறுஉப்பும், உரித்ததோர் சதைபோல உவர்ப்பு மாகும் ஓங்கியதோர் வாதக்கல் லடைப்புத்தானே. (ரு)

பித்தக்கல்லடைப்பு.

அடைப்பாகிச் சலந்தானு மருவலாகி அயங்காய்ச்சிச் சொருகி னாற் போலேகாணும், புடைப்பாகப் பொத்தியெங்கும் புழுக்கமாகிப் பூட்டுபோல் பிருவாகிப் புரட்டலாகும், மடைப்பாகி உதிரநிற மாய்க் கல்லாகி வந்திழிந்து லிங்கத்தில் மாட்டிக்கொள்ளும், குடைப்பாகிக் குற்றலாய்க் கூச்சலாகிக் குதட்டுமே பித்தக்கல் லடைப்புத்தானே. ()

சிலேட்டுமக்கல்லடைப்பு.

தானான தொப்புளிலே வில்லுபோலச் சலியாமற் சுரந்துமே சற் றேகுற்றும், ஏனான காலோடு கைகள்சந்து இடுப்புதான் குடைச்சலா யிசிவுகாணும், வேனான லிங்கத்தின் வேண்மைதன்னில் விறுவிறெ ன்றே கடுப்பாகி வியர்வையாகும், தேனான வெளுப்புக்கல் சிறுகல் லாகச் சிக்கலாய் வந்திறங்குஞ் சிலேட்டுமந்தானே. (எ)

தோந்தக்கல்லடைப்பு.

வந்திறங்கும் நீர்த்தாரை யடியிற்றானும் மாவருத்த முண்டாகி வலியுமாகி, நொந்திறங்கி நீர்தானு மருவிபாயும் நொய்தான சிறுமணல் போல் நொறுங்கிக்கல்லாஞ், சந்திறங்கி நீர்வழியில் வந்துவீழும் தாக்கான சிறங்கைக்கல் தினமொன்றுக்கு, துந்திறங்கித் தினந்தினமு மிழிந்துகொல்லும் தொந்தமாங் கல்லடைப்புச் சூட்டிடாயே. (அ)

சாத்தியாசாத்தியம்.

சூட்டிட்ட சாத்தியத்தைச் சொல்லக்கேளாய் சுளுக்காகும் வாதத்தின் கல்லடைப்பு, பூட்டிட்ட பித்தத்தின் கல்லடைப்புப் புகழான சிலேட்டுமத்தின் கல்லடைப்பு, மூட்டிட்ட இதுமூன்றும் சாத்தியமாகி முனியான மருந்துகளிற் செம்மையாகும், தோட்டிட்ட தொந்தமாங் கல்லடைப்புத் தொடுசுறவே கொல்லுமிது சூட்சந்தானே. (கூ)

சூட்சமெல்லாஞ் சிவன்சொல்ல ஆயிசொல்லத் துரியமா நந்தி சொல்லத் தன்வந்திரிசொல்ல, ஆட்சமெல்லா மசுவினியாந் தேவர்சொல்ல அதீதமா மசுவினியு மகத்தியர்க்குச்சொல்ல, பூட்சமெல்லாம் புலத்தியர்தான் றேரையற்குச்சொல்லப் புளகித்து யூகியென்ற முனியாம்யானே, தீட்சமெல்லாஞ் செகத்தோர்கள் பிழைக்கவென்று செப்பினேன் சகலருக்குந் தெரியத்தானே. (ய)

உடு-வது, கல்லடைப்புரோகநிதானம் முற்றிற்று. ஆகவிருத்தம்-எகூச.

—(*)—

## இருபத்தாறுவது,

# மூத்திரக்கிரிச்சரரோக நிதானம்.

தெரியவே கிரிச்சரத்தின் செயலைத்தானுஞ் செப்பவே நாலுவகைக் கிரிச்சமாகும், உரியவே வாதமூத் திரக்கிரிச்சம் உகப்பான பித்தமூத் திரக்கிரிச்சம், பரியவே சிலேட்டுமமூத் திரக்கிரிச்சம் பாங்கான மேகமூத் திரக்கிரிச்சம், நரியவே கிரிச்சரந்தா னுலதாகும் நாட்டமாய் உற்பத்தி நவிலக்கேளே. (க)

நவிலவே நாரியரைத் துரோகம்பண்ணி நடுவிலே கைவிட்டு நழுவினோர்க்கும், குவிலவே குழந்தைகள்தான் பசித்திருக்கக் கூடவே வைத்துண்ணுங் கொடுமையோர்க்கும், தவிலவே தவித்துவந்த பேர்களுக்குந் தாகந்தான் றவிர்க்காத சண்டாளர்க்கும், கவிலவே மூத்திரமாங் கிரிச்சம்வந்து கலக்குமென்று மாமுனிவர் கருதினாரே. (உ)

கருதியே மாப்பண்டங் கதித்துஉண்ணல் காலங்கள் மாறியே மிகப்பொசித்தல், பருதியே பகல்தனிலே ஸ்திரீசங்கித்தல் பகல்தனிலே பால்கொள்ளல் பகலுறங்கல்,நிருதியே நிசிதன்னிற் சயனஞ்செய்தல் நிந்தையாம் லாகிரிகள் நிரம்பவுண்ணல், வருதியே அக்கினியில் சஞ்சரிப்போர் மகத்தான கிரிச்சரத்தின் மருவுவாரே. (ங)

### வாதமூத்திரக்கிரிச்சரம்.

மருவவே மேகம்வந் தற்பவித்தல் வளர்நாபி தன்னிற்றன் மாம் சஞ்சிக்கி, துருவவே சுக்கிலத்தால் மாமிசமுற்றிச் சுழன்றுமே தம்பி த்து வாயுதன்னால், சிருவவே சிறுநீர்வீழ் குதற்றன்சிக்குந் தேகமெ ங்குந் துளைத்துமே கடுப்புமாகும், அருவவே தன்மாமிசங் கறுப்பாய் வீழும் அருக்குமே வாதத்தின் கிரிச்சந்தானே. (௪)

### பித்தமூத்திரக்கிரிச்சரம்.

தான்மூத்திர மஞ்சளித்து மிகச்சிவக்குந் தளர்ந்துமே கைகாலு மசதியாகும், பானருக்கிச் சிறுகலா யருவிபாயும் பாரமாங் குதமண்ட மிலிங்கந்தானும், கான்வாயு தான்மீறி வயிறுஉப்பும் களகளென்று இரைச்சலாய்க் கசகியேறும், வேன்காயு வாயுலர்ந்து மிரட்சியாகும் விடும்பித்த மூத்திரத்தின் விவரந்தானே. (௫)

### சிலேட்டுமகிரிச்சரம்.

விபரமாய் வற்றியண்டங் குதம்வலிக்கு மேனியுமோ வெளுப் பாகி மிகக்கண்பச்சை, திபரமாய்க் கிறுகிறுத்துத் தியக்கமாகுந் தேக மெல்லா மிகக்கடுப்புச் சொறிதலாகும், அபரமா யருக்கிநீர் எரிச்சலா கும் அடிக்கடிக்கு நீர்கசிந்து அலைச்சலாகும், நிபரமாய் லிங்கத்திற் கூச்சலுண்டாம் நீச்சான சிலேட்டுமத்தின் கிரிச்சந்தானே. (௬)

### மேகமூத்திரக்கிரிச்சரம்.

கிரிச்சமா யடிக்கடிக்கு வெள்ளைகாணுங் கிட்டுமே நீர்த்தாரை யடியிற்றானும், புரிச்சமாய்ப் புருவெச்சம் போலவீழும் பிடுங்குமே அடிவயிற்றிற் புழுக்களூர்ந்து, விரிச்சமாய் வெள்ளைதான் கவிச்சடிக் கும் விம்மும்போ துடலுச்சி மயிரைத்தூக்கும், குரிச்சமாங் குதமிலி ங்கம் வேக்காடுண்டாம் குமுறுமே மேகத்தின் கிரிச்சந்தானே. (௭)

### சாத்தியாசாத்தியம்.

மேகத்தின் கிரிச்சந்தான் பித்தக்கிரிச்சம் மிகவிரண்டுங் குணமாகி விரைந்துபோகும், தேகத்தி லிதூண்டுஞ் சாத்தியமாகிச் செயமான மருந்தினாற் றிரும்பலாகும், வாதத்தின் வாதமூத் திரக்கிரிச்சம் மருவு கின்ற சிலேட்டுமமூத் திரக்கிரிச்சம், பாதத்தி னிஃதிரண்டு மசாத்திய மாகும் பாடுபட்டுந் தீராது பரிந்துபாரே. (அ)

௨௬-வது, மூத்திரக்கிரிச்சரரோகநிதானம் முற்றிற்று. ஆகவிருத்தம்-௭௪௨.

## இருபத்தேழாவது,

# இருமல்ரோக நிதானம்.

பாரென்ற ஆறுசாஸ் திரத்தினுள்ளே பலிப்பான முதல்சாஸ்தி ரம் வயித்தியந்தான், ஆரென்ற வயித்தியந்தா னாயுர்வேதம் அடங்க லுமே யேழுலட்சங் கிரந்தமாகும், வாரென்ற வடமொழியை யெல் லாம்பார்த்து வகையெல்லாம் பொறுக்கியே வடிநூலாகத், தேனெ ன்ற முனிபாதஞ் சிரசில்வைத்துச் செப்பினேன் யூகியாம் முனியான் றானே. (௧)

முனியான இருமலது ஐந்துமாகும் முரணுமருந் திடுஇருமல் முழ க்கமாகக், கனியான மதுவிருமல் கஞ்சாவினிருமல் கனமான சுரவிரு மல் கதித்தெழுந்த, தினியான இரத்தமா யிருமலோடு செனிக்கின்ற இருமலது ஐந்துமாகும், அனியான ஐந்தினிட ஆண்மைதன்னை அதி னுடைய உற்பத்தி யறியக்கேளே. (உ)

அறியவே மனதிலொன்று வாக்கிலொன்றும் அசடாகப் பேசுகி ன்ற அழும்பனுர்க்கும், குறியவே தானியத்தைத் தான்குறைத்துக் கொடுப்பார்தன் னருகிருந்து குற்றஞ்சொல்லித், தறியவே தடுத்தோ ர்க்குந் தண்ணீர்ப்பந்தல் தனைக்கெடுத்தோர் பெரியோர்கள் தமைநிந்தி த்தோர், மறியவே வழக்கோரஞ் சொன்னபேர்க்கும் வந்துமே இரும லது மருவுந்தானே. (௩)

மருவுமே மனந்தன்னிற் கிலேசத்தோர்க்கும் மங்கையர்கள் கல வியினில் மாழ்கினோர்க்கும், பருவுமே கஞ்சாவைப் பருகினோர்க்கும் பாழான சாராயங் குடிக்கின்றோர்க்கும், நருவுமே நரர்கள்தன்னில் நடு ங்கினோர்க்கும் இராமாறு பட்டினியே நல்கினோர்க்கும், இருவுமே யெரியண்டை யிருக்கின்றோர்க்கும் இருமலென்ற வியாதிவந்து எய் துந்தானே. (௪)

மருந்தீடு இருமல்.

எய்துமே மருந்திடுரும வியம்பக்கேளாய் எழிலுடம்பு வற்றியே இரைப்புண்டாகும், அய்துமன்ன மரோசகமா யழற்றுந்தேகம் அடிக் கடிக்குப் பயமுமா யாலாபிக்கும், வைதுவறட் டிருமலாய் மயக்கமா கும் வாய்தானும் புலால்நாறும் வழவழக்கும், செய்துசிரத் தினில்நி ன்று மயக்கிவைக்கும் சீரணமா மருந்தீட்டின் செயலிதாமே. (௫)

கஞ்சா இருமல். (கற்பவிருமல்.)

செயலான கெஞ்சாவைக் குடிக்கின்றோர்க்குந் திரட்சியா யபின் மருந்து தின்றபேர்க்கும், கயமான லாகிரிக ளருந்தினோர்க்கும் கரும் பிச்சிற் சேர்ந்துமே கருகினூரல், உயலான உடம்பதுதான் மிகவேவ ற்றி உரோமத்தின் வேர்செத்து ஒளிவுகுன்றும், வயலான இரும லொடு மனமறுத்து மயங்குமே கற்பத்தி னிருமல்தானே. (௬)

மதுஇருமல்.

மயங்கியே உடம்பெங்குந் தினவுமாகும் மார்போடு நெஞ்சுலர்ந்து கண்டம்வற்றும், அயங்கியே அடிக்கடிக்கு இருமலாகும் அடிமூலம் நாபிமட்டும் வேர்த்தடுண்டாம், விளங்கியே யீரலெல்லாம் வெதும்ப லாகும் விரணமுண்டாய்ச் சிரசோடு திரட்சியாகும், சயங்கியே சாரா யங் கள்ளுதன்னால் தாங்குமே மதுவென்ற விருமற்றுனே. (௭)

### சுரஇருமல்.

ஆண்மையாய்ச் சுரமணுகி யங்கந்தன்னில் அநேகநாள் சென்ற க்கா லாக்கைதானும், காண்மையா யுடலம்வற்றிக் காங்கையாகி கனப் பாகிக் கனவிருமல் சுவாசமுண்டாய், வேண்மையாய் வெளுத்துமே கண்பச்சென்று மிக்கநாம் பெல்லாந்தான் மிகத்தளர்ந்து, தூண்மை யாய்த் தோல்திரைந்து துஞ்சலுண்டாம் சுரவிருமற் குணமென்றே சொல்லலாமே. (அ)

### இரத்தஇருமல்.

சொல்லவே யமர்க்களத்திற் சண்டைதன்னில் துடர்ந்துயுத்தம் பண்ணுகையிற் போர்க்களத்தில், வெல்லவே மிகரத்தங் கண்ணிற் கண்டு மிரட்சியாய்த் திகில்தன்னி லிருமல்காணும், கொல்லவே குகை தன்னிற் பந்தம்வைத்துக் கொளுத்தினற் போலவே கொடுந்திக்கா ணும், இல்லவே இருமலுக்கு ரத்தவாசம் எடுக்குமே யிரத்தத்தி னிரு மல்தானே. (கூ)

### சாத்தியா சாத்தியம்.

இருமலது ஐந்துக்கு ளசாத்தியந்தான் எளிதான மருந்தீடு இரும ல்தானும், மருமலது மதுஇருமல் சுரத்தினோடு மார்க்கமா மிதுமூன் றுஞ் சாத்தியமாகும், கருமலோடு கற்பமா மிருமலோடு கடிதான ரத் தத்தி னிருமல்தானும், அருமலது இதுரண்டு மசாத்தியமாகும் ஆயு ருவே தத்திலுள்ள ஆண்மைதானே. (ய)

உஎ-வது, இருமல்ரோகநிதானம் முற்றிற்று. ஆகவிருத்தம்-எரு௨.

---

## இருபத்தெட்டாவது,

# விப்புருதிரோக நிதானம்.

ஆண்மையாம் விப்புருதி எழதாகும் அதினுடைய நாமத்தை யறையக்கேளாய், கேண்மையாங் கெற்பவிப் புருதியோடு குவளைவிப் புருதியாம் பித்தவிப்புருதி, தாண்மையாஞ் சந்துவிப் புருதியாகும் தரித்தோடும் விப்புருதி சிலேட்டுமவிப்புருதி, வாண்மையாம் வாத விப் புருதியோடு வகையாக எழுவித வளப்பந்தானே. (க)

வளப்பமெல்லா முப்புறைப்பு மிகுதியாலும் வகைவகையாங் கிழ ங்குவகை அருந்தலாலும், தளப்பமெல்லாஞ் சதைதுன்னி ரத்தமீறித் தரித்துமா மிசங்கள்துன்னித் தாக்கலாலுய், களப்பமெல்லாங் காரசா ரங்கள்மிஞ்சிக் கணக்குமிஞ்சிப் பெண்ணோடே கருதலாலும், அளப்ப மெல்லா மாறினதோ ரன்னந்தன்னை அருந்தலால் விப்புருதி யணுகுந் தானே. (உ)

அணுகுமே யடைக்கலத்தைக் காட்டினோர்க்கும் ஆகாத அழிவு வழக் குரைத்தபேர்க்கும், துணுகுமே நெல்லதனைக் குறைத்தபேர்க் கும் நீரிலே அம்மணமாய் நிற்கின்றோர்க்கும், தணுகுமே தனக்குத் தான் மூத்தபெண்ணைத் தருக்கியே சம்போகஞ் செய்தபேர்க்கும், பணுகுமே பரமசிவ னடியார்தம்மைப் பழிக்கின்றோர் விப்புருதி படும் பாடாமே. (௩)

கெற்பவிப்புருதி.

பாடாக வயிறதுதான் பொருமிக்கொண்டு பக்கங்கள் கீழ்வயிறு புண்போல்நோகும், ஓடாகப் புளியிலைபோ லுலருமேனி உதிரந்தான் றிரண்டுகீழ் வயிற்றிற்கட்டுங், கேடாகக் கெற்பம்போ லுலவல்காணுங் கெட்டியாய் மலமிறுகிப் புழுக்கைபோலாம், பூடாகச் சிரசுதலை வலியு மாகும் புண்போலாங் கெற்பவிப் புருதிதானே. (௪)

குவளைவிப்புருதி.

தானென்ற இடுப்போடு முன்னந்தண்டு தனித்தஇரு புறக்குய் யம் விலாக்கள்நஞ்சு, கோனென்று நடுக்கியே குளிர்வெதுப்பும் குத் தலா யிருமியே கோழையாகும், ஊனென்று உதிரவலி தானுண்டாகி உக்கிரமாய்க் கொடிக்கொடியா யுதிரஞ்சியாம், கூனென்று வலித்துமே குறுகுமங்கம் குவளைவிப் புருதியிடக் கூர்மைதானே. (௫)

பித்தவிப்புருதி.

கூர்மையாய் இரத்தமாய் வாந்தியாகும் கொடுவெளுப்பா யுடம் பெங்குந் தினவுமாகும், நார்மையாய் நடுக்கல்சித்தப் பிரமையாகும் நண் ணரிய கொட்டாவி யருசியுண்டாம், தூர்மையாய்ச் சுரமோடு தாக மாகுஞ் சுயங்குருதி கண்டித்துக் கட்டியாகும், வார்மையாய் வயிறதுவு முளைவுமாகும் வகுத்தபித்த விப்புருதி வண்ணமதானே. (௬)

சந்துவிப்புருதி.

வண்மையாய்ப் புற்றுப்போல் வயிற்றுப்பக்கம் மகத்தான சங்க டமாய்த் திரண்டெழுந்து, கண்மையாய்க் கதித்துமே கண்டிப்பாகிக் காரமொடு சத்திரத்திற் கசகலாகும், திண்மையாய்ச் சடமெங்குஞ் செழும்பலாகுஞ் சிறிதுமே மார்படைப்புத் தியக்கமாகுந், தண்மை யாய் மேனியது சழுக்கமாகுஞ் சந்துவிப் புருதியிடச் சார்வுகாணே. ()

ஒடுவிப்புருதி.

சார்வாக வோடியே ரத்தஞ்சூழ்ந்து தங்கியே கட்டியாய்ச் சார்ந் தெழும்பும், தேர்வாகச் சடமெங்குந் திருக்லாகச் செழுமையாய்ச் சிவ ந்துமே வெளுப்புமாகும், ஆர்வாக வங்கங்கள் எலும்புக்குள்ளே அழ ன்றுமே விரணங்க ளாகக்காணும், ஊர்வாக வுடம்புள்ளும் பூர்தலாகும் உண்மையா யோடுவிப் புருதிதானே. (அ)

### சிலேட்டுமவிப்புருதி.

உண்மையாய் மார்புதனிற் ருனடைக்கும் ஊறியே வாய்நீறு மிகத் தித்திக்குந், துண்மையா யுடம்புமே சோருமீங்குஞ் சுளுவான வருசியொடு சுரமுமுண்டாம், வெண்மையா யுடம்பெங்கும் விஷமு மாகும் வெளியான மலந்தன்னிற் பச்சையாகும், பெண்மையா யுடல் கருகிப் பேதையாகும் பிறிவான சிலேட்டுமவிப் புருதிதானே. (௯)

### வாதவிப்புருதி.

சிலேட்டுமமாஞ் சதைதிரண்டு சிக்கித்துன்னித் துடுக்கமா யீரலி லே மிகப்பொரித்து, வாட்டுமமாம் வாய்கசக்கும் விக்கலுண்டாம் மரு வுசித்தப் பிரமையுமாம் வடிவெலானேம், வேட்டுமமாங் குடலுக்குட் புரட்டலாகும் மிகவிரத்தங் கொதித்தெழுந்தே மிடுக்குப்போகும், நாற்றமாம் நாவடியுந் தடிப்புகாணும் நளிர்வாத விப்புருதி நாடுங் காலே. (௰)

### சாத்தியா சாத்தியம்.

நாடுமே சாத்தியத்தை நவிலக்கேளாய் நலமான செற்பவிப் புரு தியோடு, கூடுமே குவளைவிப் புருதிதானுங் குணமான பித்தவிப் புரு தியொக்க, ஓடுமே ஓடுவிப் புருதியோடு உகந்தஇந் நான்குந்தா னசா த்தியமாகும், வாடுமே வாதவிப் புருதிசிலேட்டும மகாசந்து விப்பு ருதி அசாத்தியமாமே. (௧௧)

உஅ-வது, விப்புருதிரோகநிதானம் முற்றிற்று. ஆகவிருத்தம்-எ௬௩.

—(*)—

# இருபத்தொன்பதாவது,

# கரப்பான்ரோக நிதானம்.

ஆமென்ற காப்பான்தான் எழுவிதமாகும் அடங்காத வாதத்தின் காப்பானெடு, காமென்ற கண்டமாங் காப்பானுகுங் கடுகியதோர் வறட் சியாங் காப்பானெடு, தேமென்ற திமிர்வாதக் காப்பான்ருனும் சிரசி னிலே யெழுகபா லக்காப்பான், பேமென்ற பித்தமாங் காப்பானெடு பெரியசிலேட் டுமக்காப்பான் பெயர்தானேழே. (௧)

ஏழான காப்பானுற் பத்திகேளாய் ஏற்றமா மாமிசங்கள் புசிக்கை யாலும், சூழான கம்புதினை வரகுசாமைக் கொடிதான கிழங்குவகை யருந்தலாலும், பாழான பெண்மாயை தன்னிற்சிக்கிப் பாங்கான விர கத்தான் முயற்சியாலுந், தாழான பண்டங்கள் சமைத்துத்தின்னல் தாக்குமே காப்பான்றன் சாயல்தானே. (௨)

சாயலாய்த் தனக்குத்தான் மூத்தபெண்ணைத் தாவினோர் தாழ்ச் சியாஞ் சாதிதன்னில், காயலாய்க் கலந்துண்டோர் கலகஞ்செய்தோர் கற்புடைய மங்கையரைக் கருதினோர்கள், வாயலாய் வாழ்மரத்தை வெட்டினோர்கள் மருத்துவர்கள் வண்ணூர்நா விதர்கள்கூவிக், கூயலா ய்க் கொடாதோர்கள் குருநிந்தித்த கொடும்பாவி காப்பானிற் குறி கொள்வாரே. (௩)

வாதக்கரப்பான்.

கொள்ளவே உடம்பெல்லாம் வெதும்பாய்நொந்து குடைந்துமே மிகச்சுரந்து வீக்கமாகும், விள்ளவே தேகமெல்லாம் புண்போல் நொந்து வெடித்துமே புண்ணுகும் விரல்கள்சந்து, முள்ளவே முடங்கியே நரம்புதானும் மொழிகள்பக்க மிக்கஇட மிகவுலர்ந்து, மள்ளவே மேனியது வறண்டுகாணும் வாதமாங் கரப்பான்றன் வண்மைதானே. ()

*வண்மையா யுட்கார்ந்து எழும்பும்போது வருத்தமாய்க் கால்கைக ளிடுப்புச்சந்து, திண்மையாய்த் திமிர்ந்துமே சரடுகட்டும் செயலழிந்து வீங்கியே வெடித்துப்புண்ணுந், தண்மையாய்ச் சடமெங்கு மூதலாகுந் தண்ணீர்தான் மிகத்தவித்துத் தனிச்சூடுண்டாம், உண்மையாய் மேனியெங்கு முளைச்சலுண்டாம் உதறுமே திமிர்வாதக் கரப்பானுமே. (௫)

கண்டக்கரப்பான்.

தளிராகச் சிரமெங்கு மிகக்கனத்துத் தலைகாது மண்டையெல்லாந் தடித்துநோகும், நளிராக வருத்திவிக்கு நாத்தடிக்கும் நலமான உடம்புதனிற் சொறியுமாகுங், குளிராகக் குளுந்துமே மயிர்க்கூச்சாகும் கூப்பிட்டால் மிகப்பயக்குங் கூசுங்கண்தான், களிராக முட்போலக் கண்டந்தன்னில் கறகறக்குங் கண்டமாங் கரப்பானுமே. (௬)

வறட்கரப்பான்.

கண்டமாய் மிகவீங்குங் குற்றலுண்டாங் கனமாக உடம்பெங்கு மிகவேஊதுந், துண்டமா ரிடம்பதைத்துச் சொறிதலுண்டாம் சோருமே யெந்நேர மயக்கத்தாலே, வண்டகந்தா னில்லாம லுடம்புவறறும் மாறுபாடாய்ப்பிதற்றி மறுகும்வார்த்தை, பிண்டமாய்க் கிடந்துருண்டு புலாலேநாறும் பெருவறட்சிக் கரப்பான்றன் பேரிதாமே. (௭)

திமிர்வாதக்கரப்பான்.

போராகத் தானெழுந்து நடக்கும்போது பேராமற் காலயர்ந்து திமிர்த்துவீங்கி, வோராக உடம்பெங்கும் வெடித்துப்புண்ணும் வெதும்பியே சரீரமெங்கும் பொருமலாகும், தோராக உடம்பெங்குந் திரைந்துப்போகும் திமிருதான் துண்டுதுண்டாய்ச் சிதறிக்காணும், பாராகத் திமிர்வாதக் கரப்பானென்று பாரிலுள்ளோர் தாமிதனைப் பரிந்துகாண்க. (௮)

கபாலக்கரப்பான்.

காணவே காதெல்லாந் தினவுண்டாகுங் கண்தினவாங் கண்டந்தான் கறகறக்கும், பூணவே கண்ணீரும் பீளையுண்டாம் பேச்சுமந்த மூக்கதனில் நீரோபாயும், தோணவே சிரசுதனிற் சொறிதலுண்டாந் தும்மல்மிக வுண்டாகுந் துடிக்குநெற்றி, ஆணவே அண்ணாக்கி லழலுண்டாகும் அடங்காத கபாலகரப் பான்றானுமே. (௯)

* இச்செய்யுளிலும் பின்வரும் அ-வது செய்யுளிலும் திமிர்வாதக்கரப்பான் குணங் கூறுகிறதென் றுணர்க.

பித்தக்காப்பான்.

தானகக் கண்தூங்கி நடுவுஉந்தி தளர்ந்துமே உட்சுரந்து வெதுப் புண்டாகுந், தூனகக் கிறுகிறுக்கு முடலஞ்சோரும் சொரிந்துமே உடம்புதான் மஞ்சளிக்கும், வேனக வன்னத்தை இறங்கொட்டாது மிடுக்கான திபனமந் தித்துப்போகும், பேனக ஊருவது போலக்காணும் பித்தகாப் பான்குணத்தின் பெற்றியாமே. (௰)

சிலேட்டுமக்காப்பான்.

பெற்றியாய்ச் சரீரமது வெளிறிக்காணும் பேச்சுத்தான் கம்மலாய்த் தானிருக்கும், புத்தியாய் வார்த்தையது பொறுக்கிச் சொல்லும் பிரபலந்தான் மிகப்பேசு மூச்சுண்டாகும், எத்தியாய்ச் சகலரையு மே வல்கொள்ளும் ஈளையிரு மல்மூச்சுக் காதிரைச்சல், முத்தியாய் மோக்ஷவழி முறைமையாகும் முதிர்சிலேட்டும காப்பானின் மூர்க்கந் தானே. (௧௧)

சாத்தியாசாத்தியம்.

மூர்க்கமாம் சாத்தியத்தை மொழியக்கேளாய் மொழிகின்ற வாத காப் பான்றன்னோடு, ஊர்க்கமாம் பித்தகாப் பானுமாகும் உயர்கின்ற வறட்சியாங் கபாலக்காப்பான், தார்க்கமா யிதுநாலுஞ் சாத்தியமாகும் தளுக்கான திமிர்வாதக் காப்பான்கண்டம், தீர்க்கமாஞ் சிலேட்டுமகாப் பான்றன்னோடு செப்பியதோ ரிதுமூன்று மசாத்தியமாமே. (௧௨)

௨௯-வது, காப்பான்ரோகநிதானம் முற்றிற்று. ஆகவிருத்தம்-எ௪ரு.

# முப்பதாவது
# சர்த்திரோக நிதானம்.

ஆமென்ற சர்த்தியது ஐந்தேதென்னில் அடங்காத வசீர்ணசர்த்தி வாதசர்த்தி, போமென்ற பித்தசர்த்தி சிலேட்டுமசர்த்தி பெரிதான தொந்தசர்த்தி ஐந்துமாகும், ஏமென்ற சர்த்தியுமுற் பத்தியாகி எப்படித்தான் வருமென்றால் சொல்லக்கேளாய், வாமென்ற மாறுபா டான மங்கை மருந்தினால் இருமல்விளைந் தருசியாமே. (௧)

அஜீரணசர்த்தி.

அருசியாய் சர்த்தியா யசத்திரூபம் அணுகியே யதிகடத்தில் வாயுதானன், தெருசியாய்த் தின்னுகின்ற பதார்த்தந்தன்னைச் செரிக்கவே யொட்டாமல் மேற்கோள்செய்யும், தருசியாய்ச் சர்த்தியைந்தி லசீர்ணசர்த்தி தன்குணந்தான் றக்கநா பித்தானத்தில், முருசியாய்ச் சமானனென்ற வாயுமீறி முதுகிடையே மிகப்பாந்து உலாவுந்தானே.()

வாதசர்த்தி.

உலாவியே விபரீத பதார்த்தந்தன்னை உண்கையா லுயரத்தான் தள்ளிப்போடும், அலாவியே செரியாம லசீர்ணவாந்தி யாகியே சத்தித்து அமர்ந்துளங்கும், குலாவியே வாதசர்த்தி வகையேதென்னில் கூட்டமா மிதயதா னத்திற்பிராணன், விலாவியே வெறுக்கப்புசித்த விபரீதத்தான் விளைந்துமே வெளுப்போடு கறுப்புமாமே. (௩)

### பித்தசர்த்தி.

கறுப்புமாய்க் கடினமாய் வாந்தியாகுங் காசமா மிருமலொடு இளைப்புமாகுந், தொறுப்புமாய்ச் சுரவீனங் கம்மலாகுஞ் சுரசுரப்பாய் மேனியெங்குந் திடிப்புக்காணும், பொருப்பமாய் பித்தசர்த்தி யிலக்கணந் தான் பேரான உப்புறைத்து உறுதலாகும், வெறுப்புமாய் வேப்பெண்ணெய் நாற்றம்வாந்தி மிக்கநெஞ்சிற் புகைச்சலுமாய்ச் சர்த்தியாமே.()

### சிலேட்மேசர்த்தி.

சத்திதான் மஞ்சணிறம் போலிருக்கும் தண்ணீராம் வாந்தியது உப்புறைப்பு, சுத்திதான் சூடுண்டாங் கையுங்காலுந் துலக்கமா மேனியெங்கும் எரிவுமாகுஞ், சித்தியாஞ் சிலேட்டுமசர்த்தி யின்குணந்தான் திகழ்கின்ற இரைப்போடு குளிருமுண்டாங், குத்தித்தான் கோழையுண்டாங் குளிர்ச்சியாகுங் கொடிதான நாவினிற்றித் திப்புண்டாமே.()

### தொந்தசர்த்தி.

தித்திப்பாந் தொந்தசர்த்தி யின்குணந்தான் திடமாகும் மலமூத்திர மாவேகந்தான், வத்திப்பாஞ் சர்த்தியது சதைஇரத்தம் மாமிசம் போல் நிணம்போலுந் தானிருக்கும், குத்திப்பாஞ் சரீமமெங்குங் குடைச்சலுண்டாம் குளிர்ந்துமே நாவறளுஞ் சுரமுமுண்டாம், எத்திப்பாஞ் சரீரமது இளைப்புகாணும் இந்ததொந்த சர்த்திகுண மிசைந்திட்டோமே. (௬)

### சாத்தியாசாத்தியம்.

இசைந்ததோர் சாத்தியசர்த்தி மூன்றுமாகும் ஏகமா மசீர்ணசர்த்தி வாதசர்த்தி, பிசைந்ததோர் பித்தசர்த்தி மூன்றுஞ்சாத்தியம் பேரான வசாத்தியந்தான் சிலேட்டுமசர்த்தி, திசைந்ததோர் தொந்தசர்த்தி அசாத்தியமாகும் செப்பினேஞ் சர்த்தியிட குணங்களெல்லாம், அசைந்ததோ ரசாத்தியசாத் தியமிரண்டும் அறிந்துமே யவிழ்தங்கள் செய்திடாயே. (௭)

௩௦-வது, சர்த்திரோகநிதானம் முற்றிற்று. ஆகவிருத்தம்-௭அ௨.

---

## முப்பத்தோராவது,

# விக்கல்ரோக நிதானம்

செய்திட்ட விக்கலது நாலுமாகும் செப்பரிய பேரேதோ வென்று கேட்கில், வைத்திட்ட வாதவிக்கல் பித்தவிக்கல் மருவியதோர் சிலேட்டுமவிக்கல் தொந்தவிக்கல், கொய்திட்ட விக்கலிடக் குணத்தைக்கேளாய் குறிப்பான வாதத்தின் விக்கல்தானும், ஐதிட்ட வன்னஞ்சூ டருந்தலாலும் அதிகமாங் குளிர்தண்ணி லடுத்திடாயே. (௧)

### வாதவிக்கல்.

அடுத்திட்ட மனமகிழ்ச்சி மிகுதியாலும் அந்திசந்தி கனப்புகள் தான் காய்தலாலும், படுத்திட்டு கைகால்கள் பிடித்தலாலும் பதறியே தண்ணீரில் மூழ்கலாலும், விடுத்திட்ட கடுவோட்ட மோடலாலும் விசைந்துமே நாகனென்ற வாயுதானும், கடுத்திட்டு அதிகரித்து விக்கலுண்டாம் களராகி மார்கனத்துக் கதிப்பாங்காணே. (உ)

### பித்தவிக்கல்.

கதிப்பித்துக் கண்ணிரண்டு மிகத்துடிக்கும் கனமான மிகுதுவர்ப்பு வாயிலுண்டாம், மதிப்புற்று வாதவிக்கல் தானுமாகும் மதித்ததோர் பித்தவிக்கல் மார்க்கங்கேளாய், விதிப்புற்று விக்கலுண்டாமே ஙிகன்றும் மிகவுண்டாங் கொட்டாவி வெதும்பலுண்டாம், நதிப்புற்று நாடிமிகப் படபடக்கும் நல்லறிவு குன்றிவிடுங் கோபமாமே. (ங)

### சிலேட்டுமவிக்கல்.

கோபமாஞ் சிலேட்டுமவிக்கல் குறிப்புகேளாய் கோழையொடு விக்கலது தானுமுண்டாம், சோபமா முகமெங்கும் வெளிறிக்காணும் துடிப்புண்டாங் தேகமெங்குந் திரைந்துகாணும், சோபமாந் தொந்தவிக்கல் குணத்தைக்கேளாய் தோளோடு தலைகறுத்து சோரவாங்கும், ஆபமாந் தொப்புளொடு மிகக்குலுங்கி அடிநாபி தனில்நின்று விக்கும்பாரே. (ச)

### தொந்தவிக்கல், சாத்தியாசாத்தியம்.

பாருமே சங்தோடு தான்குலுங்கப் பதறியே அடுக்கடுக்காய் விக்கும்பாரு, வாருமே வாதவிக்கல் பித்தவிக்கல் மாளவுந்தா னெட்டாது மருந்திற்றீரும், தீருமே சிலேட்டுமவிக்கல் சீவன்றன்னைச் சிறிதுநாள் வயிற்றிற்றுன் சீரணிக்கும், ஊருமே தொந்தவிக்க லுடனேகொல்லும் உயர்கின்ற தொந்தவிக்கல் குணமிதாமே. (ரு)

கூக-வது, விக்கல்ரோகநிதானம் முற்றிற்று. ஆகவிருத்தம்.எஅஎ.

---

## முப்பத்திரண்டாவது,

# பவுத்திரரோக நிதானம்.

தானென்ற பவுத்திரந்தா னெட்டதாகும் தடிப்பான ஆசனமாம் பவுத்திரந்தான், கோனென்ற கொடிபவுத்திரம் பக்கபவுத்திரம் குருத்தான மூலத்தின் பவுத்திரந்தான், பேனென்ற மேகமாம் பவுத்திரந்தான் மிடுக்கான கிரந்தியென்ற பவுத்திரமாகும், ஆனென்ற வாசனத்தின் கண்டமாலை அடுக்கான சரக்கண்ட மாலைதானே. (க)

மாலைதா னுற்பவித்த வாறுகேளாய் மகத்தான வாதினத்தைக் குடிகெடுத்தும், ஆலையா மறுசுவையாங் கறிபருந்தி அழகான மாதினைத் தான் கற்பழித்தும், பாலையாய் மதித்துடல முடல்துளிர்த்த பாதகனைப் பரிந்துநீ ரிரசமாக்கி, ஏலையா யெறும்புசக் குணவாயிந்து இருக்கவே சிவனமைத்த படிதான்காணே. (௨)

சிவனுடைய அருள்தனையே மறந்துநெஞ்சில் திருடியே வஞ்சித்து அபகரித்து, அவனுடைய பொருள்போலே அடக்கம்பண்ணி அனுதினமுந் தம்முடைமைப் போல்சிந்தித்து, பவனுடைய பொல்லாதார் பவுத்திரத்தில் பாடுபட்டுப் பொருளெல்லாம் பாழாய்ப்போகும், தன்னுடைய விதியென்று நொந்துநொந்து விழற்கிரைத்த நீர்போன்று மெலிகுவாரே. (௩)

ஆசனபவுத்திரம்.

மெலிந்துதான் உடம்பெங்குந் தினவுண்டாகும் மிகுந்தசுரந் தான் கண்டு மாறிப்போகும், நலிந்துமே ஆசனத்திற் குற்றலுண்டாம் நடுவெங்கு மிகக்கடுக்கும் நோக்காடுண்டாம், வலிந்துமே கட்டியாய்த் தானிருக்கும் மயக்கமொடு மலந்தன்னிற் செந்நீர்பாயும், குலிந்துமே சீயோடு ரத்தமுண்டாம் குணங்கெட்ட ஆசனபவுத் திரமதாமே. (௪)

கோடிபவுத்திரம்.

என்றதோ ராசனத்திற் சடையைப்போலே இருந்துமே வீங்கியே அடிகனத்து, பன்றதோர் பழுத்துமே கண்கண்ணுகப் பருத்தியினிற் கொட்டைபோற் புண்முகத்தில், வின்றதோர் மேனியெங்கு மிக வெளுக்கும் விரிந்தவிட மிகநாறுங் கொடிநரம்பில், அன்றதோ ரழுக விட்டுக் கண்தான்விட்டு ஆகாத மலசலமுங் காணுந்தானே. (௫)

பக்கபவுத்திரம்.

காணுமே கொடிபவுத்திரந் தன்குணந்தான் கறுத்தபக்கப் பவுத்திரத்தைக் கண்டுகேளாய், வேணுமே விரைநடுவில் நரம்புபற்றி மிகுத்தவலப் பக்கமிடப் பக்கந்தன்னில், தோணுமே கண்டமாய்க் கதித்து வீங்கித் துடித்துமே பழுத்துடைந்து செந்நீர்விழும், நீணுமே நீர்வறண்டு தெரித்துப்போகும் நிச்சயமா மூத்திரமும் விழ்குந்தானே. (௬)

மூலபவுத்திரம்.

வீழ்மூல பவுத்திரத்தை விளம்பக்கேளாய் விரிவிரித்துக் குதங்குய்யங் கடுப்புகாணும், தாழ்கின்ற நரம்பெல்லாம் புடைத்துவிம்மி தனிக்கருணை முளைபோன்று செந்நீர்விழும், காழ்கின்ற நீர்வறண்டு தானெல்லாந்தான் கட்டியே மிகஉடைந்து நீருங்காணும், ஆழ்கின்ற வடிகண்டு முளையுங்காணும் ஆகாத மூலபவுத் திரமுமாமே. (௭)

கிரந்திபவுத்திரம்.

பவுத்திரத்தில் மிகநொந்து கடுப்புண்டாகிப் பாங்காகக்கட்டியே பழுத்துடைந்து, பவுத்திரத்திற் கொடிசுரந்து புண்ணுமாகிக் கழுத்தான வாண்குறியில் விரணமுண்டாய், சுவுத்திரத்தில் மேனிதுற் கந்தமுண்டாய் துளித்துளியாய் நீர்தானுஞ் சுருக்கவீழும்,மெவுத்திரத்திற றண்டடியில் வீக்கங்காணும் வீழ்கிரந்தி பவுத்திரத்தின் மேன்மைதானே. ()

மேகபவுத்திரம்.

மேன்மையா மேகத்தின் பவுத்திரந்தான் மீறிவிழு நீர்தானும் விதைபிற்கட்டும், பான்மையாய்ப் பழுத்துடைந்து சீயோகாணும் பனித்தண்ணீர் போலவே பறந்துநிற்கும், வேன்மையாஞ் சுரமோடு குளிர்தாபிக்கும் மெய்மறக்கு மசனமிகச் செல்லாதாகும், கான்மையாங் கைகால்கண் ணெரிவுமாகுங் கனத்துடம்பெல் லாமிளைத்து வலியுமாமே.()

ஆசனக்கண்டமாலை.

வலியாகு மாசனத்தின் கண்டமாலை வலிக்குமே அம்புபோல் குற்றல்காணும், நலியாகுங் கண்டுகண் டாகக்கண்டு நமன்போல பயமுண்டாஞ் சுரமுமாகும், புலியாகுஞ் சல்லடைக்கண் போலேயாகும் பேரான மலசலமும் புண்ணிற்காணும், சொலியாகுந் தினவெடுத்து செந்நீர்பாயும் சொரிந்தவுட னெரிவுமெத்த திறமாய்க்காணே. (ய)

சரக்கண்டமாலை.

காணவே சரக்கண்ட மாலைதானும் கண்டுதான் கருணைமுளை போலவாகும், வாணவே வழியடைந்து சுரந்துவீங்கி வருத்தமாய் வெடித்துமே ரத்தஞ்சீயாம், பூணவே சரமதுதான் தொடுத்தாற்போலும் புற்றுக்கண் போற்பொருமி வீக்கமுண்டாம், ஆணவே யடுக்கடுக்கா யடைபோல்வீங்கி அழுகலாய் நாற்றமாய் வீசுந்தானே. (கக)

சாத்தியாசாத்தியம்.

வீசுகின்ற சாத்தியத்தைச் சொல்லக்கேள்ாய் மிகுந்தவா சனப்பவுத்திரம் பக்கப்பவுத்திரம், மூசுமூ லப்பவுத்திர மேகப்பவுத்திரம் முடுக்கான கிரந்தியென்ற பவுத்திரந்தான், தாசுகின்ற வைந்துதான் சாத்தியமாகும் சரக்கண்ட மாலையொடு கொடிபவுத்திரம், ஆசுகின்ற வாசனத்தின் கண்டமாலை அசாத்தியந்தா னிதுமூன்று மறிந்திடாயே. (கஉ)

அறிந்திடவே சதாசிவன்றன் தேவிக்குச்சொல்ல அகமுவந்து தேவியுநந் திக்குச்சொல்ல, செறிந்திடவே நந்திதன்வந் திரிக்குச்சொல்ல சொல்லரிய தன்வந்திரிஅசு வினிக்குச்சொல்ல, தெறிந்திடவே அசுவினிதான் அகஸ்தியர்க்குச்சொல்ல தேர்ந்தவர்தாம் புலஸ்தியமா முனிக்குச்சொல்ல, செறிந்திடவே புலஸ்தியர்தாம் தேரையர்க்குச்சொல்ல தேரையர்தான் சொன்னபடி தெரிந்திட்டானே. (கங)

நஉ-வது, பவுத்திரரோகநிதானம் முற்றிற்று. ஆகவிருத்தம்-அoo.

---

யூகிமாமுனிவர் வைத்தியசிந்தாமணி—அஎ, முற்றிற்று.

உ

சிவமயம்.

தேரைய மகாமுனிவர் மாணாக்கராகிய

# யூகிமாமுனிவர்

திருவாய்மலர்ந்தருளிய

# வைத்தியசிந்தாமணி-அ௱,

## ரோகவருக்க அகராதி.

| ரோகங்களின் பெயர்கள். | பக்கம். |
|---|---|

ரோகவருக்க அகராதி-முற்றியது.

## பிரசித்தம்.

சர்வஜீவதயாபரமூர்த்தியாகிய சிவபெருமான் ஆன்மகோடிகளிடத்துவைத்த பெருங்கருணையால் ஆயுர்வேதத்தைப் பராசத்திக்கனுக்கிரகஞ் செய்தருளினர். அப்பராசத்தி, திருநந்திதேவருக் கருளிச்செய்ய அவர், தேவருக்கும், முனிவர்கட்கும், சித்தப்புருஷர்கட்கும், உபதேசித்தார். அவ்வழியாக உபதேசம் பெற்றவர்களுள் ஒருவராகிய **யூகிமாமுனி** என்பவர் வடமொழிநூற்களை ஆராய்ந்து சகல ரோகங்களையும் அறிவிக்கும் கண்மணிபோன்ற இந்நூலைத் தமிழ்ப் பாஷையிற் செய்தனர். இதைப் பலரும் அச்சியற்றியதில் பலவாறுகச் சிதைந் திருந்தமையால் கற்கப்புகுவோர் முதலிய யாவருக்கும் பயன்படுமாறு **ஆயுள்வேதபண்டிதர்களால்** அம்மிகைகளைக் களைந்து அச்சியற்றிய **ஷை யூகிமுனி வைத்தியசிந்தாமணி-அஙா.** கிரயம் ரூபா. 0-12-0.

இனி உடனே பதிப்பிக்கப்படும் புத்தகங்கள்.

வைத்திய சதுரகராதி—ஆத்திசூடிக்கு காண்டிகையுரை—வெற்றிவேற்கை யென்னு நறுந்தொகைக்கு காண்டிகையுரை—சைவசமயவிரதாதி விளக்கக் கொத்து. அச்சிட்டுத் தயாராயிருக்கும் புத்தகம்.

**தட்சணமூர்த்திசுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய மெய்ஞ்ஞானம், திருமந்திரம் ௩௰௱.** கிளேஸ் புல் காலிக்கோ பைண்டு விலை ரூபா. 1-4-0.

இங்ஙனம்: **ஸ்ரீ தி. இராஜு முதலியார்,**
2-10 வது நெ. தொட்டிக்கலை குமரப்ப முதலியார் தெரு,
சூளை, சென்னை.